# YAMAGATHAKAN

OR

# MAYA CHITTAN

A JOCULAR COMIC STORY

BY

M. N. MUTHUKUMARASAMY PAVALAR

PUBLISHER :

T. RAJAGOPAL MUDALIAR

BOOKSELLER

259, Mint Street, Madras

 [Price As. 8



சொ. கரு. சொக்கலிங்கம்

உ

முருகக்கடவுள் துணை

# எமகாதகன்

அல்லது

# மாயாசித்தன்

சொ. கரு.

நெல்லிமாநகர்

M. N. முத்துக்குமாரஸ்வாமி பாவலர்

இயற்றியது





பிரசுரகர்த்தர் :

T. இராஜகோபால் முதலியார்

259, தங்கசாலை தெரு,

சென்னை



[விலை அணு 8

மிஸ்டர் திண்ணைத்தூங்கி தடிராமன் கதை

விலை அணா 6.

தி. இராஜகோபால் முதலியார்,
259, தங்கசாலை தெரு,
மதராஸ்.

# முகவுரை

---

அலைகடல் சூழ் இவ்வவனியின் கண் எடுத்தற்கரிதாகிய மானிடப் பிறவியில் ஈவு, இரக்கம், தயை, தாட்சண்யம், நற்குணம், தேசாபிமானம், ஏழையர்பால் அன்பு, இவைகள் ஒரு மனிதன் அடையப்பெற்றிருந்தால் அவனே மனித வர்க்கத்தில் உயர்ந்தவனும், உத்தமனும், என்று எண்ணுவதோடு பூர்வகாலத்தில் புண்ணியத்தலைவனுயு மிருந்திருப்பான்.

உலகில் சிலருக்கு ஏராளமான செல்வமிருக்கும். ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு செல்வமிருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு உலோபகுணம் நிறைந்திருக்கும். கைப்பொருளொன்று மில்லாமலிருப்போர் சிலர், ஏழையர்கள் துன்பத்தைக் கண்டு ஏங்குவார். எவ்விதமேனும் ஏழை மக்கள் துன்பந்தவிர்க்க துணிபுகொள்வார். அதற்கொப்ப இக்கதாநாயகனுன எமகாதகன், ஏழைகளுக் குதவிசெய்தல் பொருட்டு, செல்வர்களிடமிருந்து செல்வம் பெற எண்ணங்கொண்டான். நல்வழியில் பரோபகாரத்தின் பொருட்டு பொருள் கேட்டிடின் ஈயார் என உறுதிகொண்டு, செல்வவந்தர்களிடமிருந்து பொருள் பெற தனக்குவரும் ஆபத்தையும் கருதாது, வியப்பும் ஆச்சர்யமுமான சில தந்திரவழிகளால் பொருளைப் பெற்று ஏழைமக்கட்குதவி செய்யும் இக்கதையை வாசித்தால் மனம் சந்தோஷப்படுவதோடு அறிவிற்காதாரமே என ஒப்புக்கொள்வார்.

இதைப் போன்றதோர் புத்தகத்தை வெளியிட வேணு மென்ற பேரவா நெடுநாள் எனக்கிருந்ததற்கொப்ப, பல அரும் பெரும் புத்தகங்களைப் பிரசுரித்து தமிழ் நாட்டிற்கு நல்லுதவிபுரிந்துவருபவரும், கற்றோர்க்குப்பொருளும், அன் பும், ஆதரவும், அகமகிழ அளித்து ஆனந்த முறச்செய்பவ ரும், சற்குண சம்பன்னருமான ஸ்ரீமான் தி-இராஜகோபால் முதலியாரவர்கள், இப் புத்தகத்தை வெளியிட்டுதவிய நன்றியை என்றும் நானும் மறக்காதிருப்பதோடு, அவர் சுகமுடன் நீண்ட ஆயுளோடு வாழுமாறு இறைவனை வேண்டுகிறேன்.

இப்புத்தகத்தை பிழையற திருத்தி அச்சடித்து உல கிற்கு பேருதவி புரிந்த பி. ஆர். ராமய்யர் கம்பெனியா ருக்கு, எனது மனமார்ந்த நமஸ்காரத்தைச் செலுத்த கடமைப்பட்டுள்ளேன்.

வாசகநண்பர்கள் குற்றம் களைந்து, குணத்தைக் கைக் கொண்டு இப்புத்தகத்திற் காதவராவளிக்க வேண்டுகிறேன்.

12-5-1925.
சென்னை

M. N. M.

# பொருள் அடக்கம்

# கணவனின் கடமை

அல்லது

# பெண்களின் நிஸமை

எஸ். எஸ். அருணகிரிநாதர்

எழுதினது

இது ஒவ்வொரு வீட்டுப் புருஷனும் மனைவியும் கட்டாயம் படித்துத் தெரிந்துக் கொள்ள வேண்டிய நூல்.

வேறு எவ்வளவோ புஸ்தகங்கள் வெளி வந்திருந்த போதிலும் இந்த நூலில் உள்ளது போல் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய சங்கதிகள் இதுவரையில் வெளிவரவில்லை.

விலை அணா 4.

தி. இராஜகோபால் முதலியார்,

259, தங்கசாலை தெரு,

மதராஸ்.

உ

வெற்றிவேலன் துணை

# எமகாதகன்

அல்லது

# மாயாசித்தன்



## அத்தியாயம்—1

### பழியோரிடம் பாவமோரிடம்

பற்பல வளம் மலிந்ததும், தைரியலக்ஷ்மியும் தனலக்ஷ்மியும் தவிழ்ந்து விளையாடும் பாக்கியத்தைப் பெற்றதும், வியாபாரம் மிகுதியா யுள்ளதும், தாங்கள் அதிக செல்வத்துக் கதிபதியானவர் என்று விளக்குதற் கடையாளமாக, தங்களது மாடியினுச்சியில் கலசக்கொடி நாட்டியிருக்கும் பல தனிகர்களை யுடையதும், இவ்விந்திய தேசம் முற்றிலும் காண்முடியாத அவ்வளவு ஒழுங்காக வீதிகள் அமைக்கப் பெற் றிருப்பதும், தென்னிந்தியா ரெயில்பாதையின் ஒரு கிளைபாகம் முற்றுப் பெற்றிருப்பதும், கிழக்குத் திசையில் சமுத்திரத்தை அழகாய் உடைத்தானதும், பிரஞ்சு அரசாங்கத்திற்கு முக்கிய பட்டணமுமாகிய புதுவை என்னும் பட்டணம் வாசக நண்பர்களுக்கு அனேகமாகத் தெரிந்திருக்கலாம்.

அப் புதுவையை, புதுச்சேரி என வழங்குதலுமுண்டு. அந்நகரில், வேளாளத் தெருவில் இருக்கும் நடராஜப் பிள்ளை என்பவர், தான் மணந்த அருமை மனைவியான மகலக்ஷ்மி என்னும் மாதுடன் இல்லறத்தை யாதொரு குறைவின்றி செவ்வனே நடத்திவந்தார். அவ்வூரில் இவர் யாவராலும் நன்கு மதிக்கப்பெற்றவர். ஏராளமான செல்வத்தை யடைந்தவ ரல்லராயினும் சுமாரான பணக்காரரே. அரசாங்கத்திலும் ஓர் உயர்ந்த பதவியைப் பெற்றவர். மணமாகி ஐந்து வருடமாகியும் புத்திரப்பேறு இல்லாதது இத்தம்பதிகளுக்கு ஓயாக்கவலையாக இருந்தது. மகலக்ஷ்மி அம்மாள் பதிபக்தியில் சிறந்திருந்ததோடு, தெய்வ வணக்கத்திலும், விரதநாட்களை முறைப்படி அனுஷ்டிப்பதிலும், தவரு திருந்தாள். பிள்ளை அவர்களும் தனது மனைவியின்மீது அன்பும், தெய்வபக்தியும், அடியார்கள் உபசரிப்பும் அதிகமுடைத்தாயிருந்தார். மகலக்ஷ்மி தனக்கு புத்திரனுதிக்கும்படி, வெள்ளிக்கிழமைதோறும் மகாலக்ஷ்மி விரதமிருந்து, சப்பளங்கோல்போட் டுட்கார்ந்து இருகரத்தையும் முதுகில் குறுக்காக கொணர்ந்து இருபாத விரலையும் பிடித்துக் கொண்டு கையால் தொடாமல் வாயாலேயே பகலன்னத்தை மாத்திரம் உண்டு தவமிருந்தாள். இவர்களின் சற்குணத்திற்கு ஆண்டவனிரங்கி, கடைக்கண் நோக்கியருளியதால், மகலக்ஷ்மி அம்மாள் கருவுற்று, ஐயிரண்டு திங்கள் சென்று, ஓர் அழகிய ஆண்குழவியை ஈன்றெடுத்தாள். சதிபதி இருவர்களின் சந்தோஷத்தை அளவிடுதற் கரிதாக இருந்தது. தங்களது செல்வக் குழந்தையை, ஊணாலும், ஆபாணத்தாலும் மகிழ்விக்கச்செய்து, அதன் மகிழ்வைக்கண்டும், மழலைச் சொல்லைக் கேட்டும், பேரின்பம் பெற்றவர்கள்போல் அக மகிழ்வடைந்திருந்தனர். தங்களுக்குப் புதல்வன் மிக்க தவம் செய்து உற்பவித்தா னுகையால் அவனுக்கு தவமணி எனப்

பெயர் சூட்டினர். குமாரனும் செழுமையாக வளர்ந்துவந்தான். இப்பாலகனை கண்ட கல்மனத்தினராயினும் சற்று நின்று, தொட்டு உச்சிமோந்து, மனமகிழ்வடையும் அவ்வளவு பேரழகுவாய்ந்தவனு யிருந்தான். "விளையும்பயிர் முளையிலே தெரியும்" என்றபடி சிறுபொழுதே அதிக சாமர்த்தியமான பேச்சுகளைப் பேசுவதும், யாராவது ஒருவர் ஒரு காரியம் செய்யின், தானும் அதுபோலவே சிறிதும் தவறாது செய்து காட்டுவதும், புதுமையான வார்த்தைகளைப் பேசுவதையும், அவனது கூர்மையான கண்களையும் கண்டோர், 'அப்பா, இப்பிள்ளை என்ன தெய்வப்பிறப்பாயிருக்கிறதே ; இக்குழந்தை நெடுநாள் பூமியில் தங்கியிருப்பது அரிது; கடவுள் இதற்கு வயசைக்கொடுத்து வைத்திருக்கவேணும்' என்பார்கள். தாய் தகப்பனைப் பார்த்து சிலர், இக்குழந்தையைப் பெற்ற நீங்கள் அடைந்த புண்ணியமே புண்ணியம். பல உதவியற்ற பிள்ளையைப் பெறுவதைக் காட்டிலும், இப்பேர்ப்பட்ட புத்தியையும், அழகையும் உடைய ஒருபிள்ளை யிருத்தலே போதும். உங்கள் பாக்கியமே பாக்கியம், என வாய்விட்டு வாழ்த்திச் சென்றனர்.

சிறுவனுக்கு வயது நான்கானதும், அவ்வூரில் நிறைந்திருக்கப்பட்ட தெருப் பள்ளிக்கூடங்களில் புராதன காலம் தொட்டு இருந்த ஓர் தெருப்பள்ளிக்கூடத்தில் படிக்க வைத்தனர். பின் சிலநாள் சென்று ஆங்கிலேய கலாசாலையில் படிக்க வைத்தனர். தவமணி தினம் காலையில் எழுந்து, பல் துலக்கி, ஒருமணிநேரம் முதலாவதாக தனது முந்தியநாள் பாடங்களைப் படித்து, பிறகு அன்று கற்கவேண்டிய பாடங்களைப் படித்தும், எழுத்து வேலைகளை எழுதி முடித்தான பிற்பாடு ஸ்னானம் செய்து, விநாயகபூசை செய்து, போஜனமுண்டு, கல்விச்சாலைக்குச் செல்வான். நமது தவமணி, தினந்

தவறாது குறிப்பிட்ட நேரத்திற்கு ஐந்துநிமிஷம் முன்னாடியே தனது வகுப்பில் ஆஜராகியிருப்பான். தன் புத்தகங்களை அழுக்குப் படியாமலும், கிழியாமலும், வைத்திருப்பான். ஒருவனுக்கு கல்வி வளர்வதற் கடையாளம், தினம் காலந் தவறாது, பள்ளிக் கேகுவதும் புஸ்தகங்களை ஒழுங்காக வைத் திருப்பதும் தான். அதனால்தான் புத்தகம் படிப்பவர்களைப் பார்த்துச் சொல்லுமாம், "நீ எவ்வளவு மதிப்பாய் என்னை வைத்திருக்கின்றாயோ, அவ்வளவு மதிப்பு உலகத்தில் நீ பெற நான் செய்வேன்" என்னுமாம். தவமணி தனது தாய்ப் பாஷையாகிய தமிழ்ப் பாஷைமேல் அதிக ஆவல் வைத்திருந்தான். கல்விச்சாலையில் "தமிழ்ப்பாஷை படிக்கும் மணி நேரமென்றால் (Tamil class) என்றால் பிள்ளைகளுக்கு வெகு அலட்சியம். உபாத்தியாயரிடமும் மதிப்பென்பது கிடையாது. காரணம் தமிழ்ப் பண்டிதர்களாகிய உபாத்தி யாயர்கள், பொறுமையைப் பூஷணமாக கொண்டிருப்பதால் தான். மற்ற பாஷை உபாத்தியாயர்களைப்போல் வசைச் சொல்லும் பிரம்படியும் சமர்ப்பித்தாலன்றோ, பிள்ளைகள் அடங்கி இருப்பார்கள். நமது தவமணியோ, எல்லா உபாத்தி யாயர்களைக் காட்டிலும் தமிழ் உபாத்தியாயர்களிடத்தில் பக்தியும், தமிழ்ப் பாஷையிடத்து பேராவாவும் வைத்திருந் தான். ஆகையால் தமிழ்ப் பாஷையை மற்றெல்லா பாஷை யைவிட அதிகம் கற்றுணர்ந்தான்.

நமது தவமணி தனது பாடசாலையில் பாட நேரங்களில் பாடத்தை மிக்க கூர்மையாய் கவனித்து வருவான். அநாவசியமான கெக்கெலிப்பும் சிரிப்பும் செய்யமாட்டான். வீதியில் விளையாடமாட்டான். கல்விச்சாலையிலிருந்து வீட்டுக்கு வரும்பொழுதும் போகும்பொழுதும் கீழ்க்குனிந்த வண்ணமே மிகுந்த ஆலோசனையோடு செல்வான். கல்வியில் அதிக ஊக்கம், ஏழையரிடம் அன்பு, கடவுள் பக்தி, தந்திரப்

பேச்சு முதலியவைகளை முக்கிய குணங்களாக அவன் அமை யப் பெற்றிருந்தான். இது நிற்க:

ஒருநாள் தமிழ்ப்பாடம் நடக்கும்பொழுது பிள்ளை களுக்குள் கலகமும் சண்டை சச்சரவும், பாடக்குறைவும், இறைச்சலும் அந்த கிளாஸில் (வகுப்பில்) அதிகமிருப்பது கண்டு, அப்பள்ளிக்கூட தலைமை உபாத்தியாயர் (Head master) தமிழ் உபாத்தியாயராகிய இராஜகோபால் பிள்ளை யைப் பார்த்து, நீர் உமது மணிநேரத்தில் பிள்ளைகளை அடக்கி யாள வகை தெரியவில்லை. இறைச்சலும் கலகங்களும் அதிக மாக இருக்கின்றன. பிள்ளைகளை அடக்கி ஆள வகை தெரி யாதவர்கள் உபாத்திமைத் தொழிலுக்கு அருகரல்ல. ஆகை யால் மறுதடவை உமது கிளாஸில் (வகுப்பில்) ஏதாவது குற்றமேற்படின், உம்மை வேலையிலிருந்து நீக்கி விடுவேன் என்று கடுகடுப்புடன் சொன்னார். தமிழுபாத்தியாயர் மனக் கவலையுடன் தனது வகுப்பிற்கு வந்துட்கார்ந்தார். பிள்ளைகள் உபாத்தியாயர் மௌனமா யிருப்பதைக் கண்ட தும் தங்களது துஷ்டத்தனத்தைக் கொஞ்சம் அதிகப்படுத் தினர். தவமணி மாத்திரம், தலைமை உபாத்தியாயர் தமி ழுபாத்தியாயரை அழுத்தமாக கூப்பிட்டதும், உரத்த சத்தமாய் ஏதோ அவருக்கு ஆக்யாபித்ததும் அவர் மனக்கவலையில் அழுந்திருப்பதையும் கண்டு, தலைமை உபாத் தியாயர் அவரை ஏதோ கண்டித்திருக்கிறார் என யூகித்து, அவருக்காக அதிக பச்சாதாபப்பட்டு அச்சங்கதி யாதா யிருக்கும் என அறிய ஆவலுள்ளவனா யிருந்தான். சற்று நேரம்சென்று, பொறுமைக் குன்றாகிய தமிழுபாத்தியாயர் ஆசனம்விட் டெழுந்து, பிள்ளைகளே! ஏனிப்படி வீண் இறைச்சல் செய்கிறீர்கள். தலைமை உபாத்தியாயர் என்மீது கோபிக்கிறார். தயவுசெய்து, இறையாமலிருங்கள். மற் றைய மணிநேரங்களைவிட, யானிங்கிருக்கும் மணிநேரத்தில்

இங்கு அதிக சப்தமும், சச்சரவுமா யிருக்கிறதாகையால் எனக்கு உங்களை அடக்கிஆள சக்தி இல்லை என்றும், இப்படி யிருந்தால், உபாத்திமைத் தொழிலை விட்டுவிடு என்றும் கோபாக்கினை இட்டிருக்கிறார். அப்பா, நீங்கள் செய்யும் காரியத்தின் பொருட்டு நான் தண்டனை அடையவேண்டி யிருக்கிறது. உங்களுக்கு மிகவும் புண்ணியமாயிருக்கும் அமரிக்கையா யிருங்கள். நயமொழியாய் சொல்லும் என் வார்த்தையைக் கேட்கப்படாதா? நீங்கள் இனி யாதொரு கலகமும் உங்களுக்குள் உண்டாக்கிக் கொள்ளாமலும், தலைமை உபாத்தியாயரிடம் கம்பிளெயின்ட் (புகார்) சொல் லிக் கொள்ளாமலு மிருங்கள் என தாழ்மை வார்த்தையாக புகன்றுட்கார்ந்தார்.

உபாத்தியாயர் சொன்ன இப் பரிதாப வார்த்தையைக் கேட்ட தவமணி, அவருக்காக மனதிரங்கி, மற்றைய பிள்ளைக ளிடத்தில் அவர்கள் செய்கைக்காக கோபமும் வருத்தமும் அடைந்தான். மறுநாளும் தலைமை உபாத்தியாயர் தமி ழுபாத்தியாயரை அதிகமாகக் கண்டித்தார். தமி ழுபாத்தி யாயர் பிள்ளைகளுக்கு மறுநாளும் சொன்னார். பிள்ளைகளோ தங்கள் பழைய வேலையில் மாறாதிருந்தனர். தவமணி இதற்கு ஓர் பரிகாரம் செய்ய யோசனை செய்து முடித் தான். இது விஷயமாய் தவமணி அதிக சிரத்தை எடுத்துக் கொண் டிருந்தான். கணித உபாத்தியாயரிடம் (Arithmetic Teacher) பிள்ளைகளுக்கு அதிக பயம். இங்கிலீஷ் போதகாசிரியரிடமும் அச்சமுண்டு.

நிற்க: தற்போது நமது தவமணிக்கு 12-வது வயது. ஆறாவது வகுப்பில் படிக்கின்றான்.

மறுநாள் பள்ளிக்கூடம் ஆரம்பித்ததும் முதல் மணி கணிதமணி. உபாத்தியாயர் துவக்கும் மணி ஆனதும், கருப்பு மரப் பலகையில் (Black board) கணக்கு போடு

வித்தார். வெள்ளை சீமைச் சுண்ணும்பு கட்டியால் (Chalk piece) எழுத எழுத அதில் படியவே இல்லை. வேறொரு சுண்ணும்பு கட்டியால் எழுதிப் பார்த்தார். எழுத்துப் படியவே இல்லை. பசங்களை விட்டுச் சுத்தமாய் தண்ணீரால் துடைத்து விட்டு மறுபடியும் எழுதினர். சற்றுகூட படியவில்லை. உபாத்தியாயர் அயர்ந்துநின்று, நேற்றுஎழுதினேமே, இன்று ஏன் எழுதவில்லை? என்று கவலை கொண்டு இருந்தார். மறுபடியும் துடைத்துவிட்டு எழுதினர். உபாத்தியாயர் பட்ட அவஸ்தையைப் பார்த்தும், இன்று தங்களுக்குப் புதியதாக பாடம் ஒன்றும் கொடுக்கப்படாததாலும், சந்தோஷம் கொண்டு குபீரென்று சிரித்தார்கள். உபாத்தியாயருக்கு கோபம் வந்து பிரம்பை எடுக்கப்போனர். பையனொருவன், ஏன் ஸார், கணக்கு ஒன்றும் போடவில்லை. புது கணிதமும் கொடுக்கவில்லை என்று கேட்டான். உபாத்தியாயருக்கு வெட்கம் உண்டாகி பேசாமல் நாற்காலியில் உட்கார்ந்து விட்டார். இதற்குள் மணியாய் விட்டது. அவர் போனதும் இங்கிலீஷ் பாட மணி ஆரம்பம். நமது தவமணி, தனக்குள் 'நான் இன்று யோசனை செய்து விளக்கெண்ணெயை பலகையில் தடவி வைத்தது மிகுந்த நலத்தை தந்தது. இவ் வுபாத்தியாயர் நமது தமிழுபாத்தியாயரை அதிக கேவலமாக நினைத்திருக்கிறார். இன்று இவர் வெட்கப்பட்டார். இந்த இங்கிலீஷ் உபாத்தியாயரையும் இப்படிச் செய்யவேணும். பிள்ளைகளைக் காதைப் பிடித்து கிள்ளுவது கொடுஞ் செயல். இதை இவர் சிறிதும் எண்ணுது தனக்கிஷ்டம்போல் செய்கிறார். மேலும், தமிழுபாத்தியாயர் மேல், தலைமை உபாத்தியாயரிடம் அதிக புகார் சொல்லி இருக்கிறார். அதனல் தான் தலைமை உபாத்தியாயர், தமிழுபாத்தியாயரை அவ்வளவு வெறுத்ததற்கு காரணம். இருக்கட்டும்' என நினைத்துக்கொண்டே

தான் தயாராய் செய்து வைத்திருந்த பூனகாசரி இலைப் பொடியை (இது ஒருவித செடியினிலை. இது நமது மேல்பட்டால், தாங்கொணு நமைச்ச லெடுக்கும். அந்த இடத்தைச் சொரிந்தால் தடிப்பாகி எரிச்சலெடுக்கும். பின் மஹா அவஸ்தையைக் கொடுக்கும்.) சிறிதெடுத்து அந்த நாற்காலியில் யாருக்கும் தெரியாமல் ரகஸியமாய் தூவிவிட்டான். இங்கிலீஷ் உபாத்தியாயர் வந்துட்கார்ந்து ஒருவனைப் பாடம் கேட்டார். துடையின்கீழ் ஏதோ நமைச்சலெடுக்க அங்கு சொறிந்து துடைத்துவிட்டு, மறுபடியும் சரிவர உட்கார்ந்தார். பின் அதிகமாய் நமைச்ச லெடுக்கவே, அழுத்தமாய் சொறிந்தார். எரிச்சலதிகமாகவே, பாடத்தைக் கவனியாமல் சொறிவதின் மேலேயே இருந்தார். பிள்ளைகள் எல்லாம் பாடத்தை ஒரு நொடியில் ஒப்பித்துவிட்டு, உபாத்தியாயர் அவஸ்தைப்படுவதைப் பார்த்து ஆனந்தப்பட்டு சிரித்தனர். உபாத்தியாயர், உபத்திரவம் தாங்காது, ஒருவேளை சோமனுக்குள் கம்பிளி பூச்சி புகுந்துக் கொண்டதோ என்னமோ என்று எண்ணி, உடுத்தியிருக்கும் துணியைச் சரிப்படுத்தி சோதித்துக் கட்டிக்கொள்ள கக்கூசுக்குப் போய்விட்டார். பசங்கள் பாடு ஆனந்தமாய் விட்டது. கூச்சல் போட்டுக் கொண் டிருந்தார்கள். தலைமை உபாத்தியாயர் வந்து சப்தத்தை அடக்கிச் சென்றார். வெளிச் சென்ற இங்கிலீஷ் உபாத்தியாயர் மறுபடியும் வந் தாசனத்தமர்ந்தார். சாய்ந்திருக்கும் பின்புறம் இப்போது நமைச்சலெடுக்க ஆரம்பித்தது. துடை பக்கம் அதிக எரிச்ச லெடுத்தது. கைகொண்டு எவ்விடத்திலும் சொறிந்தார். மார்பு புறம் தவிர மற்றபுறமெல்லாம் எரிச்சலெடுக்க ஆரம்பித்தது. உபாத்தியாயர் தலைப்பாகை கீழ் விழுந்துவிட்டது. அணிந்திருந்த சொக்காய்களை யெல்லாம் கழட் டெறிந்துவிட்டு எல்லாவிடத்திலும் பித்தம் பிடித்தவனைப் போல் சொறிந்துக் கொண்டும்

தேய்த்துக் கொண்டு மிருந்தார். எரிச்சல் தாங்காது, கண்ணீர்விட்டு விட்டார். வகுப்பில் இங்கேயும் அங்கேயும் சுற்றி வந்தார். வாய்விட்டலறினர். இவ் வவஸ்தையைக் கண்ட பிள்ளைகள் கை தட்டி கூச்சல் போட்டார்கள். வகுப்பு ஒரே ஆரவாரமாய் இருந்தது. தலைமை உபாத்தியாயர் சப்தத்தைக் கேட்டு ஓடி வந்து பார்த்து, இவ் வுபாத்தியாயரை என்ன சங்கதி எனக் கேட்டுக் கொண்டே அந்த நாற்காலியில் தானுட்கார்ந்தார். தனக்கும் என்னமோ எரிச்சலெடுக்க அவசரமாய் சொறிந்தார். எரிச்சல் தாங்காது, தானும் உடுப்புகளை எடுத்தெறிந்து, கண்ணீர் வெளிவர அவதிப்பட்டார். பையன்கள் விழுந்து விழுந்து சிரித்து, ஆனந்தங் கொண்டாடினர்கள். வகுப்பெல்லாம் ஒரே அமுளி குமளியாய் இருந்தது. எல்லா வகுப்பு உபாத்தியாயரும் பிள்ளைகளும் இங்கே வந்து கும்பல் கூடி விட்டனர். நடுவில் இவ்விரு உபாத்தியாயரும் கோணங்கிதாசர் ஆட்டம் ஆடிக்கொண் டிருந்தார்கள். பார்க்கிறவர்களில் சிலர் சிரிப்பும், இவர்களுக்காக பரிதாபப்படுகிறவர் சிலருமாக இருந்தார்கள். அதிலிருந்த தமிழ் உபாத்தியாயர் வந்து விஷயத்தைக் கேட்டறிந்து உட்காராமலே நாற்காலியை பூதக் கண்ணாடி கொண்டு சோதித்துப் பார்த்தார். அதை ஒரு விரலால் தொட்டுப் பார்த்து, பூனைகாசிரி இலைப்பொடியை யாரோ தூவி வைத்திருக்கிறார்கள் என உரத்துக் கூறினர். பின் அவஸ்தைப்படும் இரு உபாத்தியாயர்களும், அவ்வெரிச்சலை ஆற்றுதல் பொருட்டு தம் தம் வீட்டுக்கேகினர். அவர்கள் சௌக்கிய மடைந்து வர இரண்டு நாளாயிற்று. இதுவரைக்கும் பள்ளிக்கூடப் பிள்ளைகள் விடுதலைத் தினம் போல் களிப்புற் றிருந்தனர்.

இரண்டு தினம் சென்றதும், தலைமை உபாத்தியாயர் அவ் வகுப்பில் வந்து, இத்துஷ்டத்தனம் செய்தது யாரென

அதட்டிக் கேட்டார். யார் நானென்று வெளி வருவார்? ஒருவருமில்லை. இதற்குள் கணித உபாத்தியாயர் அங்கு வந்து, தான் கரும்பலகையில் கணக்கெழுதினால் எழுத முடியவில்லை என்று சொன்னார். தமிழுபாத்தியாயர் பலகையைச் சோதித்துப் பார்த்து, இதில் எண்ணெய் தடவி யிருக்கிறது. ஆகையால் தான் எழுத்து தெரியவில்லை யென்று சொன்னார். தலைமை உபாத்தியாயர் பிள்ளைகளைப் பார்த்து இவ்விரண்டு துஷ்டத்தனத்தையும் செய்தவன் யார்? என வினவினார். பதில் யாரும் சொல்லவில்லை. யாருக்காவது தெரிந்தாலன்றோ சொல்லுவார்கள். மறுபடி ஒவ்வொருவனாக பயமுறுத்திக் கேட்டார். பிரயோஜனமில்லை. இதற்குள் பகல் போஜனத்திற்காக விடுதலை மணியடிக்கவே தலைமை உபாத்தியாயர் பிள்ளைகளைப் பார்த்து, இச்சேஷ்டை செய்தவன் உங்களுக்குள் ஒருவனாக இருக்கின்றான். நீங்கள் ஏகோபித்து பேசிக்கொண்டு உண்மையை யாரும் வெளியிடாதிருக்கின்றீர்கள். குற்றம் செய்தவனை நீங்கள் வெளிப்படுத்தாதிருந்தால் அக்குற்றம் உங்கள் எல்லாரையும் சாரும். அதற்காக தண்டனையை நீங்கள் எல்லாம் அடைவீர்கள். ஒவ்வொருவருக்கும் மூன்று டஜன் பிரம்படி தண்டனையாக ஏற்படுத்துவேன். சொல்லி விடுங்கள் என கோபத்தோடு கேட்டார். பையன்களும் ஒருவரை யொருவர் வினவிப் பார்த்து தாங்கள் ஒவ்வொருவரும் செய்யவில்லை யென்று உறுதியாகச் சொல்லி விட்டார்கள். தலைமை உபாத்தியாயர், 'ஓ, இது சுத்தப் பொய், எப்படியும் நான் கண்டுபிடித்து விடுவேன். அப்போது தண்டனை அதிகமாகும். நீங்களே சொல்லிவிட்டால் சற்று தண்டனையைக் குறைப்பேன்' என நய பயமாய் கேட்டார். உண்மை வந்தபாடில்லை. பின்னு முபாத்தியாயர் சரி, இப்பொழுது சாப்பாட்டிற்கு விடுதலைச் செய்யப் போவதால் அன்னேரத்தில் யோசனை செய்து

வந்து சொல்லிவிடுங்கள் அல்லது செய்தவனைக் கண்டு பிடித்து சொல்லிவிடுங்கள். இல்லாவிடில் தண்டனையை எல்லாரும் அடையவேண்டியதே. மத்தியானம் உங்களில் யாராவது ஒருவன் வரத்தவறினால் அவனே இக்குற்றம் செய்தவன் என அவனைப் பிடித்து வந்து தண்டனையை இரண்டுமடங்காக்குவேன் எனக் கூறி முடித்து விடுதலை செய்தனர்.

பையன்கள் ஒருவருக்கொருவர் சொல்லி விசனப் பட்டு இத்தலைமை உபாத்தியாயர் மிக்க குரூரமானவராகை யால் சொன்னபடி செய்தே தீருவாரெனப் பயந்து ஒரு வருக்கொருவர் தந்திரமாக விசாரித்துப் பார்த்தனர். ஒரு வரும் வெளிப்படவில்லை. மறுபடியும் கல்விச்சாலை ஆரம்ப மணியானதும், தலைமை உபாத்தியாயர் வந்து ஆசனத்தமர்ந் தார். பிள்ளைகளை விசாரித்துக்கொண்டே மேஜையை நோக்க, மேஜைமேல் ஒருவர் தனக்கு ஒரு கவர் விலாசமெழுதி வைத்திருப்பதைக் கண்டு, அதைத் திறந்து உள்ளிருந்த தைப் படித்துப் பார்த்தார். பையன்கள்பாடு உதரலெடுத் துக்கொண்டது. உபாத்தியாயர் உள்ளிருந்ததை நோக்க, அதில் உபாத்தியாயர் விதிகள் (Teachers' Rules) என்னும் புத்தகத்திலிருந்து ஒரு ஏடு கிழித்து வைத்து அவ்வச்சடித்த ஏட்டில் சில வரிகளை சிகப்பு மையால் (Red ink) எழுத்தின் கீழ் குறிப்பிட்டிருந்தது. அதை உபாத்தியாயர் வாசித் தார். அதாவது: "கல்விச்சாலையிலாவது, வகுப்பிலாவது ஒரு குற்றம் நடந்திருந்தால் அக் குற்றவாளியைக் கண்டு பிடித்து தண்டிக்கவேண்டும். ஆனால் குற்றவாளியைக் கண்டு பிடிக்காமல் அக்குற்றத்தை வேறொருவன் மீது சுமத்து வதும், அன்றி வகுப்பு பிள்ளைகள்மீது சுமத்தி அத் தண் டனையை அவர்கள் மீது நிறைவேற்றுவதும் சட்டப்படி மிகவும் பிசகு. அதைச் செய்த உபாத்தியாயர் கவர்ன்மெண்

டார் தண்டனைக்குள்ளாவார்கள்,'' என இருந்ததை குறிப்பிட்டு 'இதை நீர் அறிந்து நடக்கவும்' என ஒருவரி எழுத்தால் எழுதி இருந்தது. இதைக் கண்ட உபாத்தியாயர் பேயால் அறைபட்டவர்போல் அயர்ந்து உட்கார்ந்து விட்டார். பிள்ளைகள் என்ன விஷயமோ என கலக்கமுற்றிருந்தார்கள். தலைமை உபாத்தியாயர் மற்றெல்லா உபாத்தியாயரையும் வரவழைத்து இதைக் காண்பித்தார். பின் சந்தோஷ மனத்தினராய், ஆ நான் கண்டு பிடித்துவிட்டேன். இக்கடிதத்தை இங்கு வைத்தவனே இக்குற்றத்தை செய்திருக்கிறான். இதை எழுதி வைத்தவனை இதோ கண்டுபிடித்து விடுகிறேன். கண்டுபிடித்து அவனை என்ன பாடு படுத்துகிறேன் பாருங்கள் என சினம் மீறி இவ்விலாசம் எழுதின கையெழுத்தைக் கொண்டு கண்டு பிடித்துவிடுகிறேன் எனப் புகன்று, பிள்ளைகளின் ஒவ்வொருவருடைய கையெழுத்தை எழுதச் சொல்லியும், எழுதி யிருக்கும் நோட்புக்கை எடுத்துப் பார்த்தும், உண்மையை அறியப் பார்த்தார். ஆனால் அக்கையெழுத்து ஒருவர் கையெழுத்தையும் கொஞ்சம்கூடச் சாரவில்லை. உபாத்தியாயருக்கு வெட்கமும் கோபமும் அதிகமாகி அசையாப் பொருளாகி விட்டார். அதோடு அன்று கல்விச்சாலை விடுதலை அடைந்தது. உபாத்தியாயர் ஒன்றும் செய்யமுடியாது போனதைக் கண்ட பிள்ளைகள் எல்லையற்ற சந்தோஷ மனத்தினரானார்கள்.

மறுநாள் கல்விச்சாலை கூடினதும், தலைமை உபாத்தியாயர் ஆறாவது வகுப்பிற்குவந்துட்கார்ந்தார். பிள்ளைகள் புன்சிரிப்புகொண்டிருந்தனர். தலைமை உபாத்தியாயர் ஒரு கடிதத்தில் சில வரிகளை எழுதி அங்கு வந்த தமிழ் உபாத்தியாயரிடம் அளித்துச் சென்றனர். தமிழுபாத்தியாயர்

அதைப் படித்துப் பார்க்க அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

## நோட்டீஸ்

தமிழுபாத்தியாயர் இராஜகோபால் பிள்ளை அவர்களுக்கு தெரிவிக்கும் நோட்டீஸ் என்னவெனில்: நேற்றய தினம் நடந்த இரண்டு வெறுக்கத்தக்க காரியங்களும் உம்மாலேயே ஏற்பட்டன என்றறிந்தேன். உம்மை யான் வேலைக்கு அருகரல்லவென்று கண்டித்ததைக் காரணமாகக் கொண்டு நீர் இப்பேர்ப்பட்ட கேவலமான காரியத்தை செய்துவிட்டு ஒன்றும் தெரியாதவர்போல் நீரே அதை வந்து விளக்கினீர். ஆகையால் நீர் இன்னும் ஒருவாரம் சென்றதும் உம்முடைய வேலையை விட்டுவிட வேண்டும். இதுவே அறிக்கை. இதைப்பற்றி மேலதிகாரிகளுக்கும் தெரிவிக்கப்போகின்றேன்.

இப்படிக்கு,

தலைமை உபாத்தியாயர்

சுப்ரமண்ய அய்யர்.

என எழுதியிருந்ததைப் படித்துவிட்டு, பெருமூச்சு விட்டு பிள்ளைகளிடம் அதைப் படித்துக் காட்டி, பிள்ளைகளே! யான் உங்களுக்கு எத்தனைதடவை போதித்து வந்தும் கேட்காமல் உங்களில் யாரோ ஒருவன் இத்துஷ்டகாரியங்களைச் செய்துவிட, அப்பழி என் தலையில் விடிந்தது. இப்பொழுதாவது செய்த பிள்ளை ஒத்துக்கொள்ளக் கூடாதா? ஆம், கூடாது, அப்படி ஒத்துக்கொண்டால் நீங்கள் தண்டனையை அடைய வேண்டும், இருக்கட்டும். யானே இத்தொழிலை விட்டு விலகிக்கொள்கிறேன். யான் இத்தொழிலிலிருந்து எடுபட்டுப் போகிறேனென்று யான் வருத்தப்

படவில்லை. ஆனால் உங்களுக்கு யார் இனி என்னைப்போல் அன்புடன் தமிழ் பாடங்கள் போதித்துவருவார் என ஏங்குகிறேன். வருகிறவர் மனம் கோணும்படி நீங்கள் நடந்தால் அதற்காக அவர் உங்களைத் தண்டிக்கப்போகிறார். யான் உங்கள் ஒவ்வொருவரையும் எனது பிள்ளையைப்போல் நேசித்து வந்ததால், நீங்கள் என்ன சொன்னாலும் என்ன செய்தாலும் கைநீண்டி அடிக்க மனமில்லாதிருந்தது. இனி யார் உங்களை அப்படி நடத்துவார்கள். உங்கள் எல்லாரையும் ஒருங்காக எங்கே பார்க்கப் போகிறேன். ஐயோ, யான் நிரபராதியா யிருந்தும், குற்றம் செய்தவனாக எண்ணப்பட்டேன். கடவுளுக்கு இவ்வுண்மை விஷயம் தெரியுமாதலால் மீண்டும் அவரே என்னை உங்கள் முன் கொணர்ந்து விடுவாரென நினைக்கிறேன். இதுவரையில் இருந்தாற்போல் நீங்கள் இனியு மிருக்காமல், எனக்குப் பின் வரும் உபாத்தியாயரிடம், அன்பாயும் அடக்கமாயுமிருங்கள். இதுவே உங்களை நான் வேண்டிக்கொள்வது என கண்ணீர் கலங்கச் சொல்லி முடித்தார். பிள்ளைகளுக்கெல்லாம் வருத்தமாயிருந்தது. எல்லாரை விட தவமணிக்கு அதிக மன வருத்தமாயிருந்தது. கண்ணீரும் விட்டுவிட்டான். உபாத்தியாயரை வேலையை விட்டு அகலாதிருக்கும்படி செய்ய வேண்டுமென தவமணி ஓர் யுக்திசெய்து கொண்டிருந்தான்.

---

## அத்தியாயம்—2

### காமத்தின் கஷ்டம்

மறுநாள் தவமணி, தலைமை உபாத்தியாயர் தன்னைப் பார்க்கும்படி, கையில் பொட்டகிறப் படம் (புகைப்படம்) ஒன்றை வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான்.

தலைமை-உபாத்தியாயர்.—அடே தவமணி, அங்கென்னடா பார்த்துக்கொண்டிருக்கிறாய்? பாடவேளையில் ஏனிங்கு நின்றுக்கொண்டிருக்கின்றனை? கையில் வைத்திருப்பதுடன் இங்கு வா.

தவமணி.—ஒன்றுமில்லை ஸார். இந்தப் படம் மிகவும் அழகாயிருக்கிறது. ஆதலால் இதைச் சற்றுப் பார்த்தேன். மன்னிக்கவும் என சொல்லிக்கொண்டே அப்படத்தைத் தன் ஜேபியில் மறைத்துக்கொண்டு மெல்ல நழுவ வாரம்பித்தான்.

த-உபா.—அடே, நான் கூப்பிடுகின்றேன், போகின்றுயா, இங்கு வா, என்று அதட்டினுர். தவமணி மிகுந்த பயந்தவன்போல் நடுங்கிக் கொண்டே அருகில் வந்து நின்றுன். உபாத்தியாயர் சட்டென அவன் ஜேபியில் கையைவிட்டு அப்படத்தை எடுத்துப் பார்த்தார். பார்த்ததும், வாய்திறந்து பேசாமல் அப்படத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டு, சிரித்தவண்ணமாயிருந்தார்.

தவமணி.—ஸார், படத்தைக்கொடுங்கள். யான் பாடத்திற்கு போகவேண்டும்.

த-உபா.—இரப்பா தவமணி. இந்த அழகிய படம் யாருடையது? இது எந்த மாதின் உருவப்படம்? அல்லது சித்திரப்படத்தை புகைப்பட மெடுத்ததா? இது உனக்கு ஏது? யாருடையது? சொல்.

தவமணி.—எங்கள் வீட்டிற்கு மூன்றுவது வீட்டில் வேலூரிலிருந்து புருஷனும் பெண்ஜாதியும் வந்திருக்கிறுர்கள். அந்த மாதினுடைய படம் இது.

த-உபா.—உனக்கெப்படி இப்படம் கிடைத்தது?

தவமணி.—அவர்கள் இவ்வூருக்கு வந்ததும், எங்கள் தெருவில் என்னைக்கண்டு வாடகை சுளுவாக ஒரு வீடாவது, அல்லது ஒரு தனி அறையாவது பார்த்துக் கொடுக்கச்

சொன்னார்கள். யான் எங்கள் வீட்டிற்கு மூன்றாவது வீட்டின் முன் புறத்தில் ஒரு தனி அறையை வாடகைக்கு அவ்வீட்டாரிடம் பேசி வாங்கிக் கொடுத்தேன். அவர்கள் அவசரமாக வந்ததாலும், அவ்வூரில் வேறுயாரையும் தெரியாதவர்களாதலாலும், அவர்கள் தற்சமயம் அதிலிருக்கச் சம்மதப்பட்டு இருக்கிறார்கள். அந்த அம்மா என்மேல் மிகவும் பிரிய முடையவள். ஆகையால் இப்படத்தை அவர்கள் என்னிடம் கொடுத்தார்கள். அதை நான் அருமையாக என்னேரமும் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

த-உபா.—அவர்கள் வந்து எத்தனை நாளாயிற்று? அந்தம்மாள் புருஷன் என்ன வேலை செய்கிறார்?

தவமணி—இரண்டு மூன்று நாள், ஏன் ஒருவாரத்திற்கு மேலாகிறது. புருஷன் ஆலையில் ஏதோ ஒருவேலையிலிருக்கிறார்.

த-உபா.—இவர்கள் கள்ளக் காதலர்களாயிருக்கும். அங்கிருந்து இவ்வூருக்கு மறைந்துக் கொண்டிருக்க ஓடிவந்திருப்பார்களென நினைக்கிறேன்.

தவ.—அப்படி தான் யானும் நினைக்கிறேன். அவர்கள் இருக்கும் மாதிரியும், நடக்கும் மாதிரியையும், பார்த்தால் அப்படி தான் தெரிகிறது.

த-உபா.—நீ அந்தம்மாளிடம் கூச்சமற்றுப் பேசுவாயா?

தவ.—பேசுவேன், அவர்கள் குழந்தைபோல் என்னைப் பாவிக்கிறார்கள்.

த-உபா.—ஆனால் எனக்கொரு உபகாரம் நீ செய்ய வேண்டும். அவ்வுபகாரத்தைச் செய்தால் யான் உன்னை ஒவ்வொரு வகுப்பிலும், அபஜயமாகாதபடி பரிக்ஷையில் மேல் வகுப்பிற்கு மாற்றி வருவதோடு உனக்கு வேண்டிய உபகாரமும் செய்வேன்.

தவமணி.—என்ன ஸார் அவ்வளவு தூரம் சொல்லு கிறீர்கள்? தாங்கள் என்ன சொன்னாலும் அதன் படி நடக் கின்றேன்.

த-உபா.—இந்தப் படத்தை பார்த்தது முதல் என் மனம் மஹா சந்தோஷ மடைந்திருக்கிறது. மேலும் இப் பெண்ணை நான் எங்கேயோ பார்த்திருக்கின்றாப்போல் இருக்கிறது. ஆகையால் இப்பெண்ணைத் தனியாகக் கண்டு சில வார்த்தைகள் பேசவேண்டும். நீ என்னைப் பற்றி, மிகப் பெருமையாகவும் நல்ல விதமாகவும், அந்த மாதிடம் சொல்லி, அவளிடம் நான் வந்து பேச எப்போது சமயப்படும், என விசாரித்துவா. இவ்வுதவி செய். நீ மிகுந்த நல்ல பையன், என்று பேசிக்கொண்டே ஒரு ரூபாய் எடுத்துப் பையன் கையில் கொடுத்தார்.

தவமணி.—வேண்டாம் ஸார். நான் நாளைக்கு அந்தம் மாளை விசாரித்து வருகிறேன்.

த-உபா.—இல்லை, நீ விசாரித்து வருவதோடு, அவள் என் னைத் தனியாய் பார்க்க விரும்பா விட்டாலும் நீ எப்படியா வது விரும்பும்படி படியவைத்து ஏற்பாடு செய்யவேண்டும்.

தவ.—நான் எது சொன்னாலும் அவர்கள் அதை தள்ள மாட்டார்கள். என்றால் கூடிய வரையில் முயற்சி செய்து பார்க்கிறேன். அநேகமாக காரியத்தை முடித்துக் கொண்டே வருகிறேன்.

த-உபா.—ஆமாம்; புருஷன், வந்ததற்குள் வேலைக்குப் போயிருக்கிறாரே, செலவுக்கு கஷ்டப்படுகிறதாக தெரி கிறதா?

தவ.—ஆமாம், அப்படி தான் தெரிகிறது. நேற்று கூட காதிலிருந்த கம்மலை வைத்து கொஞ்சம் ரூபாய் செல வுக்கு வாங்கினார்களாம்.

த-உபா.—ஆனால் இந்த ஐந்து ரூபாயை அவளிடம் கொடு. செலவுக்கு வைத்துக் கொள்ளச் சொல். கட்டாயம் நாளைக்கு வந்து சந்தோஷ சமாச்சாரம் எனக்குச் சொல்.

தவ.—என் ஸார், பிள்ளைகள் சம்பள பணத்தை எடுத்து என்னிடம் கொடுத்துவிட்டீர்களே, மேலதிகாரிக்குப் பணம் அனுப்புவதற்கு என்ன செய்வீர்?

த-உபா.—ஓ, நெவர் மைண்ட் (Never mind). அதைப் பற்றி பரவாயில்லை, எங்களுக்குச் சம்பளம் வருகிற வரைக்கும் அதைச் சமாளித்து வந்து பின் சம்பள பணத்தில் திருப்பிக் கணக்கை ஒழுங்கு பண்ணிக் கொள்வோம்.

தவ.—சரி, நான் போய் வருகிறேன் ஸார்.

த-உபா.—ஆமாம். மறந்துவிடாதே. நாளைக்கு உன் வாயால் நல்ல சமாச்சாரம் வெளிப்படவேணும்.

தவமணி அப்படியே ஸார் என்று தலையை அசைத்துக் கொண்டே தன் வகுப்பிற்கு சென்று விட்டான். படம் உபாத்தியாயரிடமே இருந்துவிட்டதால் அடிக்கடி வேலையை விட்டுவிட்டு அப்படத்தையே பார்த்து மனம் பூரித்து மனோ ராஜ்யம் பண்ணிக் கொண்டிருந்தார்.

மறுநாள் தலைமை உபாத்தியாயர் கல்விச்சாலைக்குச் சீக்கிரமாகவே வந்து, வாயிற் படியிலே தவமணியின் வரவுக்கு எதிர் பார்த்திருந்தார்.

தவமணி கல்விச்சாலைக்கு வந்து முதல் படியில் கால் வைத்ததும், உபாத்தியாயர் தவமணி கையைப் பிடித்துக் கொண்டு, "தவமணி, சமாச்சாரம் எப்படி, காயா? பழமா? சீக்கிரம் சொல்லு" என்றார்.

தவமணி.—பேசாமல் இவரை நோக்கிக் கொண்டிருந்தான்.

த-உபா.—என்னப்பா தவமணி, பேசாமலிருக்கிறாய், உத்திரவு பெறவில்லையா? நான் இரவு எல்லாம் இதே

சிந்தனையாக இருந்தேன் ; கனவு கூடக் கண்டேன். நீ சந்தோஷமான சமாச்சாரம் சொல்லா விடில் என் இருதயம் வெடித்து விடும் போலிருக்கிறது. எப்பொழுது விடியும், எப்பொழுது உன்னைப் பார்க்கலாம், எப்பொழுது சந்தோஷ சமாச்சாரம் கேட்கலாம், என இருந்தேன். சீக்கிரம் சொல்லு, காயா? பழமா?

தவ.—அதைப் போய் சொன்னேன், நான் சொன்னேனு, ஊம், சொன்னதற்கு......

த-உபா.—அடே அதெல்லாம் கதை படிக்காதே. சுருக்கமாய் உடனே சொல், நலமா—இல்லையா.

தவமணி.—அதுதான் சொல்லுகிறேன் சார். நான் போய் சொன்னேன். உங்களைப் பற்றி சொன்னேன். உங்கள் குணத்தைப் பற்றிச் சொன்னேன்.

த.உபா.—அடே, மறுபடியும் பாரதம் படிக்கிறுயே. அதெல்லாம் பின்னுல் சொல். முன் மூன்றெழுத்தால் சொல். பின் விபரமாய் சொல்லலாம்.

தவ.—ஸார், அப்படி மிகவும் அவசரமாய் நான் சொல்வது வழக்கமல்ல ; எது ஒன்றையும், விபரமாக, ஆரம்ப முதல் சொல்வதே என் வழக்கம். இப்படி என்னை துரிதப்படுத்திஞல் இதற்குமேல் என்னுல் ஒன்றும் சொல்ல முடியாது.

த-உபா.—அப்பா, என்ன கண்டிப்பாய் சொல்லுகிறுயே. ச்ரி உன்னிஷ்டம், ஏதோ கூடிய வரைக்கு மாவது சுருக்கிச் சொல்.

தவ.—நான் நீங்கள் சொன்னபடி அவள் வீட்டிற்குப் போனேன். உங்கள் அபிப்பிராயத்தைச் சொன்னேன். உங்கள் குணத்தைச் சொன்னேன்.

த-உபா.—அடே தவமணி, அதைத் தான் முன்னடி சொல்லி விட்டாயே, திருப்பித் திருப்பித் சொன்னதையே சொல்லுகிருயே, வேறு செய்தியைச் சொல்லி முடி.

தவ.—இல்லை ஸார், நடுவில் நிறுத்தினபின் மறுபடியும் பல்லவியிலிருந்து ஆரம்பித்தால் தான் அனுபல்லவி, சரணம், அனுசரணம், முதலிய நான்கு படிகளையும் தவறின்றி முடிக்கலாம். நீங்கள் நடுவில் தடுத்து வருகிறதால் தான் இவ்வளவு காலம் சென்றது இதைச் சொல்லி முடிக்க. இவ்வளவு அவசரப் படுகிறீர்களே, செய்தியைக் கேட்டால் தாங்கள் எப்படி யாவீர்களோ?

த-உபா.—என்ன, காரியம் கை கூடவில்லையா?

தவ.—இதற்குள் தாங்கள் அத்தீர்மானத்திற்கு வந்து விடக்கூடாது. முற்றிலு மறிந்தபின் முடிவுரை கூறுங்கள். நடுவில் தடுக்காதிருந்தால் சொல்லுகிறேன். இல்லாவிடில் நமது வார்த்தைக்கு இதோடு முடிவு செய்து விடுவோம்.

த-உபா.—ஆ தவமணி, சரி சரி உன்னிஷ்டம்போல் சொல், நான் நடுவில் தடுக்கவில்லை.

தவ.— நான் உங்களைப் பற்றிச் சொன்னேன். குணத்தையும், பெருமையையும், அருமையையும் சொன்னேன். முதலில் கொஞ்சம் கவனிக்காதிருந்தாள். பின் கவனிக்கப் படும் சமயம் பார்த்து, நீங்கள் பார்க்க விரும்பும் விஷயத்தைச் சொல்லி, இஷ்டத்தை எதிர் பார்த்தேன். உடனே இந்த ஐந்து ரூபாயையும் கொடுத்து இன்று நடந்த சமாச்சாரத்தையும் சொன்னேன். மறுபடி அதிக நாழிகை அந்தம்மாள் யோசித்துப் பார்த்து, "சரி, அப்படியானல் இரவிற்கு வரச் சொல். ஏனெனில் அப்பொழுது தான் என் புருஷர் இரவு ஆலை வேலைக்கு போயிருப்பார். என் புருஷர் என்னை இட்டுவந்தவர்தான், எனக்கு எதிர் வீட்டில் அம்மணிதர் இருந்ததால், எப்படியோ என்னை மயக்கி இட்டு வந்து விட்

டார். என் காதில் மூக்கில் இருந்ததை யெல்லாம், இந்தப் பாவிக்கு விற்றுச் செலவழித்தேன். இப்போது பாதேசி போலிருக்கிறேன். நானிருந்த வாழ்வு என்ன இப்போது இருக்கும் சீர்கேடென்ன. எனக்கு இங்கிருக்கக்கூட பிரிய மில்லை. வேறு ஏதாவது ஒரு நல்ல விடமாய் பார்த்துச் சீராக இருந்துவிடலா மென்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். நீ இவ்வளவு தூரம் உபாத்தியாயரைப் பற்றி பெருமையாக சொல்லுகிறதால் அவரை வரச்சொல். அதுவும் இன்று இரவே வரச்சொல். அவரிடம் நான் பேசவேண்டும். அவர் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும்," என்றாள். முதல் முதல் அவள் கொஞ்சம் கூட இதற்குச் சம்மதிக்க வில்லை. நான் அவ்வளவு தூரங் கேட்டுக் கொண்டதால் ஒருவாறு சம்மதித்தாள், என அடிப்பீடிகை பலமாகப் போட்டு பேசினான்.

இது வரைக்கும் ஆத்திரத்தை பெரும் கஷ்டத்தோடு அடக்கிக் கேட்டுக் கொண்டிருந்த தலைமை உபாத்தியாயர், தம்பி தவமணி, நீ பொன்மணி, என், கண்மணியடா. நீ கெட்டிக்காரன்; மிக நல்லவன், என சொல்லிக் கொண்டே அவனைச் சேர்த்துக் கட்டித் தழுவிக்கொண்டார்.

தம்பி தவமணி உன்புத்திக்கு மெச்சினேன். ஆமாம்! என்னை அந்தம்மாள் வரச்சொன்னாளே, விருப்பாய்ச் சொன்னாளா? வெறுப்பாய்ச் சொன்னாளா? இரவிற்கு நான் வந்தால் சந்தோஷமாய்ப் பேசுவாளா? இல்லாவிட்டாலும் நான் வந்து நேரில் பேசினால் எல்லாம் என்னிஷ்டம்போல் செய்துக்கொள்வேன். யான் எத்தனை மணிக்கு வருவது? சொல்லு.

தவ.—ஸார், அந்தம்மா விருப்புடன் தான் பேசினாள். நீங்கள் கட்டாயம் வாருங்கள், இரவு பத்துமணிக்குமேல்

வாருங்கள், நான்கூட அங்கு இருக்கிறேன். தவறக்கூடாது, கட்டாயம் வரவேண்டும் ஸார்.

த-உபா.—ஆ, ஆ, என்னடா தவமணி, நான் வராதிருந்து விடுவேனு? இந்த சூர்யன் இப்பொழுதே ஒழிந்து இருள் சூழ்ந்தால் மிக நல்லது. இப்பொழுதே அங்குவந்து சேர்வேன். தவமணி, சரி இந்தா, இந்த ஐந்துரூபாயை நீயெடுத்துக்கொள். போய்சொல், நான் பத்துமணிக்குமேல்—சரியாய் பன்னிரண்டு மணிக்குள்—வருகிறேன்.

தவ.—என்ன ஸார், இப்படி பணத்தை வாரி வாரி விடுகிறீர், எனக்கு வேண்டாம் ஸார். நான் என்ன அவ்வளவு பிரமாதமான காரியம் செய்துவிட்டது, எனக்குப் பணம் வேண்டாம், ஸார்.

த-உபா.—பரவாயில்லை நீ வைத்துக்கொள். இரவு வருகிறேன். நீயும் தயாராயிரு, உனது பாடத்திற்குச்செல்.

சரி போகிறேன் ஸார், எனச் சொல்லிவிட்டு பின்வருமாறு எண்ண மிட்டுக்கொண்டு சென்றுன். நாம் தமிழ் உபாத்தியாயரை வேலையை விடுத்தெடுக்கா திருக்கச்செய்த யோசனை நன்றுய் பலிக்கும் சமயமாய்விட்டது. இவ்வுபாத்தியாயர் காமப்பித்தம் பிடித்தவன். இவனை இதற்குத் தக்கபடி தண்டிக்கவேணும் என்று எண்ணிச் சென்றுன்.

உபாத்தியாயரோ, கட்டுக்கடங்கா சந்தோஷ மனத்தினராய், வரப்போகிறதைத் தெரிந்து கொள்ளாமல், தான் என்னென்ன வாங்கிக்கொண்டு போகலாம், எது வாங்கிப் போனல் அம்மாதுக்குச் சந்தோஷப்படும், என மனோராஜ்யம் பண்ணிக்கொண்டிருந்தார். நிற்க :

அன்று இரவு ஆனதும், உபாத்தியாயர், தன்னை உயர்தர ஆடையாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டு, பரிமளம் கமழும் வாசனைத்திரவியங்களை உடம்பில் பூசி, நெற்றியில் வாசனைத் திலதமிட்டு, வெற்றிலை

பாக்கை வாய்நிறைய போட்டுக்கொண்டு, கையில் பிடித்த வாக்கிங் ஸ்டிக்குடனே வெகு அட்டகாசமாய் இரவு பன்னிரண்டுமணிக்கு தான் வாங்கின பலவித மிட்டாய் தினுசுகள், புஷ்பம், வாசனைத் திரவியங்கள் ஆகிய இவைகளுடன், ஒரு குதிரை வண்டியிலிருந்து தவமணி வீட்டினருகாமையில் வந்திறங்கினர்.

அங்கு தயாராய் காத்திருந்த தவமணி ஓடிவந்து கைலாகு கொடுத்து உபாத்தியாயரை அழைத்துக்கொண்டு போய் தனது வீட்டிற்கு மூன்றுவது வீட்டின் தெருப்புறம் தனியாக இருந்த ஒரு அறையைக்காட்டி, இதுதான் ஸார் அந்தம்மாள் இருக்கும் அறை, என்று சொன்னுன்.

த-உபா.—தவமணி, கதவு சாத்தப்பட் டிருக்கிறதே. மேலும், உள்ளே வெளிச்சமில்லைபோல் தெரிகிறது.

தவ.—கதவு தாள்போடாமல் சும்மாதான் சாத்தப்பட்டிருக்கிறது. விளக்கு வைத்துத்தான் இருந்தாள். மணி பன்னிரண்டானதால் ஒருவேளை சற்று அயர்ந்து படுத்திருப்பாள். நின்றுபோயிருக்கும். நீங்கள் வந்தால் நேரே உள்ளே வரச் சொன்னுள். நீங்கள் உள்ளே போங்கள் ஸார், நான் வெளியில் இருக்கிறேன்.

த-உபா.—புருஷன் இல்லையே?

தவ.—இல்லை, ஆலைக்குப் போய்விட்டார் ஸார்.

சரியெனு உபாத்தியாயர் தான் கொண்டுவந்த சாமான்களுடன் மஹா சந்தோஷ மனங்கொண்டவராய் அவ்வறைக் கதவைத் திறந்து உள்சென்று கதவைத் சாத்திக்கொண்டு விளக்கேற்றலாமா என்று எண்ணினுர். சே, வேண்டியதில்லை, திடீரென விளக்கேற்றினுல் வெளிக்குத் தெரிந்தால் யாராவது சந்தேகப்படுவார்கள் என்று இருட்டிலேயே அந்த மாது படுத்திருக்கு மிடத்தை தடவிக்கொண்டே போனுர். அங்கு மிருதுவான தேகம் ஒன்று கையிற்குத்

தென்படவே சட்டென்று நின்று தான் கொண்டுவந்ததை கீழ் வைத்துவிட்டு, பெண்ணே, பெண்ணே, என கூவினர். பதில் இல்லை. நான்தான் உபாத்தியாயர் வந்திருக்கிறேன். நீ வாய்திறந்து ஒரு வார்த்தைசொல், என்று சொன்னர். பதில் வந்தபாடில்லை. பெண்ணே, என்ன தூங்குகிருயோ? நீ எங்கே யிருக்கிருய்? எனத் தடவிக்கொண்டே போனர். முன்போல் கையில் மிருதுவான மயிர் தட்டுப்படவே, அது தலைமயிரா யிருக்குமென் றெண்ணி, பெண்ணே, நீ கட்டில் மேல் படுத்திருக்கிருயோ? எழுந்து உட்கார். சில சமாச்சாரம் பேசவேண்டும். ஆசையும் அழகுமுள்ள பெண்ணே, என சொல்லிக்கொண்டே சற்றுக் கட்டித்தழுவினர். பட்டென்று தன் கணுக்காலில் ஒரு கட்டையால் அடித்தாற்போலிருக்க கால் ஒரேவலி யெடுத்தது. இருந்தாலும் வலியை அப் படியே அமுக்கி மூச்சுக்கூட விடாமல் சமாளித்துக்கொண்டு, பெண்ணே எழுந்திரு என கொஞ்சம் நெருங்கினர். சட் டென்று மறுபடியும் இரண்டு காலிலும் முன்போல் அடி படவே, அப்பா, இது என்ன, இப்படி என்காலில் அடிபடு கிறதே, ஏதாவது காலில் விழுகிறதா, என சொல்லிக் கொண்டே அடியின் வலிதாங்க முடியாமல் கீழ் உட்கார்ந் தார். உடனே தன் தலையை ஏதோ உறுதியாய் பற்றிக் கொண்டு, பட்டுப்பட்டென தன்னைக் கட்டைகொண்டு அடிக்கிறதுபோல் பலமான அடி தன்னுடலெங்கும் விழுந் தது. தலைமயிரைப் பிடித்த பிடியாக கிருகிருவென்று சுழற்றினபடியும் அடி விழுந்தபடியுமாக ஒரு கால்மணிநேரம் ராட்டினம் சுழற்றினற்போல் உபாத்தியாயர் சுழற்றப்பட்டு ஒரு மூலையில்போய் தொப்பென்று விழுந்தார். உபாத்தி யாயரின் தலைமயிர் பேர்ப்பாதி பிய்ந்துபோயிற்று. மேலெல் லாம் இரத்தக் காடாயிற்று. அந்த அறையெல்லாம் அப்ப டியே சுற்றி வருகிறதுபோ லிருக்கிறது. வாயோ பேசமுடிய

வில்லை. அப்படியே ஒரு கால்மணிநேரம் மூச்சுபேச் சில்லாமல் விழுந்துகிடந்தார். உபாத்தியாயர் பாடு எமதண்டனை அனுபவித்தவர்போல் இருக்கிறர். பின் ஒருவாறு சற்று ஸ்மரணையுண்டாகி, தான் பட்ட அவஸ்தையை எண்ணிப் பார்த்தார். ஐயோ! நாமென்ன இன்று இப்பேர்ப்பட்ட அவதிக் குள்ளானேம். தலைமயிரைப் பிடித்து நம்மை இப்படி சுற்றி மேலெல்லாம் ரணக்காயமாகும்படி அடித்தது யார்? ஒருவேளை இவ்வறையில் ஏதாவது இருந்து இப்படி நம்மை ஹிம்ஸைக்குள்ளாகியதோ, அல்லது தவமணி சொன்ன பெண்பிள்ளைதான் இப்படிச் செய்தாளோ? அல்லது அவள் ஏவலால் வேறுயாராவது செய்தார்களோ? அல்லது அவளை நாடிவந்த வேறு யெவனுவது இப்படி செய்தானே? அவள் புருஷன் நாம்வருவது தெரிந்து இங்கு ஒளித்திருந்து இப்படி நம்மை அங்கபங்கம் செய்தானே? அன்றி தவமணிதான் இப்படி செய்யும்படி ஏற்பாடு செய்து வைத்திருந்து நம்மை அவதிப்பட வைத்தானே? அப்படி இருக்காது. அவனும் இவ்விஷயத்தில் ஏமாந்து போயிருப்பான். ஐயோ, என் உடலெல்லாம் வலிக்கின்றதே, மூச்சுவிட முடியவில்லையே. அது என்ன மனிதனுல் செய்யப்பட்ட காரியமாயில்லையே. பேய் அல்லது இராக்ஷதசெய்கையா யிருக்கிறதே. என் ஜன்மத்திலும் இப்பேர்ப்பட்ட துன்பத்தை அடைந்ததில்லையே. இனி என்னுயுள் முடியும் வரையில் இச் சம்பவத்தின் ஞாபகம் மறவாதே. பெண்ணுசையின் பயன் இதுதானு! படத்தைக்கண்டு யான் கொண்ட ஆசையின் பலன், இப்படி முடிந்ததே. இது தான் காமத்தின் கஷ்டமென்பதுபோ லிருக்கிறது. ஐயோ! இது வெளிக்குத்தெரிந்தால் அந்த அவமானத்தை தாங்கி யான் எவ்விதம் வெளியில் தலைகாட்டுவேன். ஐயோ! எழுந்திருக்கக்கூட முடியவில்லையே, என மனமேங்கி வருத்தப்

பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் மறுபடியும் அங்கு சிறிது சப்தம் கிளம்பியது. உபாத்தியாயர் உடல் நடுங்கி, திகிலடைந்து, இதோடு தப்பினால் போதுமென எண்ணி மஹா பயம்கொண்டு வெளியிலோட எழுந்தார். ஆனால் எழுந்திருக்க முடியாமல் தொப்பென விழுந்தார். அச் சமயம் பழைய சப்தம் உண்டாக, உயிர் உடலை விட்டுப் போனவர்போல் மெய்விலர்த்து, உட்கார்ந்தபடியே மெல்ல நகர்ந்து கதவண்டைவந்து கதவைத் திறந்தார். பாவம், கதவு திறக்கமுடியவில்லை. வெளியில் தாள்போடப் பட்டிருந்தது. என்செய்வார் உபாத்தியாயர்? யார் கதவைத் தாள்போட்டுவிட்டது? தவமணி வெளிக்குறட்டில் இருந்தானே, அவனை யாராவது ஹிம்ஸைப்படுத்திவிட்டு கதவைத் தாளிட்டு விட்டார்களோ? அல்லது தவமணி தான் தாளிட்டு விட்டானோ? என் செய்வது? இங்கிருந்தால் மீதி இருக்கும் உயிர் போய்விடும் போலிருக்கிறதே. அட ஆண்டவனே! இது உனக்குத் தர்மமா? என்று எண்ணும் சமயம் மறுபடியும் சப்தம் உண்டாகிறதைக் கேட்டு, பயங்கொண்டு தவமணியைக் கூப்பிட்டாவது பார்ப்போமென்று, சாதாரண தொனியால், தவமணி! எனக் கூப்பிட்டார். உடனே தவமணி, ஏன் ஸார், தூக்கம் வருகிறது. யான் வீட்டுக்குப் போகட்டுமா ஸார்? என்றான். (இப்பொழுது உபாத்தியாயர் மனதில் என்ன எண்ணி இருப்பாரென்று வாசக நண்பரே யூகித்துப் பாருங்கள்.) உபாத்தியாயர் அப்பா போய்விடாதே, தவமணி, ஜல்தி வா இங்கு, கதவைத் திறந்துவிடு, நான் பட்டது போதும்.

தவ.—என்ன ஸார், பேசி ஆய்விட்டதோ அம்மாளிடம்? இவ்விருட்டில் ஏன் வீட்டுக்குப் போகிறீர்? அங்கேயே இருந்துவிட்டு விடியற்காலையில் போகிறதுதானே?

த-உபா.—அப்பா, பட்டது போதாதா? இன்னுமா

இதனுள்ளிருந்து நான் படவேணும்? உனக்குப் புண்ணியமாயிருக்கும், உடனே கதவைத் திறந்துவிடு, என்றார்.

தவ.—கொஞ்சமிருங்கள் ஸார். என்ன சமாச்சாரம்? நான் யாராவது இரண்டு மனிதர்களை அழைத்து வருகிறேன், என்னால் திறக்கமுடியாது.

த-உபா.—அடே அப்பா தவமணி, உன்னால் திறக்க முடியாதா? கதவை யார் தாள்போட்டது? ஏன் இரண்டு பேரை அழைத்து வருகிறாய்?

தவ.—கதவை நான் தான் தாளிட்டேன். ஆனால் திறப்பது மாத்திரம் இரண்டுபேரை சாக்ஷி வைத்துக் கொண்டு தான் திறக்கவேண்டும்.

த-உபா.—தவமணி, நீ சொல்லும் அழுத்தமான வார்த்தையின் அர்த்தம்தான் என்ன? ஏன் நீ கதவைத் தாளிட்டாய்? எதற்காக சாக்ஷி வைத்துக்கொண்டு திறக்க வேண்டும்? நான் உன் பேச்சைக் கேட்டு, பட்ட அவஸ்தை போதும். உடனே கதவைத் திறந்துவிடு.

தவ.—கதவைத் திறக்கும் விஷயம்தான் சந்தேகத்திலிருக்கிறது ஸார். இரண்டுபேரைச் சாக்ஷிவைத்துக்கொண்டு தான் திறக்கவேண்டும்.

த-உபா.—எனப்படி? யான் இவ் வேளையில் இங்கே இக்கோலத்துடனிருக்கிறதை வேறு யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?

தவ.—நீங்கள் இருக்கும் நிலைமையைப் பார்த்து அவர்கள் ஏதாவது நினைக்கவேண்டுமென்பது தான் எனது அபிப்பிராயம். மேலும் நீர் இங்கு இவ்வேளையில் ஏன் வந்தீர் எனவும் அவர்கள் அறியவேண்டும்.

த-உபா.—ஆ, என்னசொல்லுகிறாய்? இப்படி நீ சொல்வதின் கருத்தென்ன? நீதான் என்னை இப்படி அவதிக்குள்ளாக்கியதற்கு மூலகாரணனா?

தவ.—ஆம். அப்படிதான் எண்ணவேண்டும்.

த-உபா.—நீ ஏன் இவ்விதம் என்னைக் கஷ்டப்படுத்தினுய்? உன் வஞ்சக எண்ணம் இப்படியா முடிந்தது? நீ சொன்னதெல்லாம் பொய்தானு?

தவ.—பொய்யோ மெய்யோ நீரே தெரிந்துக் கொள்ளும்.

த-உபா.—பெண்ணென்றென்னை சொல்லி அழைத்து வந்தது பொய்வார்த்தைதானே?

தவ.—அதை நீர் இன்னும் தெரிந்துக் கொள்ள வில்லையா?

த-உபா.—இப்போது அறிந்தேன். உள்ளே பெண்ணென்பது இல்லை. ஆனல் இங்கு உள் நடந்த சமாச்சாரம் உனக்குத் தெரியுமா?

தவ.—ஒருவாறு தெரிந்துக்கொண்டேன்?

த-உபா.—என்னை இப்பேர்ப்பட்ட பாடு படுத்தினது யார்?

தவ.—அதைக் கொஞ்சம்நாழிகைக்குள் நீரே தெரிந்துக்கொள்வீர்.

த-உபா.—சரி, ஏன் என்னை இப்படி தொந்திரவுக்குள் ளாக்கினுய்?

தவ.—வாயால் சொல்வதற்கு இஷ்டமில்லை.

த-உபா.—சரி, உன்னுடன் என்னல் பேசுவதற்குக் முடியவில்லை. இங்கே இருந்தால் உயிர் போய் விடும் போலிருக்கிறது. நீ கதவைத்திற. நான் போய்விடு கிறேன். போதும் போதும் பெண்ணுல் பட்ட சுகம்.

தவ.—முடியாது. நான் சொல்லும் நிபந்தனைக்குட்பட்டால் தான் நான் இதைத் திறந்துவிடுவேன். இல்லாவிடில் உள்ளிருக்கும் நண்பருடன் நீர் இரவைக் கழிக்கவேண்டியது தான். காலையிலாவது, அல்லது இன்னும் கொஞ்சம்

நாழிகை சென்றுவது இரண்டு மூன்றுபேர் சாக்ஷிகளைக் கொணர்ந்து அவர்களிடம் நீர் இங்கு வந்த விபரங்களை யெல்லாம் சொல்லியபின் தான் உம்மைத் திறந்துவிடுவேன்.

த-உபா.—எதற்காக சாக்ஷிகள்? நான் என்ன நிபந்தனைக் குட்படவேண்டும்? உனது அபிப்பிராயத்தின் அர்த்தம் தான் என்ன? விபரமாய் சீக்கிரம் சொல், என ஆத் திரத்துடன் கேட்டார். ஏனடா என்னை இப்படி அவமா னப்படுத்தப் பார்க்கிறாய்?

தவ.—ஐயா தலைமை உபாத்தியாயரே! உம்மை ஏன் நான் இப்படிச் செய்தேனென்று உமக்குத் தெரியவில்லை போலிருக்கிறது. நான் சொல்கிறேன் கேளும். நீர் வீணாக தமிழுபாத்தியாயர் மீது குற்றமேற்படுத்தி அவரை வேலையி லிருந்து நீங்கும்படி உத்திரவு செய்திருக்கிறீர். அது கூடாது. பாபம், அவர் யாதொரு விஷயமும் தெரியாதவர். ஆகையால், அவரைப் பள்ளிக்கூடத்திலிருந்து நீக்குவது ஆகாதகாரியம். ஆகையால் நீர் நாளையே உமது உத்திரவை மீட்டுக்கொண்டு, கல்விச்சாலை பிள்ளைகளும் உபாத்தியாயர் களும் அறிய, அவர்மீது பிசகு இல்லை என்றும், அவரை உத்தியோகத்திலிருந்து நீக்கப் போவதில்லை என்றும் சொல்ல வேண்டும். நீர் இதற்கு ஒத்துக்கொள்ளாமற் போனால் உம்மை வெளிப்படுத்த எனக்கிஷ்டமில்லை.

த-உபா.—(இதைக்கேட்டு, மனம் திடுக்கிட்டு, கொஞ்சம் நாழிகை பேசாமல் மௌனமாயிருந்து,) ஆனால் அத்துஷ்ட காரியத்தை செய்தது யார், உனக்குத் தெரியுமா?

தவ.—தெரியும். ஆனால் அதை இன்னாரென சொல்ல முடியாது.

த-உபா.—தமிழுபாத்தியாயர் அல்லவா?

தவ.—இல்லை, நிச்சயமாய் அவரல்ல.

த-உபா.—ஆனால் பின் யார் அக்காரியத்தைச் செய்தது?

தவ.—செய்தவரை நான் இப்பொழுது சொல்லமாட்டேன். பின் உமக்குத்தானே தெரியவரும். நீர் எனது ஏற்பாட்டிற்கு ஒத்துக்கொள்கிறீரா இல்லையா?

த-உபா.—நீ செய்தவர்களைச் சொல்ல முடியாதென்றால், அவரேதான் அக்காரியத்தைச் செய்திருக்கவேண்டும். ஆகையால் நான் அவரை வேலையில் வைத்திருக்கமுடியாது.

தவ.—எந்தக் காரியம் எப்படி ஆனாலும் ஆகட்டும். தமிழுபாத்தியாயரை நீர் வேலையிலிருந்து நீக்குவதில்லை என்று ஒத்துக்கொள்ளவேண்டும். இல்லாவிடில் நீர் இதற்குள்ளாகவேதான் இருக்கவேண்டும். ஒரு வேளை நாள் கணக்காக இருந்தாலுமிருக்கலாம். உம்மால் ஆனதை நீர் செய்துக்கொள்ளும்.

இச்சமயம், பழையபடி சப்தம் கேட்க உபாத்தியாயர் நடுநடுங்கி, அப்பா தவமணி, எனக்கு இங்கிருக்க இஷ்டமில்லை. ஒவ்வொரு விநாடியும் எனக்கு ஒவ்வொரு யுகம்போலிருக்கிறது. உடனே கதவைத் திறந்துவிடு.

தவ.—நான் சொன்னதற்கு இணங்கும். இல்லாவிடில் உள்ளேயே இரும்.

த-உபா.—உம். சரி. நாளை உன்னிஷ்டம்போல் செய்துவிடுகிறேன், கதவைத் திறந்துவிடு.

தவ.—வாயால் சொல்லி விட்டால் முடியாது ஸார். நான் ஒரு கடிதம் தருகிறேன், அதில் நீர் கையெழுத்திடவேண்டும். நீர் நாளை காலையில் கல்விச்சாலைக்குச் சென்றதும் தமிழ் உபாத்தியாயருக் கிட்ட கட்டளையை வாபீஸ் வாங்கிக்கொண்டு, எல்லாரிடமும் அவர் நிரபராதி எனவும் தெரிவிக்கவேண்டும். இன்றேல், நீர் கையெழுத் திடப்போகும் அக்கடிதத்திலுள்ள விஷயங்களை நாளை பிற்பகலுக்கு மேல் எல்லோரும் அறியும்படி செய்துவிடுவேன்.

யான் சொல்வதில் சிறிதும் தவறமாட்டேன். இதற்காகக் கொஞ்சங்கூட நான் அச்சப்படவும் மாட்டேன்.

த-உபா.—சரி, என்னை வெளியில் திறந்துவிடு. பின் பேசிக்கொள்ளலாம். நீ கொடுக்கும் கடிதத்தை இவ் விருட்டில் எப்படி படித்து கையெழுத்திடுவது ?

தவ.—நீர் கடிதத்தில் கையெழுத்திடாமல் உம்மை வெளியில்விட எனக்கிஷ்டமில்லை. நீர் கடிதத்தை உள்ளிருந்த படியே படித்து கையெழுத்திட ஏற்பாடு செய்கிறேன். உம்மை வெளியில் விட்டுவிட்டு கேட்டுக்கொண்டிருக்கும் அவ்வளவு மூடனல்ல யான் நீர் கையெழுத்துப் போடும் என்று சொல்லிக்கொண்டே அவ்வறையின் சுவற்றிலிருந்த ஒரு சிறு சாளரத்தில் ஒரு விளக்கையும் கடிதத்தையும் வைத் தான். உபாத்தியாயர் அக்கடிதத்தை எடுத்து அவ்விளக்கு வெளிச்சத்தில் வாசித்தார். அதிலிருந்ததாவது :—

யான் ஒரு பெண்ணின் படத்தைக் கண்டு ஆசைப்பட்டு தவமணியிடம் சொல்லி ஏற்பாடுசெய்து அப்பெண்ணின் வீட்டுக்குப் போனேன். அப்பெண்ணுக்குரித்தோர் என்னை அடித்து அவமானம் பண்ணினர்கள். நான் தப்பினதே அரிதாயிருந்தது. தவமணிதான் என்னை தப்பித்துவிட்டான். நான் செய்தது தப்பிதம். பெண்ணுக்குரித்தோர் இதைப் பற்றி நடவடிக்கை எடுத்தால் அதற்கு நான் சம்மதப்படு கிறேன் என எழுதி இருந்தது.

இதைப் படித்துவிட்டு உபாத்தியாயர், அடே தவ மணி, நீ மிகக் கொடிய தண்டனையை ஏற்படுத்தியிருக் கிருய். இதில் நான் கையெழுத்திடுவது முடியாதகாரியம்.

தவ.—ஆனல் அறைக்குள் அடைபட்டுக்கிடக்கவேண்டி யதே. விடிந்தபின் பலர் உம்மைப் பார்க்கவேண்டியதே. நீர் வெளியேற வேண்டுமென்றல் உடனே கையெழுத் திடும்.

த-உபா.—ஆமாம், கையெழுத்திட்டுக் கொடுத்துவிட்டால் நீ அதை நாளைக்கு வெளிப்படுத்திவிடில் எனக்கு பெரும் அவமானமாகவல்லோ முடியும்.

தவ.—நான் அப்படிச் செய்யமாட்டேன். உமது வார்த்தையின்படி நீர் தமிழ் உபாத்தியாயரை வேலையிலிருந்து நீக்காதிருக்க ஏற்பாடு செய்துவிடும். நீர் நாளை காலையில் அப்புடிச் செய்யாவிடில், நாளை மத்தியானம் சமாச்சாரம் வெளியாய்விடும். இது உண்மையானவார்த்தை. நீர் கையெழுத்துப்போட்டு தருகிறீரா இல்லையா? நான் போகவேண்டும், தூக்கம் வருகிறது.

த-உபா.—சரி என்று, வேறு வழி இல்லாமல் கையெழுத்துப்போட்டு, வெளியில் கொடுத்துவிட்டார். கதவு திறக்கப்படுவதற்கு எதிர்பார்த்திருந்தார்.

தவ.—ஸார் உங்கள் அங்கவஸ்திரத்தையும், நீங்கள் கொணர்ந்த சாமான்களையும், உள்ளேயே வைத்துவிட்டு வாருங்கள்.

த-உபா.—என்ன இது? ஒவ்வொன்றுய் சொல்லுகிறுயே, இவைகள் ஏன்?

தவ.—ஒருகால் நீர் வார்த்தை தவறிடின், அவைகளையும் சாக்ஷி வஸ்துக்களாக நான் உபயோகப்படுத்திக்கொள்வேன்.

த-உபா.—சரி, அப்படியே செய்கிறேன் என்று சொன்னுர்.

இச்சமயம் அண்டம் கலங்கும்படி ஒரு ஓலமிட்ட சப்தம் கேட்கவே, உபாத்தியாயர் பலதடவை அதற்கு முன் அச் சப்தத்தைக் கேட்டிருந்தும் அவ் வேளையில் இது எதனுடைய சப்தம் என யூகித்தறிய முடியாமல், ஐயோ! இந்த சப்தம் போட்டது பேயோ, பிசாசோ, ராக்ஷதனே தெரியவில்லை என்று உடல் நடுங்கினபடி பயத்தால் நடுங்கிக்

கொண்டிருக்கும் சமயம், அவ்வுருவம் தன்னை நோக்கி வருவதைக்கண்டு, தேகம் அவருக்கு உதரலெடுத்துக்கொண்டது. வாய் பேசமுடியாமல், த—வ—ம—ணி கதவு திற. என்று பயத்தால் உளறினார். தவமணி அப்பொழுதுதான் கதவை மெள்ள திறந்தான். சரியாய் திறப்பதற்கு முன், உபாத்தியாயர் தானே கதவைத் தள்ளிக்கொண்டு, தொப்பென்று வெளிவந்து விழுந்தார். விழுந்தெழுந்து பார்க்க தவமணியுடன் இரண்டு நபர் நின்றிருப்பதைக் கண்டு, தன் அலங்கோலத்தை அவர்கள் பார்த்திருப்பார்களென்று அச்சப்படலானார் உபாத்தியாயர்.

தவ.—ஸார், நீங்கள் இவர்களைப்பற்றி அச்சப்பட வேண்டாம். நீங்கள் சொன்னபடி நடந்துகொண்டால், உமது சமாச்சாரத்தை, இவர்கள் அணுவளவு கூட, வெளிவிடமாட்டார்கள். நீங்கள் சொன்னது தவறினால் தான் இவர்களுடைய வாய் இதைப்பற்றி விளம்பரப்படுத்தும்.

த-உபா.—சரி, எப்படியாவதுபோ, என்னைவிடு, நான் போகவேண்டும்.

இல்லை ஸார், உள்ளிருப்பவரைப் பாருங்கள் ஸார், என்றான் தவமணி.

த-உபா.—அடே தவமணி, உன் மேலிருக்கும் கோபம் எனக்குச் சொல்லமுடியவில்லை. துஷ்டப்பயலே, உன்னை என்ன செய்தால் என் கோபம் ஆறும் என சொல்லிப் பல்லைக்கடித்தார்.

ஸார், உங்களுக்குக்கோபம் அதிகம் வருமென்று எனக்குந் தெரியும். ஆனால் அக்கோபத்தை நீர் அடக்கிக்கொள்ள வேண்டியதே ஒழிய அக்கோபத்தைக்கொண்டு உம்மால் என்னை ஒன்றும் செய்யமுடியாது. ஏதாவது என்மேல் வீரத்தனத்திற்கு ஆரம்பித்தால் சமாச்சாரம் வெளிப்பட்டுவிடும் என்றான் தவமணி. மந்திரக்கட்டு கட்டின நாகப்

பாம்புபோல் பெருமூச்சை வெளிவிட்டு சீறிக்கொண்டு, வாய்பேசாமல் போக அடி எடுத்து வைத்தார் உபாத்தியாயர்.

தவ.—ஸார், அறையிலுள்ளதைப் பாருங்கள், என சொல்லிக்கொண்டே கதவைத் திறந்து விளக்கு வெளிச்சத்தைக் காண்பித்தான். வலிக்கட்டாயத்தின் பேரில் உபாத்தியாயர் சற்று திரும்பிப் பார்த்தார். ஆ, அங்கொரு காட்சியைக் கண்டார், என்ன காட்சி, ஆ, அது ஒரு கழுதை!

இதுதான் நம்மை இவ்வளவு ஹிம்ஸைக்குள்ளாக்கியது என எண்ணிக்கொண்டு, தவமணியின்மேல் மகா கோபமும், வருத்தமும் அடைந்து, வாய்பேசாமல், கீழிறங்கி, கொஞ்சதூரம் சென்று ஒரு வண்டியேறி தன் வீடடைந்தார்.

தவமணி, அறையினுள்ளிருந்த உபாத்தியாயர் வைத்துப்போன பொருளையும், அங்கவஸ்திரத்தையும் எடுத்துக்கொண்டு, கழுதையை வெளியில் துரத்திவிட்டு, தனக்கு இன்று இந்த கழுதை செய்த பேருபகாரம் மிக பலனைத் தந்தது என அகமகிழ்வுகொண்டு சென்றான்.

மறுநாள் தலைமை உபாத்தியாயர், கல்விச்சாலைக்குச் சென்றார். நமது தவமணியைக் கண்டதும் கோபம் கட்டுக்கடங்காது கிளம்பியது. இருந்தாலும் அதைமீறவிடுதல் தனக்குக் கெடுதியாக முடியுமென் றெண்ணி, பேசாமல் அதை அடக்கிக்கொண்டு, சமாச்சாரத்தை வெளிப்படுத்திவிடுவானென் றெண்ணி, உடனே அவ்வகுப்புக்குப் போய் தமிழுபாத்தியாயர் மேல் குற்றமில்லை என்று யாவரும் அறியச் சொல்லிவிட்டு அவர் உத்திரவிட்டதை வாபீஸ் வாங்கிக்கொண்டார். தவமணியும் தான் சொன்னபடி உபாத்தியாயர் செய்தியில் ஒரு அணுவேனும் வெளிப்படுத்தவில்லை.

## அத்தியாயம்—3

### சில்லரைச் சேஷ்டை : 'எமகாதகன்' என்ற பட்டம்

சின்னாட்கள் சென்று கவனிக்கின் கல்விச்சாலையில் யாதொரு விசேஷமும் நடைபெறவில்லை. எல்லாம் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. ஒருநாள் பள்ளிக்கூடப் பிள்ளைகள் விளையாடுமிடத்தில் பசங்கள் பலவித விவாதம் செய்து கொண்டு, ஒவ்வொருவனும் தான் தான் சாமர்த்தியமான காரியங்கள் செய்வதில் மகா கெட்டிக்காரன் எனப் பெருமை பேசிக்கொண்டிருந்த சமயம், தவமணி அவ்விடம் வந்து தானும் சில அபூர்வ காரியம் செய்வதாகச் சொன்னான். பிள்ளைகள் அது என்ன காரியம் என

தவ.—நான் செய்யப்படும் காரியங்கள் மூன்று. அம்மூன்று காரியமும், வெகு ஆச்சரியமானதும் கஷ்டமானதும், வேறு யாவரும் செய்யமுடியாததுமானவை. அப்படிப்பட்ட காரியங்கள் யான் செய்கிறேன்.

பிள்ளைகள்.—அவை யென்ன அதிசய செயல்கள்? என்னென்ன சொல்?

தவ.—1. யான் மார்பால் கல்லை உடைக்கிறேன்.

2. ஒரு அடியில் தேங்காய் உடைப்பேன்.

3. நான் இரு கண்ணையும் மூடிக்கொண்டு ஒரு காரியம் செய்வேன். ஆனால் இரு கண்களையும் திறந்து கொண்டு வேறு யாவராலும் நான் செய்யும் அதே காரியத்தை செய்யமுடியாது.

பிள்ளைகள் இதைக் கேட்டுக் கெக்கொலியிட்டு தவமணியைக் கேலி செய்தார்கள். எங்கே, நீ மார்பால் கல்லை

உடைக்கிறே னென்று சொன்னுயே, அதை மாத்திரம் நீ செய்துவிடு பார்ப்போம். மீதி இருப்பவைகளை— அதாவது : ஒரு அடியில் தேங்காயை உடைக்கிறது, நீ கண்ணை மூடிக்கொண்டு செய்யும் காரியத்தை நாங்கள் கண்ணைத் திறந்துக் கொண்டு செய்ய முடியாதது—நாங்கள் செய்கிறோம். அட தவமணி, நீ சுத்தப் பயித்தியக்காரன், எங்கே நீ செய் பார்ப்போம் என்றார்கள்.

தவ.—மார்பால் கற்களை உடைக்கிறேன். ஆனால் நான் குப்புறப் படுத்து மார்பால் கல்லை யுடைக்கும் பொழுது, பளுவுக்காக எனது முதுகின் பேரில் யாராவது ஒருவன் உட்காரவேண்டும். உடைக்கிற வரைக்கும் எழுந்திருக்கப் படாது. அப்படிச் செய்கிறதாயிருந்தால் நான் மார்பால் கல்லை உடைக்கிறேன். இதற்காக ரூபாய் ஐந்து பந்தயம் கட்டுகிறேன். நானுடைக்கா விட்டால் ரூபாயை எடுத்துக் கொள்ளலாம் என்றான்.

பிள்ளைகளில் தண்டபாணி என்பவன், தவமணி, நீ மார்பால் கல்லுடைக்க முடியா தென்று நான் ரூபாய் ஐந்து பந்தயம் கட்டுகிறேன். உடைத்தால் நீ யெடுத்துக் கொள். அந்தக் கல்லை இரண்டாக்கி விட்டால் போதும். இல்லாவிடின் உன் ஐந்து ரூபாயை நான் எடுத்துக் கொள்ளுவேன் என்றான். சரி என்று தவமணி ஒத்துக் கொண்டான்.

மற்றொரு பிள்ளையான சட்டநாத னென்பவன், தவமணி, நான் ஒரே அடியில் தேங்காயை யுடைத்து விடுகிறேன் என்றான். தவமணி உன்னால் முடியாது என்று அவனிடம் பந்தயம் ரூபாய் ஐந்து கட்டிக்கொண்டான். மற்றொரு காரியத்தை சண்முகசுந்தரம் என்பவன், தவமணி, நீ கண்ணை மூடிக்கொண்டு செய்கிற காரியத்தை நான்

கண்ணைத் திறந்துக் கொண்டு செய்கிறேன், என்று ஐந்து ரூபாய் பந்தயம் கட்டினான். ஆக மொத்தம் ரூபாய் பதினைந்து பந்தயம் கட்டிக் கொண்டார்கள்.

தவமணி இரண்டு முழு செங்கல்களைக் கீழடுக்கி வைத்துவிட்டு, அவைகளின் மேல் மார்பு பொருந்தும்படி குப்புறப் படுத்துக் கொண்டு, தன் முதுகின் மேல் ஒருவனை உட்காரச் சொன்னான். பந்தயம் கட்டின தண்டபாணியென்பவனே முன்னுக்கு வந்து, நானே உட்காருகிறேனென்று தவமணியின் முதுகின்மேல், அவன் தலைப் புறத்தைப் பார்த்தாற்போல், உட்கார்ந்துக் கொண்டான். தவமணி அவனிடம் நான் கல்லை உடைக்கும் வரையில் நீ எழுந்திருக்கக் கூடாது. நீ எழுந்து விட்டால் கல்லை உடைப்பது எனக்குக் கஷ்டமாக முடியும் என்றுரைக்க, சரி என மேலுட்கார்ந்தவன் ஒத்துக்கொண்டான். தவமணி கொஞ்ச நேரம் மூச்சுப் பிடித்துக் கொண்டு கண்ணை மூடினபடி இருந்தான். பிள்ளைகளெல்லாம் இவன் கல்லை உடைக்கப் போகிறானென்று இவனையே கூர்மையாக கவனித்துக் கொண்டிருந்தார்கள். திடீரென பட்டு, பட்டு, பட்டு என்று தண்டபாணியின் முதுகில் தவமணி காலை மடக்கி குதிகாலால் சரமாரியாய் உதைத்தான். உட்கார்ந்திருந்த தண்டபாணி மனங்கலங்கி, திப்பிரமை கொண்டு எழுந்து விட்டான். தவமணியும் எழுந்து, கல்லுடையும் சமயத்தில் ஏனப்பா எழுந்துவிட்டாய்? காரியம் கெட்டுப் போச்சே. எவ்வளவு தம் பிடித்துக் கஷ்டப்பட்டு உடைக்கும் சமயம் இப்படிச் செய்யலாமா? உடைக்கும் வரையில் எழுந்திருக்கக் கூடாது என முந்தியே சொன்னேனே. நீ சட்டென எழுந்ததால் மூச்சுப் பிடித்துக்கொண்டதே எனக்கு. மறுபடியும் கல்லுடைப்பதென்றால் கால்மணி நேரம் யாராவது முதுகின் பேரில் உட்கார வேண்டுமே, என் செய்வேன், என உதை

பட்டவன் தன் கஷ்டத்தை சொல்லுவதற்குக் கூட இடைவிடாமல் சரமாரியாய் வார்த்தையைப் பொழிந்தான்.

தண்.—ஆமாம்; உன் முதுகில் உட்கார்ந்திருந்த என்னை ஏன் அப்படி உதைத்தாய்? ஐயோ! என் உடம்பெல்லாம் வலிக்கின்றதே.

தவ.—நான் வெகு நாழிகை மூச்சு பிடித்திருந்தேன். உடைக்கும் சமயம் அதன் வேகம் அதிகப்பட்டதால் கால் ஒரு மாதிரி அசைந்தாடிற்று. இதற்குப் பயந்து எழுந்து ஓடி விடுவதா? மறுபடியும் உட்கார். இத்தடவை உடைத்து விடுகிறேன், வா என்றான்.

உதை பட்டவன் கூடாது, நான் உட்காரமாட்டேன், என்றால் முடியாது, முடியாது. இப்போது பட்டது தான் என் ஜன்மத்திற்கும் போதும் போல் தெரிகிறது. இன்னும் பட என்றால் முடியாது, என்று வருத்தத்துடன் சொன்னான். தவமணி மீதி இருக்கும் பிள்ளைகளைக் கேட்டான். ரூபா பத்து கொடுத்தாலும் யாரும் உட்காரமாட்டோம் என்று சொல்லி விட்டார்கள். மீண்டும் தவமணி பந்தயம் கட்டினவனையே கூப்பிட அவன் என் ரூபாய் போனாலும் போகிறது. நான் உட்கார மாட்டேனென்று சொல்லி மெதுவாக நழுவி விட்டான். தவமணி மிக சலிப்புடன் தன் முயற்சி வீணாயிற்று என்று வருத்தப்பட்டுக் கொண்டான்.

ஒரு அடியில் தேங்கா யுடைக்கிறேனென்று பந்தயம் கட்டிக் கொண்டவன் தேங்காயுடன் தவமணியினிடம் வந்து, 'மார்பால் தான் கல்லுடைத்துவிட்டாய், இப்போது என்ன சொல்லுகிறாய்? நான் ஒரே அடியில் தேங்காய் உடைக்கிறேன், பந்தயத்தை வைத்துக் கொள்' என்றான். அதற்கென்ன, ஒரு தரம் பேசினால் பேச்சு மாறலாமா? அப்படி ஒரு அடியில் தேங்காயுடைத்து விடு, ஐந்து ரூபாய்

எடுத்துக் கொள் என்ருன். சட்டநாதன் என்பவன், ஐந்து ரூபாய் வரும் என்ற மகா சந்தோஷ சித்தனுய் அத்தேங் காயை ஓங்கி ஒரு கல்லில் அடித்தான். தேங்காய் தூள் தூளாய் விட்டது. உடைத்தவன் ரூபா யெடு என்ருன்.

தவ.—யான் சொன்னபடி செய்யாமல் வேறு தப்பு விதமாய் தேங்காயையுடைத்து விட்டாயே, இது நியாய மாகுமா? இப்படியல்ல நான் சொன்னது பந்தயம் என் னைச் சாரவேண்டியதே.

சட்டநாதன்.—தவமணி, பின் எப்படி உடைக்கிறது? ஒரு அடியில்தானே உடைக்கச் சொனுய்?

தவ.—ஆமாம்.

சட்.—பின் என்ன? உடைத்து விட்டேன்.

தவ.—அப்படியல்ல யான் சொன்னது. ஒரு அடியால் உடை யென்ருல், நமக்கு இரண்டு காலடிகள் இருக்கின்றன. அதில் ஒரு காலடி மாத்திரம் பூமியில் வைத்துக் கொண்டு மற்ருெரு காலடியை உயரத் தூக்கிக் கொண்டு உடைக்க வேண்டும். காலடியைச் சுருக்கமாக, அடி, என்று கூறுவ துண்டு. அதைக் காலால் அளந்துப் பார்த்தேன் எட்டடி இருந்தது, என்று சொல்வது உலக வழக்கம். காலடியைச் சுருக்கமாக, அடி, என்று சொல்வதுண்டு. அதைத்தான் யானும் குறித்துக் கூறினேன். நீ தவறி நடந்துகொண்டாய். பந்தயம் தாமுடியாது என்ருன்.

பந்தயம் கட்டினவன் சம்மதிக்காமல் ஊடாடிக்கொண் டிருக்கும் சமயம், மூன்ரும் பந்தயம் கட்டின ஷண்முக சுந் தர மென்பவன் எல்லாரையும் சமாதானப்படுத்திக் கொண் டே முன்னேறி வந்து தவமணியைப் பார்த்து, சரி, நீ இவ் விரண்டு பேரையும் ஏமாற்றி விட்டாய். என் பந்தயப்படி நீ கண்ணை மூடிக்கொண்டு என்னமோ செய்வதாகச் சொன்

ஞய். அதை நீ செய். நான் அதை கண்ணைத் திறந்துக் கொண்டு செய்கிறேன் என்றான்.

தவ.—ஆ இதோ தடையின்றி செய்கிறேன், எல்லோரும் பாருங்கள். பின் உங்களால் கண்ணைத் திறந்துக் கொண்டு செய்ய முடியாது எனச் சொல்லாதேயுங்கள், என்று கூறிக் கொண்டே கீழ் உட்கார்ந்து, கண்ணைக் கெட்டியாய் மூடிக்கொண்டு, கீழிருக்கும் மணலை வாரி வாரி தன் கண்களின்மேல் போட்டுக் கொண்டான். ஐந்து நிமிஷம் இப்படிச் செய்த பின், மண்ணை உதரித் தள்ளி விட்டு, எங்கே நீ கண்ணைத் திறந்துக் கொண்டு நான் செய்தது போல் செய் பார்ப்போம் என்று ஷண்முக சுந்தர மென்பவனை உசாவினான்.

ஷண்முக சுந்தரம்.—கண்ணைத் திறந்துக் கொண்டு மண்ணைவாரிப் போட்டுக் கொள்வது, கண்ணைக் கெடுத்து விடும் காரியம் அது என்னால் முடியாது என்றான்.

தவ.—பந்தயம் உனக்குக் கிடைக்காது, பந்தயம் என்னுடையதே எனக் கூவிக் கொண்டே தன் வகுப்பிற்கு சென்று விட்டான்.

பந்தயத் தொகை தவமணி இடமிருந்ததால், பிள்ளைகள் தாங்கள் சம்பளத்திற்காக கொணர்ந்த பணத்தை இப்படி இவன் ஏமாத்தி, வாங்கிக்கொண்டானே பெற்றோர்களுக்கு என்ன சொல்வது, என ஏங்கி, இச்சங்கதியை தலைமை உபாத்தியாயரிடம் போய் கம்பிளெயின்ட் செய்தார்கள். அவர், இதைக் கேட்டு வயிறெரிந்தாரே ஒழிய வேறொன்றும் செய்ய தைரியமில்லை. எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்தது போலாயிற்று உபாத்தியாயருக்கு. தான் விசாரிக்கிறேனென்று பையன்களைப் போகச் சொல்லி விட்டார்.

மறுநாளும் விளையாடு மிடத்தில் பசங்க ளெல்லாம் ஒன்ருகக் கூடி இன்று தவமணியை எப்படியாவது ஏமாற்ற வேண்டும், என்று பேசிக்கொண்டு அவர்களுக்குள் கெட்டிக் கார னென்று சொல்லிக் கொள்ளும் இரண்டு மூன்று பிள்ளை கள் தவமணியிடம் வந்து, தவமணி, நேற்றுதான் வாயிலைத்த பசங்களை ஏமாற்றி விட்டாய். எங்கே எங்களிடம் உன் கையிருப்பைக் காட்டு. இன்றேதாவது எங்களிடம் செய்ய முடியுமா? என்ருர்கள்.

தவ.—என்னமோ அப்பா, என்னுல் செய்யமுடிந்த தைச் செய்கிறேன்.

பிள்ளைகள்.—நீ என்ன செய்கிருய், எங்களை என்ன செய்யச் சொல்லுகிருய்?

தவமணி.—நான் சில கணக்குகள் சொல்கிறேன். அதைச் சொல்லி விடுங்கள் பார்ப்போம்.

பிள்ளைகள்.—அப்படியே சொல்லிவிடுகிருேம். எங்கே சொல்லு. பதில் சொல்லிவிட்டால், நீ பந்தயத்தை இழந்து விடுவாய். மறந்திடாதே, வார்த்தையை மாற்றிவிடாதே.

தவமணி.—இதோ அவைகளை நான் எழுதிக்கொடுக் கிறேன். நீங்களும் பதில் அதற்கு எழுதிக் கொடுத்திடுங்கள் என்று ஒரு கடிதத்தில் எழுதினுன் கேள்விகளை.

(1) ஒரு தேங்காய்க்கு மூன்று கண்ணுனுல், நாலஞ்சு தேங்காய்க்கு எத்தனை கண்கள்?

(2) ஒரு வீசை இரும்புகனமா? ஒரு வீசை பஞ்சு கனமா?

(3) ஒருவன் 7 கஜம் துணியை, தினம் ஒருகஜம் துணியாக கிழித்தால், அத்துணியை எத்தனை நாளில் கிழிப் பான்?

(4) 45—ல்—45—போனுல் மீதி 45—வரவேணும்— கணக்கு போடு.

(5) சதுரத்திற்கு சதுரம் 8 கெஜம் சால்வை ரூபாய் 8 ஆனால், அதேமாதிரி 4 கெஜம் சால்வைக்கு விலை என்ன?

(6) மூன்று பாம்பிற்கு எத்தனை கண்கள்? எத்தனை காதுகள்? இவைகள்தான், சொல்லிவிடுங்கள் பார்ப்போம்.

பிள்ளைகள் வெகு அலட்சியமாய், இவைகள் தானா, ஒரு நொடியில் பதில் எழுதித் தருகிறோம் என்று கூறி எல்லாவற்றிற்கும் பந்தயம் கட்டிக்கொண்டு பதில் எழுதினார்கள்.

(1) ஒரு தேங்காய்க்கு மூன்று கண்ணென்றால், 4-ம் 5-ம் 9 தேங்காய்க்கு இருபத்தேழு கண்கள்.

(2) ஒருவீசை இரும்புதான் கனம்.

(3) ஒரு நாளைக்கு 1 கஜம் கிழித்தால் 7 கஜத்தை ஏழுநாளைக்கு கிழிப்பான்.

(4) 45-ல், 45-போனால் மீதி (0) பூஜ்யம்தான்.

(5) 8 கஜம் சதரத்துணி 8 ரூபாயானால் 4 கஜம்சதுரத் துணி 4 ரூபாய்.

(6) மூன்று பாம்பிற்கு மூவிரண்டு 6 கண்கள், 6 காதுகள்.

தவமணி.—இது சற்றுகூட சரியல்ல. நான் கணக்குச் சொல்லுகிறேன். கூட மத்தியஸ்தர் ஐந்துபேர் வைத்துக்கொள்ள வேண்டுமென்று, அவர்களுக்குள் பெரியவர்களாகப் பார்த்து, ஐந்துபேரை நியமித்துவிட்டு, தன் கணக்கை எழுதிக்கொடுத்தான்.

(1) ஒரு தேங்காய்க்கு 3 கண். நாலைந்து இருபது. இருபது தேங்காய்க்கு, இருபது × மூன்று = அறுபது கண்கள்.

(2) இரும்பும், பஞ்சும். ஒருகனமே. இடை இரண்டும் ஒருவீசைதான்.

(3) ஒரு நாளைக்கு ஒருகஜம் கிழித்தால், 6 நாளைக்கு தான் கிழிக்கவேண்டிவரும். கடைசியில் ஒருகஜம் மீதி இருப்பதால் அதைக் கிழிக்கவேண்டிய அவசிய மில்லை.

(4) 45-ல், 45 போகும், மீதி 45-வரும். இதோ பாருங்கள்:

$9+8+7+6+5+4+3+2+1=45$—மொத்தம்
$1+2+3+4+5+6+7+8+9=45$—மொத்தம்
$8+6+4+1+9+7+5+3+2=45$ = கழித்தமொத்தம்

ஆகையால் கழித்தாலும் நாற்பத்தைந்து.

(5) 8 சதுரகஜம் 8 ரூபாய், 4 கஜம் சதுர சால்வை இரண்டு ரூபாய். எப்படி யெனில், சதுரத்திற்கு சதுரம் $8 \times 8 = 64$. 64 கஜம் விலை ரூபா எட்டு. 4 கஜமானல் $4 \times 4 = 16$. 64-ல் 16-நான்கில் ஒரு பாகமாதலால், எட்டு ரூபாயில் நாலில் ஒருபாகம், இரண்டு ரூபாய். ஆகவே 4-கஜ சதுரசால்வைக்கு இரண்டு ரூபாய்தான்.

(6) பாம்பிற்கு கண் வேறு காது வேறு கிடையாது. அதனல் அதற்கு கட்செவி என்று பெயர். ஆகையால் பாம்பிற்கு கண்களே காதுகள். மூன்று பாம்பிற்கும் 6 கட்செவிகள்தான்.

இதைக்கேட்ட மத்தியஸ்தர்கள் சரிதான், கணக்குகள் சரிதான், மற்றப்பிள்ளைகள் சொன்னது பிசகு எனக் கூறினார்கள்.

மீண்டும் மூன்று வாலிபர்கள் முன்னவர்களை விட தாங்கள் கெட்டிக்காரர்கள் என்று சொல்லிக்கொண்டு தங்களிடம் தவமணியின் சாமர்த்தியத்தைக் காட்டும்படி இழிவு படுத்திக் கூறினார்கள்.

அதற்குத் தவமணி பொறுமையுடன் (பத்தடி தூரத்திலிருக்கும் ஒரு சுவற்றைக் காட்டி) (1) இதோ இந்தச்

சுவற்றின்மேல் கையை வைத்து விட்டு வந்து விடுங்கள், ரூபாய் ஐந்து தருகிறேன். (2) பின் யாராவது ஒன்றில்லாமல் 100 வடை தின்னமுடியுமா? (3) நான் முள்ளின் பேரில் துணியைப் போட்டுவிட்டு படுத்துக் கொள்கிறேன். அதைச் செய்ய முடியுமா? என்றான்.

மூவரும் செய்வதாக உடனே பந்தயம் கட்டிக்கொண்டார்கள்.

முதலாவதாக ஒருவன் ஒரு வினாடியில் சுவற்றைத் தொட்டுவிட்டு வந்து பந்தயப்பணம் கேட்டான்.

தவமணி.—யான் என்னசொல்லி உனக்குப் பந்தயம் கட்டினேன்.

தோட்டவன்.—கையை வைத்துவிட்டு வந்துவிடும்படி.

தவ.—அப்படியே கையை வைத்துவிட்டு வந்தாயா?

தோட்டவன்.—இப்பொழுது தான் தொட்டுவிட்டு வந்துவிட்டேனே.

தவ.—அப்படியல்ல. உன் கையை வைத்து விட்டு வரச் சொன்னேனே யன்றி கையை எடுத்துக்கொண்டு வரச் சொல்லவில்லையே. ஆகையால் கையை அங்கு வெட்டி வைத்து விட்டு வா? பந்தய ரூபா தருகிறேன்.

இதைக் கேட்ட பிள்ளைகள் பதில் சொல்ல வாயெழாமல் அயர்ந்து நின்று விட்டார்கள்.

இரண்டாவதாக, ஒன்றில்லாமல் நூறு வடை தின்ன ஒத்துக்கொண்டவன் நூரு வடையை ஒன்றுகூட இல்லாமல் வெகு கஷ்டத்தோடு தின்றுவிட்டுப் பணத்தைக் கேட்டான்.

தவமணி.—உன்னை ஒன்றில்லாமல் சாப்பிடச் சொன்னேனே அன்றி எல்லாவற்றையும், சாப்பிடச் சொல்லவில்லையே. ஒன்றையேன் விட்டுவிட்டு மீதி தொண்ணூற்று ஒன்

பதைச் சாப்பிடக்கூடாது? ஆகையால் நீயும் பந்தயம் தோற்று விட்டாய் போ என்றான்.

மூன்றாவதாக வந்தவன் தவமணியைப் பார்த்து, வா, உன் ஜெபம் என்னிடம் சாயாது. எங்கே முள்ளின்மேல் துணியைப் போட்டு படுத்துக் கொள் என்றான். தவமணி அப்படியே வா என்று அழைத்துக் கொண்டு போய் * நாக தாளி புதரின்மேல், தன் மேல் துணியைப் போட்டுவிட்டு, பக்கத்தில் முள்ளில்லாத விடத்தில் படுத்துக் கொண்டான்.

மூன்றாமவன்.—என்னடா, முள்ளின்மேல் துணியைப் போட்டுவிட்டு படுத்துக் கொள்ளுவதாகச் சொன்னாயே.

தவமணி.—ஆமாம். முள்ளின்மேல் இதோ துணியைப் போட்டிருக்கிறேன். பக்கத்தில் படுத்துக் கொண்டேன். உன்னிடம் முள்ளின்மேல் துணியைப் போட்டு விட்டு அத்துணிமேல் படுக்கிறதாக ஒத்துக்கொள்ள வில்லையே. முள்மேல் துணியைப் போட்டுவிட்டுப் படுத்துக் கொள்ளுகிறதாகச் சொன்னேன். அப்படியே துணியைப் போட்டுவிட்டேன். எனக்கிஷ்டமானவிடத்தில் படுத்துக் கொண்டேன்.

மூன்றாமவன் மனம் நொந்து வெந்து வாய் மூடி நின்றுவிட்டான்.

பிள்ளைகட்கும் மத்தியஸ்தர்கட்கும் அது நியாயமெனத் தோன்றினும் பிள்ளைகளுக்கு கைப்பணம் போனதால், மிகவும் வருத்தமும் ஆத்திரமும் உண்டாகி, வம்பு வளர்த்திக் கொண்டே, ஒரே கூட்டமாக தலைமை உபாத்தியாயரிடம் போய், தாங்கள் தவமணியால் தோல்வியடைந்ததை விபரமாய்க் கூறினார்கள்.

இதைக் கேட்ட தலைமை உபாத்தியாயர் விஸ்வாமித்திர ரூபத்தை அடைந்தார். அடைந்தும் பிரயோஜனமில்லை.

* சப்பாத்திமுள் புதர்.

பிள்ளைகளைப் பார்த்து, பிள்ளைகளே! அவன் மகா தந்திர சாலிப் பையன். அவனிப்படித்தான் பல விஷமங்கள் செய்து வருகின்றான். இருந்தாலும் தான் தப்பித்துக்கொள்ளும் பொருட்டு முன் யோசனையோடு செய்கிறான். அவனைக் கேட்பதால் பிரயோஜனமில்லை. அவனிடம் நீங்கள் ஒன்றும் விவகாரம் வைத்துக்கொள்ளாதீர்கள். அவன் தவமணி அல்ல நவமணி. இன்னும், இதற்குமேலும் சொல்லலாம். இவன் எமகாதகன், எமகாதகன், எமகாதகப் பேர்வழி என ஆத்திரத்துடனிரைந்தார். இரைந்து விட்டு பிள்ளைகளே! நீங்கள் செல்லுங்கள், நான் அவனைக் கண்டிக்கிறேன், என்று அவர்களை அனுப்பிவிட்டு, தவமணியைக்கூப்பிட்டு ஒன்றும் கேட்காமல் அவனைப் பார்க்கவும் பயங்கொண்டு, பேசாமலே இருந்துவிட்டார்.

பிள்ளைகள் அதிலிருந்து உபாத்தியாயர் சொன்ன வார்த்தையைப் பிடித்துக்கொண்டு தவமணியை எமகாதகன் என்ற பட்டப்பெயரிட்டே கூப்பிட்டார்கள். இதுவே பின் வழக்கப் பெயராகிவிட்டது. [சாதாரணமாக ஆரம்பத்தில் சிறுவர்கள் ஒரு சிறு காரியம் செய்துவிட்டால் அதுவே மலையாக முடிந்துவிடுகிறது. உதாரணமாக: (1) புதுவையில் இப்போது மலையாக நடக்கும் இரு சண்டை கட்சிகள், (2) பிள்ளைகள் மண்ணைப் பிடித்துவைத்த சாலைவிநாயகர் சக்திபெற்று க்யாதியுடன் விளங்குவது ஆகிய இவைகளை நாம் இப்பவும் கண்கூடாக கண்டு வருகிறோம்.] பெரியோர் சிறியோர் எல்லோரும் நமது தவமணியை எமகாதகன், எமகாதகன் என்று கூப்பிட்டதால் நாமும் அப்படியே அழைத்து வருவோம். அதைக்கொண்டே இப்புத்தகத்திற்கும் அப்பெயரை இட்டோம்.

---

## அத்தியாயம்—4

### இரட்டைத்தலைக் குதிரை

ஒரு நாள் எங்கு பார்த்தாலும் சுவர்களில் பெரிய பெரிய விளம்பர நோட்டீஸ்கள் ஒட்டப்பட்டும், பறைசாற்றி விளம்பர பத்திரிகைகள் வழங்கப்பட்டுக்கொண்டு மிருந்தன. பத்திரிகைகளி லெல்லாம் இவ்விளம்பரமே அதிகமா யிருந்தது. அவ்விளம்பரத்திலிருப்பதாவது:—

**ஆச்சரியம்** **ஆச்சரியம்**

யாரும் காணாதது அற்புதமானது

வந்து பாருங்கள் சிந்தை மகிழுங்கள்

அருமையான கண்காட்சி அதிசய காட்சி

இதுவரைக்கும் எந்த உலகத்திலும், எந்தமனிதனும் கண்டிராதது. இவ்வருமையான காட்சி இங்கு இந்த ஒரு நாளைக்குத்தான் காண்பிக்கப்படும்.

அதாவது

இரட்டைத்தலைக் குதிரை

என்னகரிலும் சிறந்த பொன்னகர் வாசிகளே! இன்னோட்டீசால் தெரிவிப்பது : ஐரோப்பாவிலிருந்து, இரண்டு தலையுடைய ஆச்சரியமான குதிரையொன்று வரவழைத்திருக்கிறோம். இது, மிக்க கஷ்டத்துடனும் பொருட் செலவிலும் வரவழைக்கப்பட்டிருக்கிறது. சாதாரண தலைபுறமும், வால்புறமுமாக இரண்டு தலையையுடைய குதிரையை இதுவரையில் பார்த்திருக்கமாட்டீர்கள். இனிப் பார்க்கவு மாட்டீர்கள். நாளையே இது ஆப்பிரிக்கா தேசத்திற்கு பாக் செய்து அனுப்பப்பட போகின்றமையால், இச்சமயத்தை கைவிட்டுவிடாமல் ஒவ்வொருவரும் வந்து கண்டு களித்து

திருப்தியடையுங்கள். இன்று இரவு மாத்திரம் இக் காட்சி காட்டப்படுமாகையால் கும்பல் அதிகமாகும். ஆதலால் டிக்கட்டுக்கு முந்திக்கொள்ளுங்கள்.

இரவு—9-30-மணிக்கு காட்சி துவக்கப்படும்.

டிக்கட் ரூபா—10 ; 5 ; 3 ; 2 ; 1.

இவ்விளம்பரத்தைப் பார்த்த ஜனங்கள், ஆச்சரியமும், சந்தோஷமும், பிரமிப்பும் கொண்டு, இது என்ன பிரம்ம சிருஷ்ட்டியில் அகப்படாத மிருகமா யிருக்கின்றது. இதைப்போய் கட்டாயம் இன்று இரவு பார்க்கவேண்டும், என எங்கு பார்த்தாலும் கும்பல் கும்பலாக கூடிப் பேசிக் கொண்டு, எப்பொழுது இரவு வருமென்று எதிர் பார்த்திருந்தார்கள். அன்று மாலை 7-மணிக்கு குறிப்பிட்டிருந்த விடத்தில், ஜனங்கள் நிற்க விடமில்லாமல் தவித்தனர். அவ்வளவு கும்பலாய்விட்டது. மணி 9½-யை மிக ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். மணி பத்தாகியும், மேடைமேல் ஒரு காட்சியும் காணாததால் ஜனங்கள் கைதட்டி பிகிலடித்தார்கள். மேடைமேல் வெறும் திரையொன்று விடப்பட்டிருந்தது. சுமார் பத்தேகால் மணிக்கு, அங்கொரு மனிதன் திரையின் பக்கத்தில் வந்து தோன்றினான். அவனைப் பார்த்த சிலர் இவனை எங்கேயோ பார்த்திருக்கிறாப் போலிருக்கிறதே என்றார்கள். சட்டென ஆ, ஆ, இவன் தான் எமகாதகன், எமகாதகன், என ஒரு குமரல் சத்தம் கேட்டது. இவன் சங்கதி தெரிந்தவர்கள், ஓகோ இவன் இன்று எல்லோரையும் எமாற்றிவிட்டான். நம் கண்களில் மிளகாய்த்தூளை தூவிவிட்டான். ஏதாவது ஒன்றைக் காட்டி வாயடி அடித்துவிட்டு ஓடிவிடுவான், எனப் பேசிக் கொண்டனர். இச்சமயம், எமகாதகன், ஜனங்களே! இதைப் பாருங்கள் என்று முன்னிருந்த திரையை எடுத்தான்.

அங்கு உள்ளே ஒரு திறையில் ஒரு குதிரைக்கு முன் புற மும் பின் புறமும் தலை இருக்கிறதுபோல வர்ணத்தால் எழுதி அதன் கீழ், ஓர் அடி பருமனுள்ள எழுத்தில், 'இரட் டைத் தலைக் குதிரை' என எழுதி இருந்தது. ஜனங்கள் இத்திறையைப் பார்த்ததும், அடியி லிருந்ததை உறக்க 'இரட்டத்தலைக் குதிரை' எனப் படித்தனர். மேடைமே லிருந்தவன், இது என்னவென்று எழுத்துக்களைச் சுட்டிக் காட்டி, ஜனங்களைக் கேட்டான். ஜனங்கள் மறுபடியும் பலத்த சப்தமாய் இரட்டைத் தலைக் குதிரை என்றார்கள்.

எமகாதகன்.—ஜனங்களே!! உங்கள் வாயாலேயே இதை இரட்டைத் தலைக் குதிரை என்றீர்கள். ஆ இதுவே அக் குதிரை! பார்த்தாயிற்று, போய்வாருங்கள் !! என்றான். ஜனங்கள், ஓ, ஓ, இது சுத்தமோசம், சுத்த மோசம் அப்படி யல்ல. இது நீதியல்ல, உன்னைவிட மாட்டோம் என ஆர வாரித்துக் கொண்டு கலகத்திற்கு கிளம்பினார்கள். திறை பக்கத்திலிருந்த எமகாதகன் உள் சென்று மறைந்து விட்டான். ஜனங்கள் எல்லாம் எழுந்து பெரிய கூச்சல் போட்டுக் கொண்டு இவனைத் தேடிப் பார்த்தார்கள். ஆளுடைய வாசனையைக்கூட காணோம். அங்கிருந்து ஜனங் கள் டிக்கட்டு விற்ற அறைக்கு (Ticket Room) ஓடிவந்து பார்த்தார்கள். அங்கே ஒருவருமில்லை. ஜனங்கள் ஏமாந்து, மனம் வெந்து, ஆத்திரத்தால் தட்டி முதலியவைகளை பிய்த்துவிட போலீசார் இவர்களைத் தடி கொண்டு அடித்து விரட்டினார்கள். ஜனங்களில் சிலர், ஐயோ, இந்த இழ வுக்கு கொணர்ந்து தொலைத்த பணத்தை வீட்டில் வைத்துக் கொண்டு சுகமாக இருக்கப்படாதா? 'சொல்வார் சொன்னா லும் கேட்பாருக்கு மதியில்லையா' என்றபடி, எவனோமோசக் காரன் விளம்பரப்படுத்தினால், நாம் அதைக் கண்டு, இது

நமது முப்பாட்டன் தலைமுறையில்கூட கேள்விப்பட்டதில்லையே, என்றுகூட சிந்திக்காமல், ஏமாந்து போனோமே. இந்திய ஜனங்கள் எதைச் சொன்னாலும் நம்பி சுலபத்தில் ஏமாந்துப் போகிறார்கள், என்றே இப்பேர்ப்பட்ட மோசக்காரர்கள் சிலர், இதைவிட பெரிய மோசம் செய்திருக்கிறார்கள். செய்தும் வருகிறார்கள். இதை நாம் பல தடவை கேள்விப்பட் டிருந்தும் இத்தடவை ஏமாந்துவிட்டோமே. ஒரு சிறுபயல் பல்லாயிர ஜனங்களை ஏமாற்றி விட்டானே. நாம் பணமிழந்து, தூக்கம் கெட்டு, புத்தி இல்லாது போனது மில்லாமல், போலீசார் அடியும், ஜனங்கள் நெருக்குதல், உதை முதலியன பட்டுப்போக வந்ததே, ஈசா, என எண்ணி ஏங்கி வருத்தத்துடன் சென்றார்கள்.

ஊரெல்லாம் எமகாதகன் செய்த தந்திர சாமர்த்தியத்தைப்பற்றியே பேச்சாயிருந்தது. ஏமாந்தவர்கள் வருத்தமாயும் கோபமாயும், அதற்கு வந்து ஏமாராதவர்கள் ஏமாந்தவர்களை கேலிபண்ணி சந்தோஷப்பட்டுக் கொண்டு மிருந்தார்கள். கொஞ்ச நஞ்சம் எமகாதக னென்னும் தவமணியைத் தெரியாதவர்க ளெல்லாம் இன்று தெரிந்துக் கொண்டார்கள். இவன் பேரைக் கேட்டாலும் சிலர் அச்சப்படுவார்கள். சிலர் இவனைக் கண்டாலும் பயப்பட்டுக் கொண்டு பேசாமல் அப்புறம் போவார்கள். சிற்சிலர் அவன் சாமர்த்தியத்திற்கும் தந்திரத்திற்கும் மெச்சி, புகழ்ச்சியாய் பேசுவார்கள். இது நிற்க,

எமகாதக னென்னும் தவமணிக்கு தற்போது சுமார் பதினெட்டுக்குமேல் வயதாகின்றது. தகப்பனார் நடராஜப் பிள்ளையிடம், இவன் செய்து வரும் செயல்களைக் கண்டவர்களெல்லாம் புகார் செய்துகொண் டிருந்தார்கள். நற்குணக் குன்றாகிய நடராஜம் பிள்ளைக்கு இவைகளெல்

லாம் மகா வெறுப்பைத் தந்தன. தனது தவப் புதல்வன், இப்படி பல்லோர் வாயால், கெட்டவன் என்று பேரெடுக்கின்றானே என்று வருத்தம் மிகுதியும் பட்டு, தன் பிள்ளையிடம் பல தடவை சொல்லிப் பார்த்தார். ஆனால் அவனது திருவிளையாடல்கள், நாளுக்கு நாள் அதிகமாயினதைக் கண்டு, "பிள்ளைதான் வயதில் மூத்தால் பிதா சொல் கேட்பதில்லை" என்ற பழமொழியை எண்ணி, அவனை தன் வாய் சொற்களுக்குமேல் அதிக மொன்றும் செய்யாம லிருந்தார். அதன்பின் அதைக்கூட சொல்லாமல் மௌனமாயிருந்துவிட்டார். வாலிப வயதாகியும் இவனுக்கு மணம் செய்வதைப்பற்றி யாதொரு யோசனையும் செய்யாம லிருந்தார். மனைவி பல தடவை, தனக்கு பந்துவாக இருக்கும் மாணிக்கம்மாள் மகளாகிய மரகதவல்லியை, ஏற்கெனவே பேசிக்கொண்டிருந்த ஒப்பந்தப்படி, தனது மகனாகிய தவமணிக்கு, விவாகம் செய்து விடும்படி தன் புருஷனைக் கேட்டாள். ஆனால் நடராஜம்பிள்ளை தன் மகன் இப்படி பேரெடுத்து வருவது, தனக்கு மனக் கஷ்டமா யிருக்கிறது. இச் சமயத்தில், அவன் காலில் ஒரு கட்டை கட்டிவிட்டால், அப்பெண்ணும் அத் துக்கத்தை அடையவேண்டுமே, வேண்டாம், வேண்டாம். அவனுடைய எமகாதகன் என்ற பட்டப் பெயரைக் கேட்டாலும் அவனுக்குப் பெண் கொடுக்க மாட்டார்கள். அவனுக்காக நான் பெண்தேடி அவமானமடைய எனக்குச் சம்மதமில்லை. அவன் ஒழுங்காய் வருகிறகாலத்தில் அவனுக்கு வேண்டிய காரியத்தைச் செய்ய எனக்குத் தெரியும். மறுபடியும் இதைப்பற்றி என்னைத் தொந்திரவு படுத்தாதே, என நடராஜம் பிள்ளை சொல்லி விட்டார். இக் காலத்துப் பெண்டுகளைப் போல் இல்லாமல் புருஷவாக்கை தெய்வவாக்காய் மதிக்கும் நமது மகலக்ஷிமி அம்மாளும், பதி வார்த்தைக்கு எதிர் வார்த்தை பகாரமலிருந்து விட்டாள். இவை

களை எல்லாம் எமகாதகன் எப்படியோ கேட்டறிந்திருந்தான்.

---

## அத்தியாயம்—5

### மனம்போல மாங்கல்யம்—கிழவன் குமரனானான்

மாரகதவல்லி என்னும் பெண் நமது தவமணிக்கு அத்தை மகளாக வேண்டும். சிறுவயதாய் இருக்கும்போது இவர்கள் இருக்கும் நேசத்தைக் கண்டு, பெற்றோர்கள் இருவரையும் தம்பதிகளாக்கி விடவேண்டுமென்று உறுதிமொழி கூறியிருந்தார்கள். ஆனால் தற்போது தவமணி எமகாதகனாய் மாறிவிட்டானாதலால், இவனுடைய நடத்தை பெண்ணின் பெற்றோர்களுக்குப் பிடிக்காமல், பெண்ணை மற்றொரு இடத்தில் கொடுக்க ஏற்பாடு செய்து விட்டார்கள். பிள்ளையின் தகப்பனாராகிய நடராஜம் பிள்ளையும், பெண்ணைக் கொடுக்கக் கேட்பது மூடத்தனம் என்று பேசாமலிருந்து விட்டார்.

தவமணியும் மரகதவல்லியும் அனேக வருடங்கள் ஒன்றாகவே உண்டுடுத்தி கல்வி கற்று வந்தார்கள். அந் நாளிலேயே இருவருக்கும் அதிக நேசப்பான்மை உண்டாகி, நகமும் சதையும் போல் இருவரும் நேசித்திருந்தார்கள். ஒருவரை ஒருவர் சற்றும் பிரிந்திருக்க மாட்டார்கள். அப்படி சற்றுப் பிரிந்திருக்க நேரிடின், ஒருவரையொருவர் மனதில் நினைத்தபடியே இருப்பார்கள். எதாவது அருமையான பொருள் ஒருவரிடம் அகப்பட்டால் அதைத் தாங்களே உபயோகப்படுத்திக் கொள்ளாமல் மற்றவருக்கு என அதைப் பத்திரப்படுத்தி வைத்திருப்பார்கள். ஒருநாள் இருவரும் தங்கள் நந்தவனத்தின் தடாகக் கரையில்,

தாங்கள் இருவருமே மணம் புரிந்துகொள்கிறது. வேறு ஒருவரையும் மணம் புரிந்துக்கொள்வதில்லை. தவறி பெற்றோர்கள் வலிக் கட்டாயத்தின்பேரில் வேறு விடத்தில் மணம்செய்து கொடுத்துவிட்டால், மறுநாளே உயிரை விட்டுவிடுவதென நிச்சயம் பண்ணிக்கொண்டார்கள். மரகதவல்லி பக்குவமடைந்து நான்கு வருஷமாய்விட்டதால், அதிலிருந்து இருவரும் சந்திக்காமலே இருந்துவிட்டார்கள். ஆனால் இருவர் உள்ளத்திலும் அவரவர் ஆசையாய் பாவிக்கும் உருவம் தோன்றி, வருத்திக்கொண்டே இருந்தது. தவமணி மரகதவல்லியைப்பற்றி அடிக்கடி நினைந்தும், என்று தவமணியின் தண் முகத்தைக் கண்டு கண்குளிருவது என மரகதவல்லி எண்ணியும், மனமேங்கி இருந்தனர். ஆனால் எப்படியும் தவமணி மரகதவல்லியை மணம் புரிந்துக் கொள்வோம் என்று ஒரு நன்னம்பிக்கையைக் கொண்டிருந்தான். மரகதவல்லியோ! நம்மனத்திற்குகந்த மணவாளனாகிய நமது தவமணியை மணம்புரிந்துக்கொள்ளுவோமோ, அன்றி தாய் தந்தையர் வற்புறுத்துதல்பேரில் வேறு எவரையாவது மணம் செய்துகொள்ளும்படி நேருமோ என்று தவித்துக் கொண்டிருந்தாள். ஆண்டவனே! என் மனமொத்த மணாளனைத் தவிர வேறு யெவருக்கும் என் கழுத்து மாலை தரிக்காதிருக்கும்படி அருள் செயல்வேண்டும். மனதை ஒருவருக்கு ஒப்புவித்து, நிச்சயம் பண்ணிக்கொண்ட பிறகு, வேறொருவருக்கு வாழ்க்கைப்படுதல் இந்துமத கற்புள்ள ஸ்திரீகளுக்கு விரோதமல்லவோ? இக் கொள்கைபற்றியே, அக்காலத்தில் ஓராண்டில் உயிர்விடும் தன் மணாளனை, காதலித்தபின் வேறொருவரையும் கருதாது, அவ்வற்ப ஆயுளுடையவனையே மணம்புரிந்து மேன்மையடைந்தாள் சாவித்திரி என்னும் மாது. தாங்கள் நினைத்திருந்த புருடன் மாண்டான் எனக் கேள்விப்பட்டு எத்தனை ஸ்திரீகள் உயிர்விட்டனர்.

பார்வதி தேவி, உனது மருமகள் வள்ளி பல துன்பப் பட்டும் தனது மனவிருப்பப்படி கடைசியில் முருகனையே மணந்தாள். நீயுமப்பரமனையே மணர தவஞ்செய்ய வில்லையா? நான் சிறுபொழுதில் காதலித்த அத் தவமணி யென்னும் எனது மாமன் மகனையே யான் மணம்புரியு மாறு நீ திருவருள் புரியவேண்டும். என் காதலன் என்னை மறந்திருந்தாலும், என்னைப்பற்றி ஞாபகப்படுத்தி, இள வயதிலிருந்த அன்பை அவர் நினைக்கும்படி செய்து, என்னை மணம்புரியுமாறு கடைக் கண் பார்த்தருள் தாயே.! அவ ரைத் தவிர வேறு புருஷரை என் தாய் தந்தையர் ஏற்பாடு செய்யாதிருக்கச் செய்வது உன் கடமையே. இனி கடைசி யாக எனது முறைப்பாடு ஒன்று: நான் கோரி இருக்கும் மணாளனைத் தவிர மற்றொருவரை மணம்புரியேன். புரிந் தால் அன்றே உயிர்விடுவேன், என்று பல உறுதிமொழி சொல்லி, தினமும் பார்வதி தேவியிடம் குறைகூறி தொழுது வந்தாள்.

இவ்விதமாக மரகதவல்லி, சிந்தித்திருக்கும்போது அவளுடைய தாய் தந்தையர், தங்கள் பெண்ணை வேறொரு தணிகன் குமாரனுக்கு மணம்புரிய ரகஸ்யமாக ஏற்பாடு செய்துவிட்டார்கள். இந்த சங்கதி மரகதவல்லிக்கு தெரி யாது. கலியாணம் நிறைவேற இன்னும் ஐந்து நாள்தா னிருக்கிறது. முக்கியமான பந்தல் முதலான சில வேலைகள் நடைபெறக் கண்டு, இது என்ன விசேஷத்திற்காக என தன் தாயை வினவினாள் மரகதவல்லி. தாயார் உனது மணத்திற் காகத் தான் என்று சொல்லி மணவாளனையும் சொன்னாள். இதைக் கேட்ட மரகதவல்லிக்கு குபீரென்று முகத்தில் ரத் தம் ஏறி, தானுட்கார்ந்திருந்த சாய்வு நாற்காலியில் அப் படியே சாய்ந்துவிட்டாள். பின் தானே சமாளித்து எழுந்து போய் தன் தனி அறையில் கட்டிலின் மீது சாய்ந்து, ஆ

கடவுளே! என் எண்ணத்தை அலைகுலையச் செய்தாயே! எனக்கு முன்னுடி ஒன்றும் தெரியாமல் திடீரென இச் செய்தி கேட்ட என் மனம் படும்பாடு கடவுளே, நீயறி யாயா? கருணுகரா! பெண்களைச் சம்மதமில்லா புருஷர்களுக் கும், பிரியமல்லா புருஷர்களைப் பெண்களுக்கும் அவர்களின் நிலைமையையும் மனப்பான்மையையும் அறியாமல், மிரு கத்தை நுகத்தடியில் பிணைப்பதுபோல் பிணைத்து விடுகிறுர் கள். அவர்கள் முன் பின் ஒருவருக்கொருவர் அறியாதவர் களாயிருத்தலால் புதிதாய் மணம்செய்த இருவருக்கும் சில வேளைகளில் ஒருவரை யொருவர் பார்க்கவும் பேசவும் மன மொப்பாமல் ஒருவர் மேல் ஒருவருக்கு அருவருப்பு தோன்றுகிறது. இக் காதலற்ற கலியாணத்தால் நாளுக்கு நாள் வெறுப்பு உண்டாகி, அது முதிர்ந்து தளர்வதின் பயனுக சிலர் தற்கொலை, கிணற்றில் விழுதல், முதலிய அகால மரணத்திற்குள்ளாகிறுர்கள். சிலர் குடும்பத்தில் இல்லறம் சரிவர நடக்காமல் என்னேரமும் கலகமாகவும், சண்டை சச்சரவுமாகவே இருக்கிறது. சில மாதர்கள் தங்களுக்கு "கைநிறைந்த பொன்னைக் காட்டிலும், கண் ணிறைந்த கணவனே நல்லது" என்றபடி, மணமாயிருக் கும் கணவன் தனக்குப் பிடிக்காததால், கள்ள புருஷர்களைத் தேடுகிறுர்கள். சில ஆடவரும் தம் மனைவியிருக்கும்போது அயல் பெண்களுக்கு ஆசைப்படுகிறுர்கள். பின் பெண் சம்மதப்படாமல், தாய் வீடுவந்து வாழா வெட்டி எனப் பெயர் பூண்டு புருஷனிடம் ஜீவனத்துக்காக சூட்போடு கிறுர்கள். புருஷர்களிற் சிலர் சொந்தப் பெண்டை நீக்கி மற்ெருரு கலியாணம் செய்துகொள்கிறுர்கள். பரமாதரை நாடுகிறுர்கள். சில பெற்றேரர்கள் பணத்திற் காசைப்பட்டு தங்கள் செல்விகளை, தொண்ணூறும் சென்ற கிழவனுக்கும், மன்மதக் குரங்கு என்னும் மாப்பிள்ளைக்கும் முடிபோட்டு

விடுகிறார்கள். பின் உண்டாகும், கலகங்களுக்கும் கொலைகளுக்கும் காரணம் ஒருவரை யொருவர் மனமொப்பாமையே. இக் குற்றத்திற்கெல்லாம் காரணம் பெற்றோர்களே யாவர். பெற்றோர்கள் மணஞ் செய்துகொள்பவர்களுடைய யோக்யதை, கல்வி, அறிவு, லட்சணம், தன்மை, செல்வம், முதலியவைகளைக் கவனித்தும், பெண் கொள்ள வேணு மென்றால் ஏழையர்களிடமும் கொள்ளவேணும்; பெண்கொடுக்க வேண்டுமென்றால் தங்களைவிட தனிகர் வீடாகப் பார்த்து கொடுக்கவேண்டும், என்பதை யோசித்தறிவதோடு பெண்ணைப்பற்றி சகல சவிஸ்தாரங்களைப் புருஷனுக்குச் சொல்லியும், புருஷனுடைய சவிஸ்தாரத்தைப் பெண்ணுக்குச் சொல்லியும், தம்பதிகள் ஒவ்வொருவர் மனதிலும் தாங்கள் அடையப் போகிறவர்களைப்பற்றி அன்பு கொண்டு, அவ்வன்பு முற்றும் பக்குவம் பார்த்து இருவர்களையும் மணம்புரிவித்தால் இல்லற வாழ்க்கையை இன்புற நடத்துவார்கள். இப்படிச் செய்யாமல் பெற்றோர்கள், தாங்கள் பார்த்துவிட்டால் போதும், நாம் சொன்னபடி நமக்குப் பிறந்தது கேட்காமல் அதனதன் பெரிய தனமாய் விட்டுக்கொடுக்கக் கூடாது, என்று அவர்கள் கண்ணீரும் கம்பலையுமாயிருந்தாலும் இழுத்து உட்காரவைத்து மணக் கயிறு என்னும் விலங்கைப் பூட்டிவிடுகிறார்கள். அவ் விலங்கைத் தரித்துக்கொண்டோடவே மேற் சொல்லியிருக்கிறபடி பல கெடுதல்களுக்காதாரமாகிறார்கள். ஆகையால் இப்பேர்ப்பட்ட துன்பத்தில் ஏதாவதொன்றை நான் அனுபவிக்கும்படி உனது திருவுள்ளச் செயல் இருக்கின்றது போலும்! எல்லாம் உன் செயலே, நாமொன்று நினைக்க, தெய்வமே! நீ ஒன்று நினைத்தாய், என் செய்வேன்? என்று நினைத்துகொண்டே கண்மூடி உறங்கிவிட்டாள்.

அரைமணி நேரம் சென்று துயில்விட்டெழுந்து திகி

னும் சந்தோஷமும் கொண்டவளா யிருந்தாள் மரகதவல்லி. துயிலும் போது ஒரு கனவுகண்டாள். அக்கனவால் சந் தோஷமும் அதன்படி நடக்குமா என்ற ஒரு சந்தேகமுமே அவள் மனதில் குடிகொண்டிருந்தது. தான் துயரப் பட்டுக்கொண் டிருக்கும்போது, தவமணியான தன் நாயக னுக்குத் தன் குறையைப்பற்றி ஒரு கடிதம் எழுதி அனுப்பித் தாற்போலவும், அவர் வந்து தன்னை மணம்புரிந்து அழைத்துப் போவதாகவும், கனவு கண்டாள் மரகதவல்லி. தான் பல தடவை அக்கனவைச் சிந்தித்துப் பார்த்தபின் மனந்தேறி ஒரு கடிதம் எழுதி மடித்து கவரில் போட்டு அதைத் தவமணிக்கு அனுப்புவது எப்படி என இருந்தாள். தபால் ஸ்டாம்பும் ஒட்டிவைத்திருந்தாள். தனது வீட் டிற்கு மூன்றுவது வீட்டிலிருந்து வரும் ஒரு சிறு பைய னிடம் கொடுத்து கொஞ்ச தூரத்திலிருந்த தபால் பெட்டி யில் போட்டுவிடும்படி சொன்னுள். பையனும் அப்படியே போட்டு விட்டான்.

மறுநாள் அக்கடிதம் எமகாதகனுக்குக் கிடைத்தது. பிரித்துப் படித்துப் பார்த்தான். அதிலிருந்ததாவது:—

என் கண்ணுக்கு கண்ணுன, கானகத்து வண்டான, மல்லிகைப்பூச் செண்டான, மருக்கொழுந்து வேரான, கண் ணின் மணியாகிய எனது தவமணி யென்னும் என் மன தைக் கவர்ந்த காதலா! நின் திருமுக தரிசனம் கண்டு வருடம் நான்குக்கு மேலாகிறது. அன்று முதல் இன்று வரையில் நாம் பேசிமுடித்த பேச்சையும் உனது உருவ பாவத்தையும் சிறிதேனும் மறந்தவளல்ல. யான் உம்மை மணப்பனே யன்றி மற்றெருவரை மணப்பதைக் காட்டிலும் உயிர்விடுதல் உத்தமம் என்ற உறுதியை அணுவளவு கூட இந்த நாள்வரை மறந்தவளல்ல. நீர் என்னை மணம்புரிவீர் என்று நானும் திடசித்தமாய் இருந்தேன். அந்தோ! இப்

பாபியின் எண்ணம் பாழாயின. முன் பின்னறியாத மனித னுக்கு இன்றைய மூன்ருவது தினம் நான் வாழ்க்கைப்படப் போவதாக எனது தாயார் சொன்னாள். அதற்காக வேண்டிய ஏற்பாடுகளும் நிறைவேறி வருகின்றன. என் மனம் அனலிலிட்ட மெழுகுபோல் உருகுகிறது. என் மனப் பான்மையை இதிலெழுதி முடியாது. நீர் தற்போது அதி சாமர்த்திய தந்திரசாலியா யிருக்கின்றீர் எனக் கேள்விப்பட் டுளமகிழ்ந்திருக்கின்றேன். அது உண்மையானால், நாமன்று சத்தியம் செய்ததும் உண்மையானால், நீர் என்மேல் அன்பு வைத்திருப்பதும் உண்மையானல், நீர் தைர்யமுள்ள ஆண் பிள்ளையுமானல், பலபேர் அறிய தாங்களே எனக்கு மாலை தரித்து, என்னை உமது மனைவியாக்கிக் கொள்ளவேண்டும். அன்றி வேறொருவர் கை என் கழுத்தின்மீதுபட்டு மணம் முடிந்ததானால் அன்றே நான் பிணமாய் விடுவேன். இது நிச்சயம்.

இப்படிக்கு
உங்கள் கருத்துக் குகந்த காதலி
மரகதவல்லி.

கடிதத்தைப் படித்து முடித்ததும், மரகத வல்லியின் மீது அடங்கொணு சந்தோஷமும், அவர்கள் பெற்றோர்கள் மீது கோபமும் வருத்தமும் கொண்டான் தவமணி. எப் படியும் மரகதவல்லி சொன்னபடி பல்லோர் அறிய மணம் செய்தலே உத்தமர்க்கழகு. அன்றி திருட்டுத்தனமாக வேனும், பெண்ணைத் தந்திரமாய் அழைத்து வந்தாயினும், தாலி கட்டி விடுகிறது அயோக்யத்தனமான செயல். பார்ப்போம். நாமே இம் மரகதவல்லியை மணம் புரியாது போனல், நமக்குக் கிடைத்துள்ள பட்டப் பெயருக்கு மதிப் பென்பதே இல்லை, என்று தனக்குள் தீர்மானப்படுத்திக் கொண்டு அதற்காக வேண்டிய யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தான்.

கலியாணநாள் நெருங்கிவிட்டது. மாகதவல்லியின் வீடு மணக் கோலம் பெற்றிருக்கிறது. பல்லாயிரம் ரூபா செல விட்டுப் பந்தலலங்காரம் செய்து, பலவித படங்களாலும், கண்ணைக் கவரும் பலவித கலர் மின்சார (Electric) விளக்கு களாலும் அலங்காரம் செய்திருப்பதைக் கவனித்தால், வானுலக நக்ஷத்ரங்களெல்லாம் ஒன்று சேர்ந்து இம்மணப் பந்தலில் வந்திறங்கினவோ' என்று ஐயமுறத்தக்க வண்ண மாயிருந்தது. தென்னங்குலை, மாங்குலை, கதலிக்குலை, பனங் குலை, ஈச்சங்குலை, வாழைமரம், முதலிய இன்னும் கணக்கி லடங்கா விநோதப் பொருள்களெல்லாம் அலங்காரமாக அமைக்கப் பெற்றிருந்ததுடன், பலவித பாண்டு வாத்யங்க ளெல்லாம், தாம், தாமென முழங்கிக்கொண்டிருந்தன.

மாலை மணி ஏழாயிற்று. மாகதவல்லியின் மனத்துயர் வரையறுக்க முடியாதிருந்தது. தான், மணாளனுக்கு அனுப் பிய கடிதம் போய்ச் சேர்ந்ததோ சேரவில்லையோ! கடிதம் கிடைத் ததன்மீது விருப்பிற்றாரோ! வெறுப்புற்றாரோ! அன்றி என்னை மணக்க இஷ்டமில்லையோ! அல்லது இஷ்டமிருந்து ஏதாவது ஏற்பாடு செய்கிறாரா? ஒன்றுந் தெரியவில்லையே! விடிந்தால் கலியாணமாமே! மனதை வேறொருவருக்கு ஒப்படைத்து விட்டு, மனமில்லாமல் மற்றொருவருக்கு வாழ்க்கைப்படுவது எவ்விதம்? கடவுளே! உன் கருணை என்மீது சற்றாவது இரங்கக் கூடாதா? உன்னை நம்பின அடியார்க்கு ஒருவித இன்னலும் வாரா வண் ணம் நீ காப்பாற்றுவாயென நான் பெரியோர் வாயாலும், பல அரிய புத்தகங்களாலும் கேள்விப்பட்டும், படித்து மிருக்கிறேன். அப்படியிருக்க யான் ஒருவளே உனதருளுக்கு பாத்திரப் படாதவள் போலிருக்கிறது. நான் தற்போதே உயிரை விடச் சித்தமாயிருக்கிறேன். ஆனால், என் மனதில், 'பயப்படாதே, உனக்கு நற்காலம் வருகிறது' என்று யாரோ

சொல்லிக் கொண்டிருக்கின்றாப் போலிருக்கிறது. அதனு லேயே, நான் சற்று நன்னம்பிக்கையுட னிருக்கின்றேன். மணம் தரிக்கிற வரைக்கும் என்னுதன் வருகையைப் பார்க் கிறேன். வராவிடில், மணமாலை என் கழுத்தில் ஏறின கால் மணி நேரத்தில் பிணமாலை போடும்படி செய்துக் கொள் கிறேன். மணக் கோலம் பிணக் கோலமாகி விடும். நான் வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட்ட பின், திரும்பியும் என்னுதனுக்கு நான் வாழ்க்கைப்பட முடியுமா? முடியாது, நமது பழுதிலா இந்துமத விவாக சட்டத்திலும், இந்து தர்மத்திலும் அப்படிச் செய்ய இடங் கொடுக்க வில்லை. அவைகள் இடங் கொடுப்பதாயிருந்தாலும் என் மனசாட்சி இடங் கொடுக்காது. பார்ப்போம். எதற்கும் ஆண்டவனிருக் கின்றான். பரமேஸ்வரி! நீ தான் துணை, என்று எண்ணி இருந்தாள் மரகதவல்லி.

இரவெல்லாம் மரகதவல்லிக்கு தூக்கமென்பது இல்லை. வீடு அமளி குமளியாயிருக்கிறது. மாதின் மனம் அலை வாய்ப்பட்ட துரும்பு போலிருக்கிறது. ஒவ்வொரு மணி நேரமும் ஒவ்வொரு நிமிஷம் போல் பறக்கின்றது. கெடியா ரத்தின் மணி அடிக்கும் போதெல்லாம், மரகதவல்லியின் உயிர் போய் போய் வருகிறாப் போலிருக்கின்றது. மணியோ காலை நான்காய்விட்டது. தனது தாயாரும் மற்றைய தோழி களும் வந்து மரகதவல்லியை ஸ்னானம் செய்வித்து, கலியா ணத்திற்காக தருவித்த புதிய ஆபரணங்களாலும், உடைக ளாலும் அலங்காரம் செய்து, மணப் பந்தலுக்குள் அழைத்து வந்தனர். மணமகளின் முகம், வதங்கின ரோஜா மலரை ஒத் திருந்தது. வேதமோதும் ஐயர் பலவித மேளகோஷ்டத்தி னிடையில் தனது வேலையைச் சீக்கிரம் முடித்துக்கொண் டிருக்கிறார்.

அன்பர்களே! இது பெரிய வொரு பிரபு வீட்டுக்

கலியாணமாகையால், இதன் பெருமையைப்பற்றி அதிகமாக விவரிப்பது அனுவசியம். வாசகர்களே ஊகித்துக் கொள்ளவும். கதையின் சாரம் குறையுமாதலாலும், கதாநாயகனுடைய சாமர்த்தியமான விஷயங்களை இனி நண்பர்கள் படிக்க வேண்டியிருத்தலால் இவ்விஷயத்தை வளர்த்தாது விடுகிறேன்.

மொத்தத்தில் சுருக்கமாக கூறுமிடத்து அக்கலியாணப் பந்தல் தேவேந்திரன் சபை போலும், அங்கிருக்கும் ஜனங்கள், கம்பர் கூறுகிறபடி ராமருக்கும் சீதைக்கும் மணமுடிக்கும் காலத்தில் வந்திருந்ததற்குமேல் வந்திருந்தா ரெனவும் கூறலாம். அப்படியிருக்கும் பொழுது, குனிந்த நடையுடன், கால் கை பட படவென உதரிக் கொண்டிருந்த ஒருவயோதிகப் பெரியார் ஊன்றின தடியுடன் உள் நுழைந்தார். ஜன நெருக்கத்தால் உட்கார விடமின்றி தவித்தார். அங்கு வருகிறவர்களை வரவேற்றுக் கொண்டிருந்த பெண்ணின் பிதா இப் பெரியார் உட்கார விடமில்லாமல் தவிப்பதையும், நிற்க முடியாமல் கால்கள் தள்ளாடுவதையும் கண்டு, மிகப் பரிதாபப்பட்டு அவரை உட்கார வைக்க விடமில்லாமல், கடைசியில் மணப்பெண்ணுக்குப் பக்கத்தில் நின்றிருந்த ஒரு ஸ்திரீயைச் சற்று விலகி இருக்கச் சொல்லி அவ்விடத்தில் இப் பெரியாரை உட்கார வைத்தார்.

சிலர் அவரைப்பார்த்து, 'ஐயோ பாபம்! இவர் ஏன் இக் கலியாணத்திற்கு வரவேண்டும். தொண்ணூறுஞ் சென்ற துவண்ட கிழவரிவர். தாடியும், தலை மயிரும், வெண்காளாம் பூத்ததுபோலும், கால், கை, தலை, யெல்லாம் ஸ்பிரிங்கை வைத்து பொருத்தி யிருக்கின்றுப் போலும் என்னேரமும் ஓய்வில்லாமல் ஆடிக்கொண்டிருக்க, ஏனிவ்வளவு கஷ்டப்பட்டு வந்தார் என்றுர்கள். சிலர், பிள்ளை வீட்டாருக்கு அதிக வேண்டியவர்போ லிருக்கிறது,

அதனால் தான், தன் கஷ்டத்தையும் பாராது முகூர்த்தத் திற்கு முன் வந்து சேர்ந்தார் என்றார்கள். சிலர் அப்படி யல்ல பெண் வீட்டாருக்கு வேண்டியவர்போ லிருக்கிறது, அதனால் தான் பெண்ணின் தகப்பனார் கஷ்டப்பட்டு அவ ருக்காக வந்த இப்பெரியாரை அழைத்து வந்து பெண் ணுக்குச் சமீபத்தில் உட்கார வைத்திருக்கிறார் என்றார்கள். மற்றுஞ் சிலர், அப்படியல்ல, பெண்ணுக்கு ஏதாவது பரிசு செலுத்த வந்திருப்பார் என்றார்கள். வேறு சிலர் அப்படி யெல்லாம் அல்ல; கலியாண வீட்டுக்கு எவர் வந்தாலும், மரியாதையுடனும் அன்புடனும் உபசரித்து உட்காரவைப் பார்கள். இப்படித்தான் தெரியாதவர்கள், கலியாண வீட் டில் யாராவதொருவர், கொஞ்சம் டம்பமாக வருபவரை யும் அல்லது, கலியாணத்து சொந்தக்காரர் கொஞ்சம் உப சாரம் அதிகம் செய்யப்பட்டவரை யாவது கண்டு இவர் பெண் வீட்டாருக்கு முக்கிய சொந்தக்காரராக இருக்கும், அல்லது, பிள்ளை வீட்டாருக்கு அதிக சொந்தக்காரராக இருக்கும் என்று நினைத்துக் கொள்வது. பெண் வீட் டார்கள் நினைப்பது, பிள்ளை வீட்டாருக்கு அவர் அதிக பந்துவா யிருப்பார் அதனால் தான் இப்படிப் பாடு படுகிறார் என்றும், பிள்ளை வீட்டார், பெண் வீட்டாருக்கு இவர் அதிக சொந்தமாயிருக்கு மென்று மெண்ணி இவரை யாரென கேட்கக்கூட அச்சப் பட்டு கேட்காமலிருந்து விடு வார்கள். சில வேளை, வந்தவன் மோசக்காரப் பயலாயிருந்து ஏமாந்திருக்கும் சமயம் பார்த்து, நகை, துணி, பாத்திரம், அல்லது வந்திருக்கிரவர்கள் பையில் வைத்திருக்கும் பணம், அல்லது மாதர்கள் முதலிய ஏதாவது, கிடைத்த வரைக்கும் அடித்துப் போய் விடுவார்கள் என்று பலர் பல விதமாகப் பேசிக்கொண் டிருந்தார்கள். வேதமோதும் ஐயர் சடங்கு களை யெல்லாம் இனிதுடன் நிறைவேற்றி மாங்கல்ய தார

ணம் தரிக்க மந்திரோச்சாடனம் செய்துக் கொண்டு, வழக் கப்படி ஒரு தட்டில் அரிசி பரப்பி, அதன் மேல் மஞ்சள் குங்குமத்தால் அலங்கரித்த தேங்காயை வைத்து மஞ்சள் கயிறுடன் கூடிய தாலி, வெற்றிலை பாக்குடன், ஐயர் மஞ்சள் அரிசியை எல்லோர் கையிலும் கொடுத்து ஆசீர்வாதம் பெற்று வருகிருர்.

பெண்ணின் மனமோ, தாமரை இலை தண்ணீர் போல் தத்தளிக்கிறது. கண்ணீர் விட்டு கலங்குகிருள். பெண் குனிந்துக் கொண்டிருப்பதால் பெண் அழுகிறது யாருக்கும் தெரியவில்லை. ஐயோ இதுவரைக்கும் காதலன் வரவில்லையே! வந்திருந்தால் இவ்வளவு நேரம் சும்மாயிருப்பாரா! இதோ, தாலி ஆசீர்வாதம் பெற்று வருகிறது. வந்ததும் என் கழுத்து, இப்பக்கத்திலிருக்கப்பட்டவனுக்கு வணங்கி அவனளிக்கும் பொருளை வணக்கத்துடன் பெற்றுக் கொள்ளப் போகிறது. ஐயோ! இம்மண மகனுடைய தேகம் என் மீது சற்று படும் போதெல்லாம் நெருப்பில் படுகிறுப்போல் என துள்ளம் வேகிறதே. ஈசா! எனதுயிரை உமதடி சேர்த்துக் கொள்ள உமதெண்ணம் போலும். நாதா! நான் போட்ட கடிதம் உமக்கு வந்து சேராதிருந்தாலும், இங்கு மும்முரமாய் நடக்கும் கலியாண ஏற்பாடு இன்றைக்காவது உமக்குத் தெரியாதா? இல்லை, தெரிந்தும், இனி அக்கனி நமக்கு கிடைக்காது என்றிருந்து விட்டீரா! என்னை வெறுத்து விட்டீரா? அல்லது, என்னை மணஞ் செய்துகொள்ள உம் மால் சாத்தியப் படவில்லையா? ஒன்றுந் தெரிய வில்லையே! உம், கடைசியில் இன்னும் சற்று நேரத்தில் உயிர் விடத் தான் வேண்டும் போலிருக்கிறது. ஆனல் இன்னும் பயப் பட வேண்டாம் என்று என் மனம் எனக்கு திடநம்பிக்கை சொல்லுகிறது. நாதா! நானிறந்தால் அது உம்மாலேயே என்று நீர் அறிந்து கொள்ளவும்; மறு ஜன்மத்திலாவது,

நீரும் நானும் தம்பதிகளாக வேண்டுமென்று கடவுளை வேண்டுகிறேன், என்று எண்ணிக்கொண் டிருக்கும் பொழுது, ஆசீர்வாதத்திற்கு போன ஐயர் சமீபத்தில் வர பயத்தால் அவ்வெண்ணம் மறந்து, உடல் நடுங்கிக்கொண்டு தன் ஸ்மரணை யற்று உட்கார்ந்துக் கொண்டிருந்தாள்.

தாலி தட்டில் வைத்திருந்த ஐயர், தாலித் தட்டை ஆசீர்வாதத்திற்காக, பெண்ணுக்குப் பக்கத்திலிருந்த பெரிய வரிடம் நீட்டிக் கொண்டே பின் பக்கம் தானுதைத்த விட்ட ஒரு மரியாதையுள்ள மனிதனுக்குச் சமாதானம் சொல்லிவிட்டு திரும்பிப் பார்த்தார். ஆ, என்ன ஆச்சரியம்! தட்டிலிருந்த தாலியைக் காணோம். ஐயர் திகிலுடன் எதிர் நோக்குஞ் சமயம் அக்கிழவனுர் அத்தாலியை பெண்ணின் கழுத்தில் கட்டிக் கொண்டிருந்தார். பெண்ணோ கவலையால் தன்னை மறந்திருந்ததால் யார் தனக்குத் தாலி கட்டுவது என்பதைக் கூட அறிந்தவளல்ல. ஐயர் இவ்வனியாயத்தைக் கண்டு ஒரே கூச்சல் போட, எல்லோரும் 'என்ன? என்ன?' என்று அருகில் ஓடி வந்து செய்தி தெரிந்து கொண்டு, ஆ ஆ! கிழவன் மோசம் செய்தான், பெண்ணைக் கெடுத் தான். பிடி, பிடி, திருட்டுக் கிழவனை அடி அடி, உதை உதை, என்று கூச்சல் போட்டு ஒருவருக் கொருவர் மேலெழுந்து விழுந்துக் கொண்டு முன்னுக்கு வந்தார்கள். ஆஹா என்ன ஆச்சரியம், கிழவனைக் காணோம், பெண்ணைக் கை பிடித்துக் கொண்டு ஒரு குமரன் கம்பீர்யத்துடன் நிற்கிறுன். சமீபத்தில் பொய் தாடி, மீசை, தடி, கிடக் கின்றன. கிழவன் குமரனுய் விட்டான். ஆ, ஆ, இவன் எமகாதகன்! என்று சபையில் ஒரே சப்தம் உண்டாயிற்று. கிழவன் குமரனுய் விட்டான் என மற்றொருதரம் பலத்த சப்தம் கிளம்பியது. பெண்களின்கூட உட்கார்ந்திருந்த மாப்பிள்ளை ஆச்சர்யத்தாலும் பயத்தாலும், வாய்மூடி திகைப்பூண்டு

மிதித்தவன்போ லிருந்தான். பெண்ணும், புது மாப்பிள்ளை யும், எழுந்து நின்ற சமயம் மறுபடியும், எமகாதகன், எமகாதகன், போலீஸ் உதவி வேண்டும் என்று கூப்பாடு போடும் சப்தத்தை கேட்ட மணப்பெண், சற்று தலைநிமிர்ந்து பார்த்தாள். ஆ என்ன ஆச்சரியம்! தன் கண்ணையே நம்பாமல், மிரண்டு மிரண்டு, அண்ணாந்து தவமணியைப் பார்த்தாள். "கண்மணி, பயப்படாதே, நான் தான் உன் மனத்தின் மணியாகிய தவமணி, யான் தான் உனக்குத் தாலி கட்டினேன். அஞ்சாதே, சந்தோஷமாயும், தைரியமாகவும் இரு" என்ருன் தவமணி.

இவ் வெதிர்பாரா சம்பவமான தன் மணாளனைக் கண்டதும், ஆ கடவுளே! "மனம்போல மாங்கல்யம்" என ஒரே வார்த்தையைச் சொல்லிவிட்டு, சந்தோஷத்தால் திடீரென மூர்ச்சை யடைந்தாள் மரகதவல்லி. பக்கத்தில் நின்றிருந்த எமகாதகனென்னும் தவமணி, தன் இடது கையால் அவளைத் தாங்கி கீழ்விழாமல் அணைத்துப் பிடித்துக்கொண்டு, மற்றொருகையால், பையிலிருந்த ரிவால்வரை (சிறு கை துப்பாக்கி) எடுத்து நீட்டி, தன்னை எதிர்த்து ஆத்திரத்தால் அடிக்க வந்த சிலரையும், பெண்ணின் தகப்பனரையும், பெண் வீட்டாரையும், நோக்கி அடே! கவனியுங்கள், அங்கேயே நில்லுங்கள்; ஒரு அடி முன்னுக்கு வந்தால், உங்களை அற்ப நாயைச் சுடுகின்றதுப்போல சுட்டுத் தள்ளுவேன். என் பொருளை நான் அடைந்தேன். நீங்கள் பேசாமல் செல்லுங்கள். உங்கள் விதி முடிகிற தென்ருல் அருகில் வாருங்கள், என கெம்பீரமாய், வீர வார்த்தைகள் மொழிந்து நின்ருன். பின் பெண்ணின் தகப்பனரைப் பார்த்து, மாமா! உமது பெண் பிரியப்படியும், ஆதியில் நீர் சொன்ன வாக்குறுதி பிரகாரமும், நான் செய்தேன். என்மீது பிசகில்லை. உமக்கு வருத்தம் வேண்டாம். வேணுமென்ருல் உமது பெண்ணை

நீர் அழைத்துக் கொள்ளும். கூப்பிட்டு பாரும், உமது பெண் வருகிறளா பாருங்கள், எனக் கேலி கலந்த கெம்பீர வார்த்தை புகன்ருன்.

பெண்ணின் தகப்பனர், பெண்ணே! இங்கு வந்து விடு, அங்கே நிற்காதே, கிளியை வளர்த்து பூனையிடம் பலி கொடுத்தாற் போலாயிற்று. அவன் எமகாதகன்; அவனுடன் நிற்காதே. ஓடி வந்து விடு. பயப்படாமல் வா. அம்மா அழுகிருள். வந்துவிடு. கண்மணி மரகதவல்லி, வந்துவிடு என்ருர்.

மரகதவல்லி, வேண்டா மப்பா. நான் பின் வருகிறேன். இவரையேதான் யான் மணம் செய்துக்கொள்ள இருந்தேன், அப்படியே முடிந்தது. பொருள்காரருக்குப் பொருள் சேர்ந்தது. தாங்கள் மன வருத்தமாவது, கோபமாவது அடையாமல், அம்மாவுக்குத் தேறுதல் சொல்லுங்கள் என்ருள்.

தகப்பனர் வெட்கத்தால் தலை குனிந்து வாய் மூடினர்.

உடனே எமகாதகன் மரகதவல்லியை இடது கையால் அணைத்துத் தூக்கினபடி துப்பாக்கியால் பயமுறுத்திக் கொண்டே ஜனங்களை விலக்கிச் சென்று, தான் தெருவில் தயாராய் வைத்திருந்த மோட்டாரில் ஏறி மாயமாய் மறைந்து சென்ருன்.

பின் பெண்ணின் தகப்பனர் இதைப் போலீசுக்குத் தெரிவித்து, எமகாதகனைச் சரியானபடி தண்டிக்க வேண்டுமென்று ஏற்பாடுகள் செய்துக்கொண் டிருந்தார்.

இதைக்கண்ட சில பெரிய மனிதர்கள், நீர் செய்யப் போவது வீண் காரியம். நடந்தது நடந்தாயிற்று. மறுபடியும் தாலி யவிழ்த்து வேருெருவனுக்குக் கலியாணம் செய்ய முடியுமா? இவைகளை யெல்லாம் நீர் போலீசில் சொல்லி சாக்ஷி சம்மன் செய்துகொண் டிருந்தால், பெண்ணின் தகப்பனராகிய உமக்கு அவமான மில்லையா? அங்கு போன

னும், நீர் வெட்கப்படுவீரே ஒழிய, சிறிதேனும் ஜயமடையப் போவதில்லை. "உமது மகளும் அவனையே நேசிக்கிறாள். ஆகையால் இனி பெண்ணைக் கொடுத்தோமோ கண்ணைக் கொடுத்தோமோ" என்றபடி இனி நம் பெண் நம்மீது குறை கூறாமல் சந்தோஷமாய் இருக்க வேண்டுமானால், நீர் அவர்களிருவருக்கும் வேண்டிய மரியாதைகளை வழக்கப்படி செய்தனுப்பும். நீர் வீண் பிரயாசைப்படாதேயும், என்றார்கள்.

அதைக் கேட்ட மரகதவல்லியின் தகப்பனார் சிந்தித்துப் பார்த்து, இவர்கள் சொல்வதும் சரிதானென்று தீர்மானத்திற்கு வந்து, எமகாதகனைப் பெண்ணுடன் அழைத்து வரும்படி ஆள் அனுப்பினார்.

எமகாதகனும் கொஞ்சமேனும் அஞ்சாமல் பெண்ணுடன் மாமனார் வீடடைந்து, அவர்கள் விருப்பில்லாது விருப்புட னளித்த உபசாரத்தையும், சீதனத்தையும் பெற்றுக் கொண்டு பிதா வீட்டிற்கு, இரண்டு மூன்று நாள் சென்று, மனைவியுடன் வந்தான்.

தவமணியின் தகப்பனார் தன் குமாரனின் சாமர்த்தியத்தைக் கேள்விப்பட்டு அளவிலாச் சந்தோஷ சாகரத்திலாழ்ந்திருந்தார். ஆனால் அவன்மீது சற்று மனத் தாங்கலாகவே இருந்தார்.

---

## அத்தியாயம்—6

### எதிர்பாராத அதிர்ஷ்டம்

கலியாணம் இனிது நிறைவேறி மாதம் இரண்டாயிற்று. மரகதவல்லியின் தகப்பனாருக்கு மருமகன்மீது கொஞ்சமேனும் பிரியமென்பதே இல்லை. சரியாகப் பேசுவதுமில்லை. இதை யுணர்ந்த தவமணி, நான் இப்படி யிருந்தால் என்னை மதிக்க மாட்டார்கள், ஆகையால் நான் வெளியூர்

சென்று, ஏதாவது வியாபாரம் செய்து, தனிகனான பிறகு தான் இவர்கள் என்னை மதிப்பார்கள். பிதாவை ஏதாவது வியாபாரம் செய்யப் பொருள் கேட்டால் நான் வீண் செலவு செய்து விடுவேனென்று அவர் கொடுக்கவு மாட்டார். ஏதாவது உத்தியோகஞ் செய்யலாமென்றால், அதுவும், இக் காலத்திற்கும் எனக்கும், பொருந்தாது. ஆகையால் "தன் கையே தனக் குதவி" என்றபடி, நாமே நன் முயற்சிசெய்து பொருளீட்டல் வேண்டுமென்றுணர்ந்து, தன் நாயகியினிடம் போய் தான் கொஞ்சம் ஒழுங்காக ஆனபிறகு அவளை வச வழைத்துக் கொள்கிறேன் என்று சொல்லி, விடைபெற்று, பிரிய முடியாமல் பிரிந்து, அன்றிரவே நாகப்பட்டணத் திற்குப் பிரயாணமானான்.

கையில் 10–ரூபாய் பணத்துடனும், கொஞ்சம் நாகரீக உடையுடனும், சென்றான். மறுநாட் காலை நாகப்பட்டணத்தி லிறங்கி, சமுத்திரக் கரையோரம் சென்று, தன் கையில் அன்றைய சமாச்சாரப் பத்திரிகையை வைத்துக் கொண்டு, என்ன செய்யலாம் என யோசித்தபடி உலவிக் கொண்டே இருந்தான். அச்சமயம் படகிலிருந்து ஒருவனிறங்கி நமது தவமணியிடம் வந்து, 'ஐயா தாங்கள் யாவர்? இவ்வூர் வியா பாரி தானே?' என்றான். தவமணி, ஆம் என்று பதிலளித் தான்.

வந்தவன்.—இங்கு இந்த ரங்கூன் கப்பலை எதிர் பார்த் திருந்தீரோ?

(தவமணி இவன் இப்படி கேட்பதைக் கண்டு, என் னமோ விஷயம், நமக்கேதாவது இன்று கிடைக்கும்போ லிருக்கிறது. பார்ப்போம், எது வந்தாலும் வரட்டும், இவன் குறிப்பறிந்து பதில் சொல்லுவோம், என எண்ணி)

தவமணி.—ஆம். ஏதாவது விசேஷமுண்டா?

வந்த.—ஆமாம். லக்ஷம் அரிசி மூட்டை ரங்கூனி

விருந்து சிலோனுக்கு ஏற்றுமதி செய்து இக் கப்பலில் போகிறது. ஆனால் ஆர்டர் கொடுத்த வியாபாரி தனக்கு வேண்டியதில்லை எனத் தந்தி கொடுத்து விட்டாராதலால் உங்களுக்கு வேண்டுமானால், இன்வாய்ஸில் (பட்டியல்) இருக்கின்ற விலைப்படி இங்கு உங்களுக்கு இறக்கி விடுகிறோம். வேண்டுமா ? அல்லது நான் வேறு வியாபாரிகளிடம் போகட்டுமா ? என்றான்.

தவமணி.—(சற்று சிந்தித்து, வருவது வரட்டும், என எண்ணி) சரி, நானே எடுத்துக் கொண்டு விடுகிறேன். சீக்கிரம் இறக்கி விடுங்கள், என்றான்.

வந்தவன் சரியென தவமணியிடம் கை யெழுத்து வாங்கிக் கொண்டு மூட்டைகளை இறக்குவதில் கவனமாய் இருந்தான். சரமாரியாய் மூட்டைகள் இறங்கிக்கொண்டிருக்கின்றன. தவமணி காப்பி சாப்பிட அருகிலிருந்த ஹோட்டலுக்குச் சென்று விட்டான்.

அச்சமயம் அவ்வூர் வியாபாரிகளெல்லாம் கப்பல் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு, கடலோரம் வந்து, மூட்டை இறக்குகிறவனைச் சூழ்ந்துக் கொண்டு, இம் மூட்டைகளை எங்களுக்கு ஒப்படையுங்கள். இதற்கு யார் முதலாளி ? என்றார்கள்.

மூட்டை இறக்கும் மேஸ்திரி.—வியாபாரிகளே! எனிங்கு மூட்டையைச் சூழ்ந்துக் கொண்டு இரைச்சல் போடுகிறீர்கள் ? 'இவைகளெல்லாம் ஒரு வியாபாரிக்கு ஒப்படைத்து விட்டோம். அவர் காபி சாப்பிட அதோ அந்த ஹோட்டலுக்குப் போயிருக்கிறார், எனக் கூறினான்.

வியாபாரிகள்.—எவ்வளவு மூட்டைகள் ?

மூ—மேஸ்திரி.—லக்ஷம் மூட்டைகள்.

வியாபாரிகள்.—அப்பா! லக்ஷ மூட்டையும் யார் நமக்

குத் தெரியாமல் எடுத்துக் கொண்டது? கப்பல் வரும் செய்தியே நமக்குத் தெரியவில்லை. இரவு வந்த கப்பலி லிருக்கும் மூட்டைகளை முன் வந்து எவன் ஒப்படைத்துக் கொண்டான்? இவன் எந்த வியாபாரியோ! இவனைப் பார்ப்போம், வாருங்கள். ஒருவேளை ஏதாவது கொஞ்சம் லாப தொகை கொடுத்து விட்டால் நமக்கு ஒப்படைத்து விடுகிறா என்று கேட்டுப் பார்ப்போம் என அவர் பெயரைத் தெரிந்துக் கொண்டு அக் காபி ஹோட்டலுக்குள் கும்பலாக நுழைந்து, தவமணி காப்பி சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுதே, ஐயா! அந்த லக்ஷம் மூட்டையை எங்களுக்கு ஒப்படைத்து விடுங்கள், எனக்கு ஒப்படைத்து விடுங்கள், எனக்கு ஒப் படைத்து விடுங்கள், என ஒருவர்க் கொருவர் போட்டி போட்டிக் கொண்டு கேட்டனர்.

எமகாதகன் சமயத்தை உணர்ந்துக்கொண்டு, ஐயா! நீங்கள் யாவர்? ஏன் இப்படித் தொந்திரவு கொடுக்கிறீர்கள்? என்னைவிட் டப்புறம் செல்லுங்கள். காபி சாப்பிடுவதற்குள் மென்னியைப் பிடிப்பதுபோல் இப்படி விழுந்தடித்துக்கொண்டு வருகிறீர்கள். போங்களய்யா என் வியாபாரத்திற்கு மூட்டையை நானெடுத்தேன். வேலையற்றவனு யான்? உங்களுக்கு விட்டுப்போக. நீங்கள் வியாபாரிகளா? வெட்டி யாட்களா? உங்களைப்போல் என்னை நினைக்கவேண்டாமா? செல்லுங்களய்யா, என்னை விட்டு விடுங்கள், என்று சற்று கோபத்துடனுரைத்தான்.

வியாபாரியில் ஒருவன்.—கோபம் வேண்டாம். தாங்கள் வெளியூர் வியாபாரி ஆயிற்றே, இவைகளை எல்லாம் எடுத்துப்போய் வியாபாரம் செய்வது சற்று கஷ்டமாயிருக்கும் உங்களுக்கு,என்று கேட்க வந்தோம். தங்களுக்கு மூட்டை ஒன்றுக்கு லாபம் ஏதாவது தருகிறோம், மூட்டைகளை எங்களுக்குக் கொடுத்துவிட்டால் நலமாயிருக்கும்.

எமகா.—சரி, தகுந்த லாபம் வருவதாய் இருந்தால் ஒரு வேளை விட்டுவிடுவதைப்பற்றி யோசிக்கலாம்.

இதற்குள் அங்கிருந்த கிழச்செட்டி யொருவன் எமகாதகனைப் பார்த்து, ஏனய்யா, வாங்கின மூட்டையை விற்று விடுகிறீர், பணம் கிணம் ஏதாவது முடையாயிருந்தால் யான் உமக்கு வட்டிக்குத் தருகிறேன். பெற்றுக்கொள்ளுங்கள். மெதுவாய்க் கொடுக்கலாம்.

எமகா.—அவனைச் சற்று உற்றுப் பார்த்தான். அவனுடைய பார்வை எமகாதகனுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும், செட்டியாரே! எனக்குப் பணம் ஆண்டவனருளாலும் உமதருளாலும் ஏராளமாயிருக்கிறது. வேணு மென்றால் பின் வாங்கிக்கொள்ள தெரியும்.

செட்டியார்.—சரி, அப்படியே செய்யுங்கள். வேணு மென்றால் என் விலாசத்திற்கு தெரிவியுங்களென்று, தானே வலிய தனது விலாசத்தை செப்பினான்.

இதற்குள் வியாபாரிகளில் ஒருவன் எமகாதகனிடம் வந்து, 'ஐயா! மூட்டை ஒன்றுக்கு ஒரு அணு கொடுத்து விடுகிறேன், எனக்கு கொடுத்திடுங்கள்' என்றான். மற்றொரு வியாபாரி 'இரண்டணு தருகிறேன், எனக்கு ஒப்படைத்து விடுங்கள்' என்றான். மூன்றுவதாக ஒரு வியாபாரி நாலணு தருகிறே னென்றான். இப்படியாக ஒருவருக் கொருவர் போட்டி போட்டுக்கொண்டு மூட்டை ஒன்றுக்கு ஒருரூபாய் வீதம் தருகிறதாக உயர்த்தி விட்டார்கள். எமகாதகன் சமயமறிந்து, கொஞ்சம் லகுபிகுவாகவே ஒத்துக்கொண்டான்.

உடனே ஒரு ரூபாய் லாபங்கொடுக்கச் சம்மதத்தி வியாபாரி, லக்ஷ ரூபாயை நோட்டாக எண்ணிவிட்டான். எமகாதகன், பணத்தை எடுத்துக்கொண்டு அவ்வொப்பந்தத்தை அவ் வியாபாரிக்கு மாற்றி ஒப்படைத்துவிட்டான்.

இந்த லக்ஷ ரூபாயையும் எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டு, இவ் வெதிர்பாரா அதிர்ஷ்டத்தை நினைத்து நினைத்து அகமகிழ்வுகொண்டு, இந்த லக்ஷ ரூபாயை நாமென்ன செய்வது, எனப் பற்பலவிதம் யோசனை செய்து கடைசியாக இதைத் தர்ம வழியில் செலவழிப்பது நல்லதென தீர்மானத்திற்கு வந்து, சந்தோஷப்பட்டுக் கொண்டே சென்றான்.

பணம் கடன் தருகிறேனென்று சொன்ன செட்டி இவனுக்கு ஒரு மணி நேரத்தில் வந்த அதிர்ஷ்டத்தைப் பற்றி வயிறெரிந்தான். இருந்தாலும், முகத்தில் கட்டாயச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு, எமகாதகனுடன், நயமாய்ப் பேசிக்கொண்டே, தங்கள் தயவிருக்கவேணும். யான் பலவித வியாபாரி. வட்டிக்கு ஆயிரக் கணக்காய் பணம் கொடுப்பதுண்டு என்று நெடுந்தூரம் பேசிக்கொண்டே வந்து வழிவிட்டுச் சென்றான்.

நம் எமகாதகன் அந்த லக்ஷ ரூபாயையும் பத்திரப் படுத்திக்கொண்டு தான் தங்கவேண்டி ஒரு நல்ல இடத்தை நாடிச் சென்றான்.

---

## அத்தியாயம்—7

### கல்கிணற்றுக்கேற்ற இரும்புத் தோண்டி

நாகப்பட்டணத்தில், எங்குப் பார்த்தாலும் பிச்சைக்காரரும் ஏழைகளும், நேற்றிருந்த கந்தல் துணிகள் இல்லாமல், இன்று ஆண் பெண் எல்லோரும் முறையே ஒவ்வொரு ஜதை புது வேஷ்டி, புதுப் புடவை கட்டிக் கொண்டு, வயிறார உண்டு, இன்று யாரோ ஒரு புண்ணியவான் தங்கட்கு புதுத் துணி தர்மஞ்செய்து, வயிறார போஜன மளித்தாரென்று வாயார வாழ்த்திச் சென்றார்கள்.

அன்று வந்த சமாச்சாரப் பத்திரிகையில் பெரிய கொட்டை எழுத்தால், தாய் நாடு முன்னேற நிமித்தம், உழைக்கும் காங்கிரஸ் சபையார் மூலம், தேச நன்கொடைக்காக, பேர் தெரிவிக்காமல் ஓர் புண்ணியவான், சுமார் ஐம்பதினுயிரம் ரூபாய், தியாகம் செய்ததாகப் பிரசுரப்படுத்தி இருந்தது.

அவ்வூரில் இன்னும் பலவிடத்தில் தருமங்கள் நடந்து வந்ததே யன்றி, அத்தருமகர்த்தா யாரென்பது தெரியாமல் ரகசியமாகவே இருந்தது.

நிற்க, எமகாதகன் தன்னுடன் நெடுந்தூரம் பேசி வந்து வழிவிட்டுப்போன வியாபாரி, யாராயிருக்கும். அவன் ஏன் தன்னுடன் அவ்வளவு அக்கரையாய்ப் பேசி வந்து வழிவிட்டுப் போனுன். தனக்குக் கடன் வேண்டுமென்றால் தருகிறே னென்றுனே. அவன் ஏராளமான தனத்துக் கதிபதிபோலும். இருக்கட்டும், அவனிடம் ஏதாவது பட்டாலும்படும், அவன் வரலாற்றை விசாரிக்கவேண்டும், என்று தந்திரமாய் விசாரித்ததில் அடியில் கண்ட தகவல்கள் அவனுக்குக் கிடைத்தன.

அவ்வியாபாரி வைசியகுலத்தினன். சிறுபொழுதில் சாப்பாட்டிற் கில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தான். அவனுடைய நண்பர்களில் ஒருவர் தனக்கும் பங்காளிகளுக்கும் ஒரு வியாஜ்ஜிய விஷயமாய் தன்னிடமிருந்த சில நகைகளையும் வைரங்களையும் இவனை நம்பிக்கொடுத்துவைத்து, தான் பங்காளி வியாச்சியம் முடிந்ததும் வந்து கேட்க, தன்னிடம் கொடுக்கவேயில்லை, என்று முன்பின் அறியாதவனைப்போல் சாதித்துவிட்டான். கொடுத்துவைத்த நண்பர், பணம் வாங்கிக்கொண்டவனுடைய கையெழுத்து சாட்சி முதலியன ஒன்று மில்லாததாலும், பங்காளியின் வியாஜ்ஜியத் தீர்ப்பில் தன்னிடம் யாதொரு பொருளும்

இல்லையெனச் சாதித்துவிட்டமையாலும், இப்பொழுது சொத்து இவனிடம் கொடுத்துவைத்தேன் கொடுக்கவில்லை என்றால், தனக்கு ஆபத்தாகவும், மானக்கேடாகவும், முடியு மென்றெண்ணி "பிராம்மண மாது உப்புக் கண்டம் பறி கொடுத்தாற்" போல, வெளியில் சொல்லாம லிருந்துவிட் டார்.

மோசம்செய்தபகரித்த ஏராளமான பொருளை, அச் செட்டி வைத்துக் கொண்டு பலவித வியாபார வழியில் இறங்கலானான். கடவுளும் இவனுக்கே உதவிசெய்ததால் நாளுக்கு நாள் லாபம் பெருகிற்று. பணத்தை வட்டிக்கு விடலானான். அதில்தான் இவனுக்கு நல்ல கந்தாயம். ஊரில் நூற்றுக்கு மாதம் 1-க்கு வட்டி ரூபாய் ஒன்றாயிருந் தால் இவன் ஐந்து வாங்குவான். இரண்டாயிரம் ரூபாய் வேண்டுமென்று கேட்டால் நாலாயிர ரூபாய்க்கு, கெடுப் போட்டு எழுதி வாங்கிக்கொண்டு, அவனைப் பல தடவை நடக்கவைத்து கொடுப்பான். கெடுதவறி ஒரு நாள் மேல் ஆனாலும் விடாமல் கிட்டிபோட்டுப் பணத்தைப் பெற்றிடு வான்; அன்றேல், கோர்ட்டில் வியாஜ்ஜியம் செய்து ஒன் றுக்குப் பத்தாகக் கணக்குப்போட்டுக் கடன்காரன் சொத்து களை ஜப்திசெய்து அவர்களை ஒட்டாண்டி யாக்கிவிடுவான். கருணையென்பது சற்றேனும் இல்லாதவன். இவனிடம் கடன்வாங்கி, இவன் வட்டிக்கும் கட்டாது, பல பேர் தங்கள் சொத்துக்களைப் பறிகொடுத்துவிட்டு, பரதேசியாகி விட்டார் கள். யார் எப்படிபோனாலும், தன் வயிறு பணத்தால் நிறம்பினால்போதும். தம்பிடிக்கு தம்பிடி தர்ம வட்டி என்று சொல்லி வாங்கிடுவான்.

முறிச்சீட்டு எழுதிக்கொண்டு பணம் கொடுக்கும் போதே தனக்கிஷ்டம்போல் போட்ட வட்டியை எடுத்துக் கொள்வான். திருப்பதி, பழனி முதலிய தர்ம உண்டி

கட்கு, என தாராளமாய் பணம் எடுத்துக்கொள்வான். எழுத்துக் கூலி, எழுதின பேபர் கிரயம், மைகிரயம், தான் இவ்வளவு நாழிகை உட்கார்ந்திருந்ததற்கு, காபி சாப்பிடச் செலவு முதலியவைகளுக்கும் கணக்குப்போட்டு எடுத்துக் கொண்டு மீதியைக் கொடுப்பான். இப்படிக் கொடுத்து விட்டு, நக்ஷத்ரகன் கிட்டிபோட்டு வாங்கினதற்கு மேல் கஷ்டப்படுத்தி கடனாளி இடம் பணத்தை வாங்கிடுவான். கடனாளியை வாயில் வந்தபடி திட்டுவான். மரியாதையுள்ள மனிதனுயிருந்தாலும் மானம்போக திட்டுவான். கடன் வாங்கினவர்கள், இவன் என்ன வைதாலும் எதிர் பேசாது இருந்துவிடுவார்கள்.

கடன் விஷயத்தில்தான் இப்படி யென்றாலோ, தான் முக்கியமாய்ச் செய்யும் ஜவுளி வியாபாரத்திலும், அரிசி வியாபாத்திலும், எப்படி யென்றால் மிகக் குறைந்த விலைக்கு பொருளைப் பிடித்து அனியாய விலைக்கு உதவியற்ற தினுசை விற்றுவருவான். வேறொரு வியாபாரி, ஒரு பொருளை நூதனமாக வரவழைத்து விற்றால் அது கொஞ்சம் செலவாகி வருகிறதாக இவனுக்குத் தெரிந்தால் இவன் வயிறு கொழுந்துவிட்டெரியும். இரவும் பகலும் நித்திரை கொள்ள மாட்டான். தனக்கு ஒரு கண் தெரியாமற் போனாலும் போகிறது, அண்டை வீட்டுக்காரனுக்கு, இரண்டு கண்ணும் போனால்போதும், என்ற பொறாமைப் பேய்பிடித்தாடுமிவன் எப்படியாவது எதிராளி வியாபாரத்தைக் கெடுக்க முயற்சிப் பான். அவன் வரவழைத்து விற்கும் தினுசுகள் போல தான் வரவழைக்க முடியாமற் போனாலும், அதைப் போலபோலித் தினுசை (இமிடேஷன்) யாவது வரவழைத்து, உண்மைத் தினுசு போலவே, அதாவது, பக்கத்துக் கடைக்காரன் செய்வதைப் போலவே செய்து, விளம்பரப்படுத்தி தன் பொருளை விற்பான். வாங்குவோர்கள் இருவரிடத்திலும்

ஒரு பொருள் இருப்பதால், ஆதனதன் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாமல், எவர்களிடமாவது வாங்கிப் போவார்கள். பின் அநுபோகத்தில் உண்மை விளங்க, நல்ல பொருளின் வியாபாரம் குறைந்து, பேரும் மங்கும். தான் நஷ்ட மடைந்தாலும் சரி, எதிராளி வியாபாரம் செய்யாதிருந்தால் அதுவே தனக்கு கோடி ரூபாய் வந்த மாதிரி மனமகிழ்ந்திருப்பான்.

இதற்கொப்ப, நம் நாட்டு வியாபாரிகளில் பெரும் பாலர் இப்படியே செய்து மோசம் போய், தானும் விர்த்தியாகாமல், எதிராளியையும் விளங்க வைக்காமல், அழுந்தி விடுகிறார்கள். ஒருவர், ஒரு பொருளுக்குப் புதுப் பெயர் கொடுத்து, வியாபாரக் குறிவைத்து, வியாபாரம் செய்து வந்தால் வேறு சிலர், தாங்களும், அதன் பெயரை வைத்தாவது அல்லது அதன் பெயரை ஒரு எழுத்தளவில் மாத்திரம் மாற்றியாவது, வியாபாரக் குறியையும் அது போலவே ஏற்பாடு செய்து, வியாபாரம் செய்கிறார்கள். முதலில் கொஞ்சம் அப்பொருள் செலவாகி வந்தாலும் கொஞ்ச நாள் சென்றால் அவ்வியாபாரிகளின் அயோக்யத் தனம் வெளிப்பட்டு விடும். பின் இருபாலார்க்கும் வியாபாரம் குறையும். ஆனால் உண்மைப் பொருள் செலவழிய கொஞ்சம் கஷ்டமாகும். வியாபார மதிப்பும், தன் மதிப்பும், இழந்து விடுகிறார்கள். இப்படிச் செய்யாமல் நாடு முன்னேறி நாம் முன்னுக்கு வந்து கீர்த்தி யுடனிருக்க வேண்டுமானால், ஒரு விதத்தில், அதாவது, எண்ணெய் வியாபாரத்தில் ஒருவர் விர்த்தியாக ஏற்பாடு செய்தால், தானும் அதையே செய்துக் கொண்டு போட்டா போட்டி போட்டு வியாபாரத்தைக் கெடுக்காமல், தான் வேறு வியாபாரத்திலிறங்கி பொருளீட்டல் வேண்டும். இவ் விந்தியாவின் பெருமைக்குக் காரணமாயிருக்கும் வியாபாரிகளே! நாம் மேல் எழுதி வந்த

தின் உண்மையைச் சற்று ஊன்றிப் பார்த்து வியாபாரம் செய்து, இந்தியாவிற்கு நற்பெயரளித்து இன்புற வாழுங்கள்.

பொறுமைக் குணமுடையோனை இப்படி யெல்லாம் இப்புத்தகம் முழுவதும் வர்ணித்தாலும் வர்ணிக்கலாம். சுருங்கச் சொல்லில், பக்கத்து வீட்டுக்காரன் வாழ்ந்தால் தான் பத்து நாளைக்குப் பட்டினி கிடப்பான். ஆனால் உண்மைக்கு என்றும் குறைவு இல்லை. முதலில் உண்மை வஸ்து வியாபாரம், இப்போலி வஸ்துக்களால் சற்று தாமதப் பட்டாலும், பின், உண்மை, உண்மையாகவே விளங்கும் என்பதை இச்செட்டி அறியாதிருந்தான்.

இப்பேர்ப் பட்டவனிடம் ஒருவர் யாசகத்திற்கு வந்து, ஐயா! கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள் என்றால், உடனே ஒரு ஆளைக் கூப்பிட்டு, இதோ இவனுக்குத் தண்ணீர் வேண்டுமாம், அதோ அந்த குளத்திற்கழைத்துப் போய், கிட்ட இருந்து தண்ணீர் வேண்டியளவு தாராளமாக, அருந்தும்படி செய். யாராவது இடையில் தடுக்கப் போகிறார்கள், என்று ஆளைக் கூட்டி அனுப்புவான். என்ன தாராளம்! தன் வீட்டோரம் நிழலில், சற்று யாராவது நின்றால் போதும், உடனே வயிரவர் வாகனம் போல் குலைத்து, விதியில்லா சோம்பேரிக் கழுதைகள் தங்கவா இவ்விடத்தில் வீடு கட்டி வைத்திருக்கிறேன். இதுவருவாரும், போவாரும், தங்கும் தங்குமடமா? என இடை விடாமல் தூஷித்து விரட்டித் துரத்துவான். அவன் ஆயுளிலும் ஒரு தம்பிடி தர்மஞ் செய்தறியான். மொத்தத்தில் தர்மம் இன்னதென்றே அவனுக்குத் தெரியாது.

மனிதவர்க்கத்திற்கே உபயோகமில்லா இச்செட்டியின் செய்தி யெல்லாம் எமகாதகன் விசாரித்தறிந்து, இப்பேர்ப் பட்ட கொடுங் குணங் கொண்டவனிடம் தனலட்சுமி எப்படி

பொருந்தியிருக்கிருள் இருக்கட்டும். இப்பேர்ப்பட்ட கருமியிடந்தான் நம்முடைய சாமர்த்தியத்தைச் சற்று காண்பிக்கவேண்டும். இவன் தான் இப்பணத்தை தர்ம வழியில் செலவழிக்க இஷ்டப்படா விட்டாலும் நான் செலவழிக்கிறேன் என்று எண்ண மிட்டு, சிந்தித்திருந்தான்.

* * * * * *

இரண்டு நாள் சென்று கலியுக மித்திரன் என்ற பத்திரிகையில், அடியில் வருமாறு விளம்பரப்படுத்தியிருந்தது.

## தேவை! உடனே தேவை!!

எங்கள் ஆபிசுக்கு, ஒரு பொக்கிஷதாரரும், ஒரு மானேஜரும் தேவை. பொக்கிஷாதார் முன் பணமாக எங்களிடம் ரூபாய் இரண்டாயிரம் கட்ட வேண்டியது. சம்பளம் மாதம் ரூபாய் 150. மானேஜரும் முன் பணம் ரூபாய் 3000 கட்டவேண்டியது. சம்பளம் இருநூற்று ஐம்பது ரூபாய். இன்றையலிருந்து 10 தினத்திற்குள் வரும் விண்ணப்பத்தை தான் கவனிக்கப்படும். முன் பணத்திற்கு நூற்றுக்கு மாதம் 1-க்கு வட்டி ரூபா. 1 கொடுக்கப்படும்.

லண்டன் எக்ஸ்போர்ட்ஸ் அண்ட் இம்போர்ட்ஸ்
கம்பெனி, (லிமிடெட்)
நாகப்பட்டணம்.

மறுநாளே, அக்கம்பெனி கட்டடத்தில் சுமார் பத்து பேருக்குமேல் விண்ணப்பத்துடனும் பணத்துடனும், வந்து சேர்த்து விட்டார்கள். தபாலில் விண்ணப்பங்கள் சுமார் ஐம்பதிற்கு மேல் வந்துவிட்டன.

அந்த * லண்டன் எக்ஸ்போர்ட்ஸ் அண்ட் இம்

---

* லண்டன்நகா ஏற்றுமதி இறக்குமதி கம்பெனி எனப் பொருள் படும்.

போர்ட்ஸ் கம்பெனிக்குச் சொந்தக்காரர் என சொல்லப் பட்டவர் அங்கு வந்திருந்தவர்களில் சிலரை பல விதத்தில் பரிட்சை செய்து இரண்டு பேரை பொக்கிஷதாரராகவும், மானேஜராகவும் எடுத்துக் கொண்டார். கூட மற்ற இரு வரை, வெளியூர் ஏஜண்டுகளாக எடுத்துக் கொண்டார். முன் பணத்தை வாங்கிக் கொண்டு, அவர்களுக்கு ரசீது கொடுத்து மறுநாளிலிருந்து வேலைக்கு வைத்துக் கொண்டார்.

இந்தப் பெரிய ஆபீஸ், அப்பட்டணத்தில் முக்கிய மான விடத்தில் ஒரு பெரிய இரண்டடுக்கு மாடி வீட்டில் அமைக்கப் பெற்றிருக்கிறது. வெளியில் கம்பெனியின் பெயரைக் குறித்து, சுமார் இருபதடி நீளத்திற்கும், நாலடி அகலத்திற்குமாக, செய்யப்பட்ட விளம்பரப் பலகை யொன்று சுவற்றில் பொருத்தப் பட்டிருந்தது. உள்ளே, ஆபீஸ் அறை, மானேஜர் அறை, சொந்தக்காரர் அறை, பொக்கிஷாதார் அறை முதலியன தனித்தனி ஐரோப்பியர் களுடைய பெரிய வியாபார ஸ்தலத்தைப் போல் மேஜை முதலிய சகலமும், ஒழுங்கு படுத்தி வைத்திருந்தன.

மறுநாள் வேலைக்கமர்ந்தவர்கள் சொந்தக்காரரால் வேலை இடப்பட்டு அவரவர்கள் வேலையைச் சரிவரச் செய்துக் கொண்டு வந்தனர்.

(வாசகர்களே! இதற்குச் சொந்தக்காரர் பல பேருக்கு இன்னும் யாரென்று புலப்படாதிருக்கலாம். அவர் தான் எமகாதகன். நாம் சொல்லாமலே சிலர் தெரிந்துக்கொண் டிருப்பார்கள்.)

வாரம் ஒன்றாகியது. எமகாதகன் அவ்வூரில் அனேக தனிகர்களுக்குத் தெரிந்தவனாய் விட்டான். அவனிடமிருக் கும் லக்ஷ ரூபாயல்லவோ அவர்களுக்கு அவனை அறிமுக மாக்கி வைப்பது. பணம் கையிலிருப்பின் பலபேர் நண்ப ராவது உலகவழக்கம். பின்னும் பல விண்ணப்பதார் வந்தார்

கள். அவர்களை யெல்லாம் எமகாதகப் பிரபு வேண்டா மென்று மறுத்து விட்டார்.

ஒருநாள் காலை எமகாதகப் பிரபு தன்னை அதிக அன் புடன் விசாரித்த செட்டியார் வீட்டுக்கு ஒரு மோட்டாரில் வந்திறங்கி செட்டியாரைப் பார்த்தார்.

செட்டியார்.—வாருங்கள் வாருங்கள், ஏது இவ்வளவு தூரம் தாங்கள் எழுந்தருளியது.

எம.—இல்லை தங்களைத் தரிசித்து விட்டுப் போகலா மென்று வந்தேன்.

செட்டியார்.—என்ன, தங்கள் வியாபரங்கள் எப்படி? தற்போது என்ன வியாபாரம் நடை பெற்று வருகிறது? நடக்கும் வியாபாரம் மும்முறம்தானே?

எம.—வியாபாரம் அனுகூலந்தான். நான் செய்யும் வியாபாரம் உங்களுக்குத் தெரியாதா? ஏன், நோட்டீஸ் களாலும், பேபரிலும் தெரிவித்திருக்கிறேமே? அதைப் பார்க்க வில்லையா?

செட்டியார்.—ஆமாம், ஏதோ புதியதாக இங்லீஷ்காரன் கம்பெனி ஒன்று ஏற்படுத்தியிருப்பதாகச் சொன்னார்கள், எனக்கொன்றும் அது புரியவில்லை. அது என்ன கம்பெனி?

எம.—அது இங்கிலீழில் தி லண்டன் எக்ஸ்போர்ட்ஸ் அண்ட் இம்போர்ட்ஸ் கம்பெனி லிமிடெட் (The London Exports and Imports Co., Ltd.) என்று சொல்வார்கள். அதாவது இந்தியாவுக்கு வேண்டிய சாமான்கள் எல்லா வற்றையும் லண்டனிலிருந்து வரவழைப்பது, லண்டனுக்கு வேண்டிய இந்திய சாமான்களை இந்தியாவிலிருந்து வாங்கித் தருவது தான் எங்கள் கம்பெனியின் வியாபாரம். எங்க ளுக்கு அது ஒப்பந்த மாகையால் வேறு யாருக்கும் லண்டன் வியாபாரிகளிடம் அவ் வியாபாரத்திற்கு ஈடுபடமாட்டார் கள். எங்களிடம் எற்றுமதி இறக்குமதி ஆகாத சாமான்க

ளாவது, சரக்குகளாவது இவ் விந்தியாவில் கிடையவே கிடையாது. எங்களுக்கு நான்கு கப்பல்கள் ஓடுகின்றன. எங்கள் கம்பெனி பங்குக்காரர்களை உடையது. (லிமிடெட் கம்பெனி.)

செட்டி.—மூலதனம் எவ்வளவோ?

எம.—10 லட்சம்.

செட்டி இதைக் கேட்டு வியப்புற்று, சற்று நேரம் திறந்த கண்ணும் விரிந்த வாயுமாய், ஆச்சரியங் கொண் டிருந்தார். மறுபடி, தாங்கள் அதற்குப் பங்குக்காரரோ என வினவினான்.

எம.—ஆம் பங்குக்காரர் தான். எல்லாபங்குக்காரரை விட என் பணம் தான் அதிகமா யிருக்கிறது. நான் தான் இக் கம்பெனிக்கு பொறுப்பாளியும் டைரக்டரு மானவன். சரி, நான்வருகிறேன், ஆபீசுக்குப் போகவேண்டும்.

செட்டி.—என்ன வந்தீர்கள், இதற்குள் புறப்பட்டுவிட் டீர்கள். கொஞ்சம் காபி சாப்பிட்டுவிட்டு போங்கள். ஆமாம், உங்கள் ஆபீசில் யாரோ இருவர் முன் பணம் கட்டி வேலைக்கு வேண்டுமென்றீர்களே. அந்த ஸ்தானம் பூர்த்தியாய் விட் டதோ?

எம.—ஓ அது மறுநாளே பூர்த்தியாகி, அவ்வேலைக ளுக்கு நாலு பேரை அமர்த்திக் கொண்டேன்.

செட்.—என், அவ்வளவு தொகை அவர்கள் டிபாசிட் டாக கட்டவேண்டுமோ?

எம.—என்ன? எங்கள் கம்பெனியை வந்து பாருங்கள், தெரியும். லட்சக் கணக்காக ரூபாய் ஒவ்வொருவர் கையிலும் புரண்டுவரும். சும்மா இது ஒரு அத்துக்காக அவர்களை அத் தொகை டிபாஸிட் கட்டச் சொன்னது. சரி, நான் போய் வருகிறேன், என்று விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

---

## அத்தியாயம்—8

### விடாக் கண்டனை கொடாக் கண்டன் ஏமாற்றினுன்

சுமார் ஒருமாதம் சென்று திடீரென ஏமகாதகப் பிரபு செட்டியார் வீட்டுக்கு மோட்டாரில் வந்து இறங்கியதும், செட்டியார் லக்ஷாதிபதி தன் வீட்டுக்குவந்து விட்டாரென, அதிக மரியாதையாக வரவேற்று, வந்த செய்தி என்னவென்று விசாரித்தான்.

எம.—என்ன செட்டியார்! இந்தியாவுக்கு சரக்கு ஏற்றி கப்பல் அங்கேயே லண்டனில் சுங்கவரி கொடுப்பதற்காக தாமதப்பட் டிருக்கிறது. இரண்டு லக்ஷ ரூபாய் கட்டித் தொலைக்கவேண்டும். நமது பாங்கில் லட்ச ரூபா யிருக்கிறதாம். இன்னும் லட்ச ரூபாய் வேண்டும். இன்றைக்குள் லட்ச ரூபாய் வேண்டும். பணத்தைக் கட்டி தந்தி கொடுத்து விடலாமென்று நினைக்கிறேன். எழவு, இந்த மாதக் கடைசியில் இந்த அல்ப லட்ச ரூபாய்க்கு முடையா யிருக்கிறது.

செட்டி தனக்குள் இவர் இரண்டு லட்ச ரூபாய் சுங்க வரி கட்டுவதா யிருந்தால் எத்தனை லட்ச ரூபாய்க்கு இவர் வியாபாரம் செய்யவேண்டும். அல்ப லட்ச ரூபா யென்று எவ்வளவு கேவலமாய் பேசுகிறுர் என யோசித்து, 'ஏன், லட்ச ரூபாய் வேண்டுமானுல் நான் ஏற்பாடு செய்கிறேன்' என்றுர்.

எம.—வேண்டாம். உங்களுக் கேன் கஷ்டம். நான் பார்த்துக் கொள்கிறேன்.

செட்டி.—இல்லை, கஷ்டமில்லை என் கையிலிருக்கிறது, தருகிறேன். நான் அவ்வளவு கேவலமானவனல்ல.

எமகா.—சரி, யாரிடமாவது கொடுத்தனுப்புங்கள், நான் போகிறேன்.

சேட்.—திருப்பித் தர எவ்வளவு நாள் செல்லுமோ ?

எம.—அட, என் னய்யா இது? இன்னும் எட்டு நாளைக்குள் வந்து வாங்கிக் கொள்ளுங்கள்.

சேட்.—ஏன், மெதுவாகத் தரலாம்.

எம.—வேண்டியதில்லை. உங்கள் கணக்கு என் பாக்கியில் நிற்கவேண்டாம்.

செட்டி.—வட்டி விஷயம், தெரியுமா தங்களுக்கு ?

எம.—என்னவோ உம் இஷ்டம் போல போட்டுக் கொள்ளும். நான்போகவேண்டும்.

செட்டி.—இதோ பத்திரம் எழுதிக் கொண்டுவந்து விடுகிறேன். கையெழுத்திடுங்கள். பணம் பெற்றுக் கொண்டு போங்கள். ஐந்து நிமிஷம் பொறுக்கவேண்டும்.

எமகாதகன்.—சரி ஆகட்டும் சீக்கிரம், நான் போகவேண்டும்.

செட்டியார் உடனே இரண்டு லட்ச ரூபாய்க்கு பத்திர மெழுதி, ஒரு லட்ச ரூபாய் முன் வட்டியாக தான் எடுத்துக்கொண்டு, மீதி லட்ச ரூபாய்க்கு ஒரு செக்குடனும், எழுதின பத்திரத்துடனும், 10 நிமிஷத்தில் திரும்பி வந்தார்.

எமகாதகன், இவ்வளவு நாழிகையா, எனச் சொல்லிக் கொண்டே அப் பத்திரத்தை சரிவரப் பார்க்காமலேயே கையெழுத்திட்டு* (பணம் திருப்பி தருகிறதா யிருந்தாலல்லவோ அதை சரிவரப் பார்க்கவேண்டும்) பணத்தை எதிர்பார்க்க, செட்டி செக்கை நீட்டினார்.

எமகாதகன்.—ஓ, வாட்டீஸ் திஸ் ? (What is this ?) எனக்கிந்த செக் வேண்டாம், எல்லாம் நோட்டாக கொடுங்கள், நான் மாத்திக் கொண்டிருக்க முடியாது.

* கையெழுத்திட வேண்டி யிருந்தால் தன் பெயரை மாற்றி கையெழுத்திட்டு வருகிறான்.

செட்டி.—நோட்டாக இவ்வளவு தொகை கையிலில்லை, வேணுமென்ருல் நானே பாங்கியில் மாற்றித் தருகிறேன்.

எம.—அப்படியே மாற்றி என் கம்பெனிக்கு அனுப்புங்கள். நான் போகவேணும், எனச் சொல்லிக் கொண்டே அவசரமாக மோட்டாரில் ஏறிச் சென்ருன்.

செட்டி, தனக்குள், இவனென்ன பத்திரத்தை நீட்டும் பொழுது அதைப் பார்வை யிடாமலேயே, கை எழுத்திட்டான். பின் கையெழுத்திட்ட பத்திரத்தையும் கொடுத்து விட்டான். செக்கையும் போட்டுவிட்டு வெகு அலட்சியமாய் சென்று விட்டான். நாம் இப்போது இப் பத்திரத்தை வைத்துக் கொண்டு இரண்டு லக்ஷ ரூபா இவனிடம் வசூல் செய்யலாமே. சே; வேண்டாம் முதல் எடுக்கும் பொழுதே, இப்படி யெல்லாம் செய்துக் கொள்ளக் கூடாது. இவன் பெரிய தணிகன். பின் இவனுல் வேண்டிய பணம் சம்பாதித்துக் கொள்ளலாம். இச்சமயம் ஒழுங்காக நடந்துக் கொள்வோமென எண்ணி, ஓடோடி அச்செக்கை பாங்கில் நோட்டாக மாற்றிக்கொண்டு, எமகாதகனுடைய கம்பெனிக்கு வெகு அவசரமாக எடுத்து வந்தான்.

கம்பெனியின் வாயிற்படியிலிருந்த காவலாளி, ஓய்! யாரய்யா நீர்? நில்லும், உள்ளே போகக் கூடாது.

செட்டி.—எஜமானரைப் பார்க்கவேண்டி வந்தேன்.

காவலாளி, இரும் கேட்டு வருகின்றேன், என உள் சென்று திரும்பிவந்து, எஜமானர் யாரையும் பார்க்க முடியாது. வேலையா யிருக்கின்ருர்.

செட்டி.—அப்பா, எஜமானரிடம் நான் ஒன்றும் கேட்க வரவில்லை. அவர் என்னை வரச்சொன்னுர், அதற்காக வந்தேன், போய்ச்சொல்.

காவலாளி.—திரும்பவும் உள்சென்று வந்து, அவர் வரச் சொல்லி இருந்தாலும் சரி, உள்விடக் கூடாது, என கண்டிப்பாய் தெரிவித்து விட்டார்.

செட்டி.—அவர் யாரோ வென்று நினைக்கிறார். நான் தான் வியாபாரி.

ஐயா, நீர் வியாபாரியா யிரும், உத்தியோகஸ்தரா யிரும், கடவுளாய் இரும், உத்திரவுபடியே நடப்பேன். ஏன் வீணாய் தொந்திரவு செய்கிறீர்? போம். ஐயா, போம், வீண் தொந்திரவு செய்யாதீர் என்றான் காவலாளி.

செட்டி.—கோபிக்கப்படாது. ஐயா என்னை லட்ச ரூபாய் கொண்டு வரச் சொன்னார், கொண்டு வந்திருக் கிறேன். அவசரமாய் வேண்டுமென்றார்.

காவலாளி.—அட என்னய்யா, உம்மிடமா எங்கள் எஜ மானர் லட்ச ரூபாய் கேட்டார்? போ ஐயா போ. எஜமான அதிக வேலையா யிருக்கிறார், போய் கேட்கக்கூட பயமா யிருக்கிறது. சரி இரும், கேட்டு வருகிறேன்.

காவலாளி உட்சென்று வெகு அவசரமாக வந்து, வியாபாரியே! எஜமானர் முக்கியமான அவசர வேலையாக இருக்கிறார். 10 லக்ஷம் ரூபாயுடன் கவர்னர் வந்தாலும் விடக்கூடாது என்கிறார். என்மீது அதிகமாகக் கோபித்துக் கொள்கிறார். நீர் போமய்யா, உம்மால் நான் வசைச் சொல் வாங்கவேண்டி யிருக்கிறது. இன்னும் ½ மணிநேரஞ் சென்று யார் வந்தாலும் விடும்படி சொன்னார்.

செட்டி.—உடனே பணம் வேண்டு மென்றாரே?

காவ.—ஐயா, அதிக தொந்திரவு படுத்தினால் கழுத் தைப் பிடித்து வெளியே தள்ளச் சொன்னார். இன்னும் ½ மணி நேரஞ் சென்று வரச் சொன்னார். போ மய்யா பேசாமல்.

செட்டி, மகா வருத்தமும், கோபமும் கொண்டு நாம் பணத்தை நேரே இவர் கையில் கொடுத்துவிட்டுப் போக இங்கு வந்தால் இத்தனை கஷ்டத்தி லிருக்கிறது. நாம் நம் குமாஸ்தாவிடம் இப் பணத்தைக் கொடுத்தனுப்பாமல் நாமே கம்பெனியின் அந்தஸ்தை நேரில் பார்த்துக் கொடுத்து விட்டுப் போக வந்தோம். பணத்தை வைத்துக் கொண்டு கழுதை போல் காத்துக் கொண்டிருக்க வேண்டி யிருக்கிறது. இருக்கட்டும், ½ மணி நேரம் பொறுத்துப் பார்ப்போம், எனப் பேசாமல் அங்கிருந்த ஒரு குத்துக் கல்லின்மேல் வெளியில் வெயிலில் உட்கார்ந்தார்.

சுமார் ½ மணி நேரம் சென்று காவலாளி எஜமானர் அழைப்பதாகச் செட்டியாரை அழைத்துக் கொண்டு மேல் மெத்தைக்குச் சென்றான்.

எம.—வாருங்கள் செட்டியார், செக் மாற்றி வந்தீரா ?

செட்டி.—நான் வந்து அரை மணி நேரமாயிற்று. காவலாளியைப் பல தடவை அனுப்பித்து உத்திரவு கேட்டேன். அவன் இன்னும் ½ மணி நேரஞ் செல்லாமல் விட முடியாதென கண்டிப்பாகச் சொல்லிவிட்டான். ஆதலால் பணத்தோடு கீழே காத்துக்கொண்டிருந்தேன்.

எமகா.—சரி எங்கே பணத்தை எடும்.

செட்டியார் கொண்டுவந்ததை எண்ணி வைத்துவிட்டு ஒரு வாரம் கெடுவுக்குத் தான் வட்டிபோட்டு எழுதியிருக்கிறேன். அதற்கு மேற்படுவதாயிருந்தால் வட்டி அதிகமாகும் என்றார்.

எமகா.—செட்டியாரே! நீர் இன்றைய நாலாவது நாள் வந்து உம் பணத்தைப் பெற்றுப்போம். சரி, போய்வாருங்கள். நான் தபால் பார்க்கவேண்டும், என அதை எண்ணாமல் கூட எடுத்து மேஜைக்குள் வைத்துக்கொண்டான்.

செட்டியார் சரியென உத்திரவு பெற்றுக்கொண்டு வியாபார ஸ்தலமிருக்கும் ஒழுங்கையும், எத்தனையோ குமாஸ்தாக்கள் வேலை செய்வதையும் கண்டு, கம்பெனி புதிதாகயிருந்தாலும், பலத்த கம்பெனி. இதைப்பற்றி நாம் கொஞ்சம் சந்தேகப்பட்டது தவறு. எவ்வளவு பணம் வேண்டுமென்றாலும், நம்பிக் கொடுக்கலாம். இக் கம்பெனிக்கும் நமக்கும் முகப்பரிட்சை இருந்தாலே போதும். நாலாம் நாள் லட்ச ரூபாய் நமக்கு லாபம்கிடைக்கு மென்று அளவிலா ஆனந்தத்துடன் வீட்டுக்குச் சென்றார்.

செட்டியார் சென்ற நாலாம் நாள் ஊரெல்லாம் பெருத்த குபாராவாகி, 'புதியதாக ஏற்படுத்தப்பட்ட லண்டன் எக்ஸ்போர்ட்ஸ் அண்ட் இம்போர்ட்ஸ் கம்பெனி முதலாளி காணவில்லை' என்று பேசிக்கொண்டார்கள்.

வர்த்தமான பேபர்களிலும், புதியதாய் ஏற்படுத்தின கம்பெனியின் சொந்தக்காரரான மணிப்பிள்ளை என்பவர், காணவே இல்லை. காஷியரும் மானேஜரும் தங்கள் வேலைக்காக டிபாசிட் கட்டி இருந்த முறையே இரண்டாயிரம் மூவாராயிரம் ரூபாய்களை இழந்தனர். சமீபமாக யாரோ ஒரு வியாபாரி சுமார் இரண்டு லட்ச ரூபாய் கடன் கொடுத்ததாகவுந் தெரிகிறது. கம்பெனியின் முதலாளி இருக்குமிடம் தெரியவில்லை, என்றிருந்தது.

இதைக் கண்டதும், செட்டியார் அப்படியே ½ மணி நேரம் மூர்ச்சை போய்விட்டார். பின் ஒருவாறு சமாளித்தெழுந்து, ஐயோ! என் பணம் அநியாயமாய் போயிற்றே என்று வாய்விட்டலறினர். என் பேராசை பெரு நஷ்டமாயிற்றே. இவனால் சரியான சதிமோசம் நேர்ந்ததே, என் வயிறு எரிகின்றதே! எவ்வளவு நாள் கஷ்டப்பட்ட பணம். இந்த மோசக்காரன் இப்படி நம்மை ஏமாற்றினன். ஆ, அவன் மோட்டாரில் வந்த டம்பமும், கப்பல் வியாபாரத்

தைப் பற்றியும், ரூபாயையும் அலட்சியமாகப் பேசினனே! வட்டியைப்பற்றி பொருட்படுத்தாமலும், ரூபாய்களை நான் கொடாம லிருக்கையிலேயே கையெழுத்துப் போட்டுப் பத்திரத்தை அலட்சியமாய் என்னிடம் வீசி எறிந்தும் போனனே! நான் அவன் வைத்த ஏவலாளியைப்போல் பணத்தைத் தூக்கிக்கொண்டு அவன் கம்பெனிக்குப் போய், கேவலம் ஒரு காவற்காரனிடம் வசைச்சொல் கேட்டும், 'காரியம் பெரிதேயன்றி வீரியம் பெரிதல்ல' என்று எண்ணி பணத்தை நேரில் நாமே செலுத்தி, கம்பெனியிருக்கும் ஒழுங்கையும் கண்டு நாம் மனமகிழ்ந்திருந்தோமே! அம்மோசக்காரன் எவ்வளவு முன் ஜாக்கிரதையாக வேலை செய்திருக்கிறன். இருக்கட்டும், என்னிடமா அவன் கையிருப்பைக்காட்டுவது? அவன் வானத்திற்குள் மறைந்தாலும் விடுவதில்லை, என்று ஆத்திரத்துடன் கிளம்பி அந்த கம்பெனிக்குப் போய் பார்த்தார். அது நாலு நாளைக்கு முன் இருந்த பொலிவு மாறி, வெறும் மேஜைகளும், நாற்காலியும், ஐந்நூறு ரூபாய் பெறும்படியான வஸ்துக்கள்தாம் இருந்தன.

இதையாவது கைப்பற்றலாமென்று இருந்தார் செட்டியார். அதற்குள் அக் கட்டிடத்தின் சொந்தக்காரன் தனக்குச் சேரவேண்டிய சுமார் ஒன்றரை மாத காலத்து வாடைகைக்காக அதைக் கைப்பற்றிக் கொண்டான். டிபாசிட் தொகை கட்டின நால்வரும், அங்கு வந்து, தாயைப் பரிகொடுத்தவர்போல் தவித்தழுதார்கள்.

செட்டியார் "நம்மிடம் கடன் வாங்கினவன் அவ்வளவு ஏழையில்லை. 'அகத்தினழகு முகத்தில் தெரியும்' என்றபடி அவனெரு தனிகன் குடும்பத்தைச் சார்ந்தவனே. அன்று ஒரு மணி நேரத்தில் லட்ச ரூபாய் லாபம் சம்பாதிக்கவில்லையா? நம்மை மோசம் செய்யு நிமித்தமே இப்படிச் செய்திருக்கிறன்' என எண்ணி, கோர்ட்டில் பிரியாது செய்து,

அவனைப் பிடிவாரன்டில் பிடிக்கும்படி ஏற்பாடுசெய்தார். அவனைப் பிடிப்பதற்கு எவ்வளவு பணம் செலவழிந்தாலும் செலவழிக்கத் தயாராய் இருந்தார்.

சுமார் ஒரு மாத காலமாயிற்று. ஆளினுடைய நாம தேயமே தெரியவில்லை. வாரண்டுடன் போன ஆட்கள் திரும்பி வருகிறார்களே அன்றி, மறைந்து போனவனுடைய செய்தி ஒன்றும் தெரியவே இல்லை.

இப்படியிருக்க ஒருநாள் மாலை, திடீரென, எமகாதகன் செட்டியாரெதிரில் தோன்றினான். செட்டியார் இவனைக்கண்டு மிரண்டு, 'ஐயா தாங்கள் எங்கு சென்றிருந்தீர்? உம்மைப் பிடிக்க வாரன்டு அனுப்பித்திருக்கின்றேன்' என்றார்.

எமகா.—ஏன் என்னைப் பிடிக்க வாரண்டு? என்ன சமாச்சாரம்?

செட்டி.—நீர் உமது வியாபார ஸ்தலத்தை, ரகஸ்யமாக மூடிவிட்டு, உம்மிடம் உத்தியோகத்திற்காக முன் பணம் கட்டினவர்களையும், என்னையும், மோசம் பண்ணிவிட்டு போய்விட்டீர். ஆனதால் நான் உம்மீது வாரண்டு எடுத்திருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே, போலீசுக்குத் தெரிவிக்க தனது ஆள் ஒருவனைக் கூவினார்.

எமகா.—ஏன், போலீசுக்குத் தெரிவிக்கப் போகிறீரா? வேண்டாம். நான் எங்கும் போகவில்லை. ஏன் போலீசாருக்கும் உங்களுக்கும் வீண் தொந்திரவு? உங்களுக்கென்ன? உங்கள் பணம்தானே வேண்டும்?

செட்டி.—ஆம்.

எமகா.—அப்படியானால் நான் வந்திருப்பதை வெளிக்குத் தெரிவியாமலிருங்கள். உங்கள் பணத்தை மாத்திரம் கொடுத்துவிடுகிறேன். தெரிந்தால் இன்னும்

கடன்காரர்கள் தொந்திரவு அதிகமாகும். உமது பணத் திற்குக் கொஞ்சம் தடையாகும்.

செட்டி.—ஒருவிதத்தில் திட நம்பிக்கைகொண்டு, அதற் கென்ன என் பணம் எனக்கு வந்தால் போதும். நான் எங்கும் தெரிவிப்பதில்லை. எங்கே எனது பாக்கியைத் தீரும்.

எமகா.—பணம் உம் வீட்டிற்கு விடியற்காலை ஒன்பது மணிக்கு வந்து சேரும். நான் போய்வருகிறேன்.

செட்டி.—ஓ! உம்மை நம்பமுடியாது. நான் போலீ சாரைக் கூப்பிடுகிறேன்.

எமகா.—நீர் என்னை நம்பாது போலீசாரைக் கூப்பிட் டால் உமக்குப் பணம் முழுதும் வராது. வீண் சிரமந்தான் நேரிடும்.

செட்டி.—காலை 9-மணிக்கு எங்கிருந்து பணம் கொண்டு வருவீர்?

எமகா.—நான் எங்கிருந்தும் கொண்டு வரவேண்டிய தில்லை. தபாலில் உம் வீட்டிற்கே வந்து சேரும்.

செட்டி.—அது வரைக்கும் நீர் வெளி செல்லாமல் இங்கேயே தங்கி இரும். உமக்கு எல்லாம் சவுகரியப் படுத்தி வைக்கின்றேன்.

எமகாதகன் அப்படியே இருக்கிறே னென்று ஒத்துக் கொண்டு, அவ்விடத்திலேயே போஜனமுண்டு துயில் கொண்டான்.

இரவெல்லாம் செட்டியார் தகுந்த ஆட்களைக் கொண்டு தூங்காமல் எமகாதகனிருக்கும் அறையைக் காவல்புரிந்து வந்தார்.

விடிந்தது. காலை சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு எமகாதக னுடன் செட்டியார் தபால்காரனை ஆவலோடு எதிர் பார்த் தார். சுமார் மணி 9-க்கு தபால்காரன் வந்தான். செட்டி

யாருக்கு போன உயிர் மீண்டும் வந்தாற்போல, சந்தோஷ சாகரத்தி லாழ்ந்தார். தபால்காரன் நெருங்கியதும், எமகாதகன் 'என்னபணம் வந்துவிட்டதோ? அல்லது ஏதாவது இன்ஷூரென்ஸ் வந்திருக்கிறதா?' என்றான்.

தபால்.—இல்லை. ஒரு கடிதம் தான் தி டைரக்டர் ஆப் லண்டன் எக்ஸ்போர்ட்ஸ அண்டு இம்போர்ட்ஸ கம்பெனி C/o செட்டியார் பேர்போட்டு வந்திருக்கிறது. (இப்போது செட்டியார் மனம் பாதி சந்தோஷமும், பாதி திகிலுமடைந்ததுமாயிருந்தது.)

எமகாதகன் அக் கடிதத்தைப் பிரித்து செட்டியாருக்கும் தெரியும்படி வாசித்தான். அதிலிருந்ததாவது:—

புதுக்கோட்டை.

கனம் டைரக்டர் அவர்களுக்கு:—

நான் அந்த நாலு லட்ச ரூபாயை, க. பெ. மு. அருணகிரி செட்டியாரிடம் போய்க் கேட்டேன். செட்டியார் ஒரு தரும காரியத்தின் பொருட்டு அவசரமாய் திருவண்ணாமலைக்குச் சென்றிருக்கிறாராம். செக் எழுதி வைத்திருக்கிறது, செட்டியார் அடுத்த புதன் கிழமை வருகிறாராம். வந்ததும் கையெழுத்தை வாங்கி உங்களுக்கு இப்போ தெழுதிய விலாசத்திற்கே அனுப்பி விடுகிறேன். மற்றய பாக்கிதாரான சு. மு. த. பா. கருப்பண்ணஞ் செட்டியார், பணம் பெற்றுக்கொண்டு போக, உங்களையே நேரில் வரச் சொல்லுகிறார். வரவும்.

இப்படிக்கு

உங்கள் வரவை எதிர்பார்க்கும் ஊழியன்

பு. அ. சடகோபாலு பிள்ளை.

கடிதத்தைப் படித்து விட்டு, எமகாதகன் 'செட்டியாரே! இவ்வளவு பணம் நமக்கு வரவேண்டியதிருக்க நீர் உமது பணத்திற்காகப் பயந்தீரே' என்று சொன்னான்.

செட்.—யாருக்குத் தெரியும், நீர் ஏன் உமது கம்பெனியைக் கலைத்தீர்?

எம.—பங்காளிகளுக்குள் சில தகரார் விஷயத்தில் கம்பெனி வியாபாரத்தை நிறுத்தி வைத்திருக்கிறேமே யன்றி, கம்பெனியைக் கலைத்து விட வில்லை. கம்பெனியை வேறு ஊருக்கு மாற்றியுள்ளோம்.

செட்.—எப்படி யாவது போகிறது. பின் பார்ப்போம், நம் பணத்தை முன் கொடுத்து விடும்.

எம.—கடிதம் பார்த்தீரோ யல்லவோ. புதுக்கோட்டை போய் உமது தொகையை அனுப்பி விடுகிறேன்.

செட்டியார் திகிலடைந்து, முடியாது; இம் முடிவை கோர்ட்டு மூலமாய் முடித்துக்கொள்ள வேண்டியது தான். உம் மேல் வாரண்டாய் இருப்பதால் நாளையே நான் கேஸை எடுத்துக் கொள்ளச் சொல்லி ஏற்பாடு செய்கிறேன். உம்மை நம்பி இனி விட முடியாது.

எம.—சரி, அப்படியே செய்யும். நீர் என்னை நம்ப வில்லை. கோர்ட்டிலேயே ஜாமீன் கொடுக்கிறேன், வாரும்.

சரியென, செட்டியும் தானும், மறுநாள் வியாச்சியத்திற்குப் போக ஒப்புக் கொண்டனர்.

எமகாதகன், மறுநாள் கோர்ட்டுக்குப் போகு முன் செட்டியாரைப் பார்த்து, 'ஐயா, கோர்ட்டுக்கு வர என் உடுப்புகள் சரியாயில்லாததால், கொஞ்சம் உடுப்புக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்றான்.

செட்டியார், சரி, எங்கே போகிறது, எல்லாம் கணக்கில் கூட்டிக் கொள்வோம் என, எமகாதகனுடைய இஷ்டம் போல் உடுப்பு எடுத்துக்கொள்ளச் சம்மதித்தார்.

இனுமாக வருவது தானே, சொல்ல வேணுமா? எமகாதகனுடைய ஏற்பாட்டின்படி, உடுப்புகள் ஜவுளி கடையிலிருந்து வந்து விட்டன.

மறுபடியும் எமகாதகன், ஐயா செட்டியாரே, துணி யிருந்து விட்டால் போதுமா? இரண்டு லட்சம் ரூபாய் உங்களிடம் கடன் வாங்கினேன் என்றால் அதற்குத் தக்க மதிப்பு வேண்டாமா? முன்னிருந்த நகைகளை யெல்லாம் ஒரு விஷயத்திற்காக நான் அடகுவைத்திருக்கிறேன். தற்போது மேலே ஆபரணம் ஒன்று மில்லையே, கொஞ்சம் நகை நட்டுகள் ஏற்பாடு செய்யுங்கள். தங்கள் நன்மைக்குத்தான் இவைகளெல்லாம் நான் சொல்லுகிறேன். கேஸ் முடிந்ததும் நகைகளையும் உடுப்புகளையும் பெற்றுக் கொள்ளுங்கள்.

செட்டியாரும் இதுவும் நியாயந்தான். நாம் இரண்டு லட்ச ரூபாய் கடன் கொடுத்தோமென்றால் ஆளும் பார் வைக்கு அதைத்தாங்கக் கூடியவனாகயிருக்க வேண்டாமா. இப்போது கொடுத்தால் அதையும் இரட்டிப்பு கணக்கில் சேர்த்துக்கொள்வோம் என்று எண்ணி நகைகளுக்கு ஆர்டர் செய்தார் செட்டியார். உடுப்பையும் நகைகளையும் அணிந் துக்கொண்டு எமகாதகன் செட்டியாருக்கு முன்னே ஒரு மோட்டாரில் புறப்பட்டுச் சென்று கோர்ட்டி னருகில் இறங்கினான்.

எமகாதகனைப் பார்த்த ஜனங்கள் மிரண்டு விட்டனர். ஒரு சாண் அகலமுள்ள சரிகை வேஷ்டி இடுப்பிலும், உயர்தர ஸில்க் ஷர்ட் உடம்பிலும், அதன் மேல் முதல் தரமான ஸர்ஜ் கோட்டு, காலர், உயர்ந்த பனாரிஸ்பட்டு தலை குட்டை, வெரும் சரிகையாலாக்கப்பட்ட மேலுரு மாலும், இருகையிலும் காப்பு, கொலுசு, சங்கிலி, எட்டு விரல்களிலும் நட்சத்திரத்தின் ஒளியை மயக்குவிக்கும் மோதிரங்களும், இரு காதில் மின்ன லொளியை தோற்கடிக்கும் ஒளியுடைய இரண்டு வைரக்கற் கடுக்கனையும் அணிந்திருந்த எமகாதகனைக் கண்ட ஜனங்கள் இவரா இச்செட்டியாரிடம் கடன் வாங்கி இருப்பார், நம்புவதற்கு

இடமில்லை. பார்ப்போம் இவ்வியாச்சியம் எப்படி முடிகிறதோ, என்று ஜனங்கள் பேசிக்கொண்டு ஆவலுடன் கோர்ட்டில் குழுமி இருந்தார்கள்.

கோர்ட்டு கூடினதும் கோர்ட்டார் எமகாதகனைக் கூண்டிலேற்ற வைத்து, நீர்தானே சில நாட்களுக்கு முன், கடற்கரை யோரம் வியாபாரம் செய்து லட்ச ரூபாய் ஆஸ்திக் கதிபதியானது?

எம.—ஆமாம், அதைப்போல் வியாபாரம் பலவிடத்தில் பலதடவை செய்திருக்கிறேன்.

கோர்.—நீர் தான் லண்டன் எக்ஸ்போர்ட்ஸ் அண்ட் இம்போர்ட்ஸ் கம்பெனி லிமிடெட் என்று வைத்திருந்தவரோ?

எம.—ஆம்.

கோர்.—இந்த செட்டியாரை உமக்குத் தெரியுமா?

எம.—தெரியும். ஓர் நாள் என் கூட சற்று தூரம் பேசி வந்தார்.

கோ.—இவரிடம் நீர் லட்ச ரூபாய் கடனுகப் பெற்றீரா?

எம.—(தைர்யமாய்) ஆ இல்லை. இவரிடம் நான் கடன் வாங்க வேண்டிய அவ்வளவு கேவலமான ஸ்திதிக்கு நான் இன்னும் வரவில்லை.

கோ.—அதன் அர்த்தம் என்ன ?

எம.—நான் கடன் இவரிடம் வாங்கினதே இல்லை.

இதற்குள் செட்டியார் பெரிய திகில் கொண்டு, அட சண்டாளா! என்ன இவன் இப்படிச் சொல்லுகிருனே! இது வரைக்கும் என்ன நயமாய் உண்மையைப் பேசி வந்தான். சரி, சரி, இவன் பெரிய கேப்மாரிப் பயல். பார்ப்போம். இவனிடம் இப்பணத்தை வாங்காமல் விடுகிறதா ? என்று தான் வைத்திருந்த வக்கீலிடம் சில தகவல்கள் சொல்லி அவரைப் பேசும்படி சொன்னுர்.

வக்கீல்.—இதோ இவர் எழுதிக் கொடுத்த பத்திரம் இருக்கிறது.

கோர்.—பத்திரத்தைப் பார்த்து, இது உம்கையெழுத்து தானு?

எம.—இல்லை. என் கையெழுத்தில்லை. இது சுத்தப் பொய். வேணு மென்றால் என் கையெழுத்துக்களை ஆபீஸ் ரிக்கார்டு களிலிருந்து பார்த்துக் கொள்ளலாம்.

கோர்ட்டார் ஆபீஸ் ரிக்கார்டுகள் சிலவற்றை வரவழைத்துப் பார்த்தார்கள். அதற்கு, சிறிதும் இக் கையெழுத்து சம்பந்தப் படவில்லை.

கோர்.—செட்டியாரே! இதற்கென்ன பதில் சொல்லுகிறீர். கையெழுத்து அவருடையதில்லையாம். பணம் வாங்கினதில்லையாம், இதற்கு சாக்ஷி இருக்கிறதா? பத்திரத்தில் என் சாக்ஷிகள் கையெழுத்திடவில்லை?

செட்டி.—சாக்ஷி எனது குமஸ்தாதா னிருக்கிறார். பெரிய கம்பெனிக்காரர் என்று நம்பி சாக்ஷிகள் கையெழுத்து வாங்காமல் கொடுத்தேன். ஒரு வாரத்தில் திருப்பிக் கொடுத்துவிடுவதாகச் சொன்னதால் கொடுத்தேன்.

கோர்.—உமது குமஸ்தா சாக்ஷி செல்லாது. அதுவும் வாய் சாக்ஷிதான். வட்டி என்ன போட்டீர்?

செட்டி.—(சொல்ல வெட்கமடைந்து) இவர் மிக அவசரமாய்க் கேட்டதால் ஒரு தம்பிடிக்கு தம்பிடி வட்டி போட்டுக் கொண்டு கொடுத்தேன்.

கோர்.—அதாவது லக்ஷத்திற்கு லக்ஷ ரூபாய் வட்டியா?

செட்டி.—ஆம்.

நீதிச்சபை குலுக்கென்று சிரித்தது. அனியாயம்! அனியாயம்!! என்று மற்றொரு புறம் கூச்சல் கிளம்பியது.

கோர்.—இவர் எப்படி உன்னிடம் லக்ஷ ரூபாய் பெற்ருர்? எதன் நிமித்தம்? அதை விபரமாகச் சொல்லும்.

செட்டி.—இவர் கடற்கரையில் வியாபாரம் செய்ததை யான் கண்டேன். இவரை ஒரு தனிகரென்று மதித்திருந் தேன். பின்னொருநாள் இவர் என் வீட்டிற்கு வந்தார். கப்பல் வியாபாரத்திற்கு சுங்கவரி கட்ட லக்ஷ ரூபாய் முடையாய் யிருக்கிறது என்று சொன்னூர். நான் தருகிறே னென் றேன்.

கோர்.—அவரா உம்மைக் கேட்டாரா, நீரா தர ஒப்புக்கொண்டீரா?

செட்டி.—அவர் நம் வீட்டிற்கு வந்து பணமில்லை என் ருல் நம்மைக் கேட்ட மாதிரி தானே என்று நினைத்து, நான் தருகிறேனென்றேன். பணத்தைக்கொண்டு வரச் சொல்லி வீட்டுக்குப்போக ஆரம்பித்தார். நான் சற்று நிற்க வைத்து, பத்திரம் எழுதிக்கொடுத்து கையெழுத்து வாங்கி னேன். பிறகு லக்ஷ ரூபாய்க்கு ஒரு செக் கொடுத்தேன்.

கோர்.—எவ்வளவுக்கு பத்திரம் வாங்கி எழுதினீர்?

செட்டி.—இரண்டு லட்சத்திற்கு.

கோர்.—இரண்டு லட்சத்திற்கு பத்திரம் எழுதிக் கொண்டு ஒரு லட்சத்திற்கு செக் கொடுத்தீர்.

செட்டி.—ஆம்.

கோர்.—பிறகு.

செட்டி.—நான் கொடுத்த செக்கை (மொத்தத் தொகைக்கு ஒரு ரசீது) வாங்காமலே அதை மாற்றி எடுத் துக்கொண்டு வரும்படி சொல்லி பத்திரத்தையும் என்னி டமே போட்டுச் சென்ருர். நான் அந்தச்செக்கை பாங்கில் மாற்றி இவரது வியாபார ஸ்தலத்திற்கு கொண்டுபோய் கொடுத்துவிட்டு வந்தேன். மறு வாரம் பார்த்தால் ஆபீஸ் காலியாய் இருக்கிறது. அங்கு உத்தியோகத்திற்காக சுமார்

பதினுயிரம் ரூபாய்க்கு மேல் முன் பணம் கட்டினவர்களும் தங்கள் தொகை இழந்ததற்கு மிக வருத்தப்பட்டுத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நான் இந்த மனிதனைப் பிடிவாரண்டில் பிடிக்க ஏற்பாடு செய்து மாதம் ஒன்றுக்கு மேலாகியும் அகப்படாமல், நேற்று மாலை என் வீட்டிற்கு வந்து, பணத்திற்கு என்னென்னமோ சால்ஜாப் சொன்னார். இவர் செய்துவந்த தெல்லாம் மோச காரிய மென்றும், கட்டந் துணிக்கு விதியற்றவ ரென்றும் எனக்குத் தெரிந்ததால், இவர் இன்னும் செய்யப்போகும் தந்திர மோசத்திற்குட்படாமல், நான் இப்போது ஆளை கையோடு கொண்டு வந்தேன். நான் எவ்வளவு கஷ்டப்பட்டு சம்பாதித்த பொருள்! ஆயிரமா? இரண்டாயிரமா? இரண்டு லட்ச ரூபாயாச்சே, கோர்ட்டார் இதை நன்றாய் விசாரித்து என் தொகையை வாங்கித் தரவேண்டும்.

கோர்.—எமகாதகனைப் பார்த்து, நீர் என்ன இதற்குப் பதில் சொல்லுகிறீர்? வாங்கினது உண்மை தானே?

எமகா.—கோர்ட்டார் அவர்களே! இச் செட்டியார் சொல்லி வந்ததிலிருந்து எது உண்மை எது பொய் யென்று தங்களுக்கே தெரியும். இருந்தாலும் விபரமாக நானும் சொல்லி வருகின்றேன். இச் செட்டியார் நான் அரிசி வியாபாரம் செய்யும்போது கடற்கரையில் என்னைக் கண்டு, என்னைக் கடனுக்கு பணம் வேண்டுமா என்று, வலிய இவரே கேட்டார். நான் எனக்கு வேண்டியதில்லை என்று போய்விட்டேன். பிறகு இவர் யேன் நம்மை இவ்வளவு அக்கரையாய் விசாரிக்க வேண்டுமென் றெண்ணி இவரை நான் விசாரித்துப் பார்த்ததில் இவர் வட்டிக் காசைபட்டவ ரென கேள்விப்பட்டதினால், இவரைக் கண்டாலும் வெறுப்புற்று போய்விடுவேன். நிற்க:

இவரிடம் நான் பணம் பெற்றேன் என்றுரே நான் பணம் வேண்டுமென்று இவர் வீட்டிற்குப் போனால் பணம் கேட்காமலிருப்பேனா? அப்படித்தான் வாங்கினாலும் பத்திரம் இவர்களே எழுதிக் கொண்டுவந்து கொடுத்தால் நான் அதில் கையெழுத்துப்போடுவதா? அப்படிப் போட்டாலும், அதற்கு யாரும் சாக்ஷி கிடையாதா? ஒரு வாரத்தில் லட்ச ரூபாய் வட்டிபோட்டு எந்த மூடனாவது எழுதிக்கொடுப்பானா? அப்படி எழுதிக்கொடுத்தும், செக்கையும், பத்திரத்தையும் இவரிடமே போட்டுவிட்டுப் போய்விடுவானா? கடன் கொடுப்பவர் எங்காவது, வீடு தேடிக்கொண்டுபோய் கொடுப்பாரா? முன் யோக்கியமானவனாயிருந்தேன், இப்போது கட்டத் துணிக்கும் வதியற்றவனென்று சொன்னாரே அது இக் கோர்ட்டாருக்கே தெரியும். இந்தக் கைமோதிரமே இவர் இரண்டு லட்சம் ரூபாய்க்கு மேல் தாளும். உண்மையாக நான் கடன் வாங்கி இருந்தால் இவ்வளவு நேரம், இம் மனிதன் செய்யும் அவமானத்திற் காளாகாமல் உடனே இதை விற்றுக்கொடுத்து விடமாட்டேனா? கோர்ட்டார் இதைச் சற்று கவனிக்க வேண்டும்.

செட்டி.—(ஆத்திரத்துடன்) ஆ, அது என்னுடைய மோதிரங்கள் ஆயிற்றே! நான் உனக்குக் கொடுத்தேனே அம் மோதிரங்கள் போட்டுவரச் சொல்லி, உனக்கேது ஒரு மோதிரம் கூட?

எமகா.—என்ன சொல்லுகிறீர்? மோதிரங்கள் உம்முடையதா! சரி, சரி, உம் துணிவு என்ன துணிவு ஐயா, செட்டியாரே! என் இந்தக் கடுக்கன்கள், காப்பு சங்கிலியும் உமதென்று சொல்லக் கூடாதா? அப்படியும் சொல்வீர் ஏ.

செட்டி.—(வியப்புடன்) நீ சொல்வதுபோல் கடுக்கன், மோதிரம், காப்பு, கொலுசு எல்லாம் என்னுடையது தான். என்ன நீ முழுப் பூசனிக்காயை சோற்றோடு மறைக்கப் பார்க்கிறாய்? நான் தானே உனக்குப் போட்டுக்கொள்ள சொல்லிக் கொடுத்தேன்.

எமகா.—செட்டியாரே, நீர் மஹா கெட்டிக்காரர். ஏன், என்மீது போட்டுக்கொண்டிருக்கும் துணிகளெல்லாம் உம்முடையது என்று கூடச் சொல்லுவீர். தடையில்லாமல் சொல்லுவீர், நீர் அவ்வளவு சாமர்த்தியர்.

செட்டி.—(திகிலுடன்) அடா பாவி! அதற்குக் கூட சந்தேகமா? நான் தானே என் ஜவுளிக்கடையில் எடுத்துக் கொடுத்தேன். ஐயோ! என்னை அடியோடு ஏமாத்தப் பார்க்கிறாயே, நீ நன்றாயிருப்பாயா?

எமகா.—ஏனய்யா, நன்றாயிருக்கிறது நியாயம். நகை கொடுத்தீர், துணிகள் கொடுத்தீர், இன்னும் எனக்குப் போஜனம் கூட போட்டதாக சாதிப்பீர்.

செட்டி.—உண்மையே! உனக்கு நேற்றையிலிருந்து போஜனம்கூட போட்டேனே! உண்ட வீட்டிற்கே இரண்டகம் செய்கிறாயே, பாவி, கடவுள் இதை சம்மதிப்பாரா?

எமகா.—ஐயா! நன்றாயிருக்கின்றது நியாயம்!! நகை கொடுத்தேன், துணி கொடுத்தேன், சோறுபோட்டேன், என்று கொஞ்சம்கூட அஞ்சாமல், என்ன நெஞ்சுறப்பாய் சொல்லுகிறீர். இவைகளெல்லாம் செய்தேனென்று நீர் சத்தியம் கூடச் செய்வீர். ஐயா, நீர் மஹா சாமர்த்திய புருஷர். உம்மைப்போல் இவ்வுலகில் கண்டதே இல்லை.

செட்டி.—உண்மையாக, சத்தியமாக, கடவுளறிய, நான் தானே உனக்கு நகையும், துணியும், போஜனமும் அளித்து, உன்னை வண்டிவைத்து அழைத்து வந்தேன். இப்படி அனி

யாயமாய் பொய் சொல்லுகிருயே! நீ நன்ருயிருப்பாயா? என் வயிறு எரிகிறதே.

எமகா.—கோர்ட்டாரவர்களே! கட்டத் துணியற்ற எனக்கு, சாப்பாட்டிற்கு விதியற்ற ஒருவனுக்கு, இவர் எப்படி நம்பி இரண்டு லட்ச ரூபாய் ஒரு அரைமணி நேரத்தில் கடன் கொடுப்பார்? தங்க நகையை வைத்துக்கொண்டு கேட்டாலும், நிலம் வீடுகளை வைத்துக்கொண்டு பணத்திற்கு வருஷம் ஒன்று நடந்தாலும், ஒரு ஆயிரம் ரூபா அகப்படுவது கஷ்டமாயிருக்கு மிக்காலத்தில், இவரோ எனக்கு லட்ச ரூபாய் கடன் கொடுத்தாராம். நான் ஓடிவிட்டேனும். இவர் லட்ச ரூபாய் கடன் கொடுத்து, அக்கடனை திருப்பித் தாராமல் ஓடி ஒளித்திருந்த எனக்கு மேலும் சுமார் லட்ச ரூபாய் பெறும்படியான நகை போட்டுக்கொள்ள கொடுத்தாராம். முதல் கொடுத்ததையே திருப்பித் தாராமலிருக்கும்போது, மீண்டும் யெவராவது நகைகள், துணி முதலியன உதவிசெய்து, சாப்பாடும் போட்டனுப்புவார்களா? இதெல்லாம் ஒருக்காலும் நடந்தவையே இல்லை. இக்கேஸ் வேணு மென்றே என் பேரில் தொடரப்பட்டிருக்கிறது. இக்கேஸ் எனது பெருந்தன்மைக்கு மானக்கேடாயிருக்கிறது. ஆகையால், வாதியிடம் கோர்ட்டார் எனக்கு மானநஷ்டம் வாங்கித் தரவேண்டும்.

கோர்.—நீர் ஏன், உமது கம்பெனியைக் 'கலைத்தீர்? மற்றபடி, முன் பணம் கட்டினோர் பணத்தையும், கொடுக்கவில்லை? உம்மை இத்தனை நாள் ஏன் காணவில்லை?

எமகா.—என்னுடைய பல தொந்திரவால், சிறிது நாளைக்கு கம்பெனியை நிறுத்தி வைத்திருக்கிறேன். மறுபடியும் கூடிய சீக்கிரம் ஆரம்பிப்பேன். டிபாசிட் கட்டினோர்க்கு அவர்கள் தொகையை வட்டியுடன் அன்றே கொடுத்துவிட்டேன். நான் இவ்வூருக்கும், வெளியூருக்கும்,

அடிக்கடி போய் வருகிறேனுதலால் சில வேளை நான் காணப் படாமலிருக்கலாம்.

கோர்ட்டார்.—நீர் முன் பணம் கட்டினோர்க்குப் பணத்தை திருப்பி விட்டீரென்பது எப்படி உண்மை?

எம.—இதோ இருக்கிறார்கள். அவர்களை நீங்களே விசாரித்துக் கொள்ளுங்கள்.

கோர்ட்டார் அங்கு தயாராய் வந்திருந்த அந்நால்வரையும் விசாரிக்க, 'எங்களுக்கு, கம்பெனி கலைப்பதற்கு முன்னமே, டிபாஸிட் பணத்தைக் கொடுத்தாயிற்று. மறுபடி கம்பெனி ஆரம்பிக்கும் போது, எங்களையே அவ்வுத்தியோகத்திற்கு வைத்துக் கொள்வதாய் உறுதிமொழி கூறி இருக்கிறார்' எனக் கூறி தாங்கள் பணம் பெற்றுக் கொண்டதற்கு அத்தாக்ஷி பத்திரங்களையும் காண்பித்தார்கள்.

கோ.—ஆமாம், உங்கள் எஜமானன் ஸ்தானத்திலிருந்தவர் இச் செட்டியாரிடம் லக்ஷ ரூபாய் கடன் வாங்கின விஷயம் உங்களுக் கேதாவது தெரியுமா? கம்பெனி இருக்கும் பொழுது இவர் பணத்திற்கு அதிக முடைப்பட்டு, கஷ்ட நிலைமையை அடைந்ததுண்டா?

அவர்கள்.—இல்லை. ஒரு போதும் இவர் கடன் வாங்கியதே இல்லை. இச்செட்டியார் நாங்களிருந்த வியாபார ஸ்தலத்திற்கு வந்ததே இல்லை. தினம் 10 லட்சத்திற்கு மேல் எங்கள் கையில் பணம் புரண்டு வந்ததால், இச்செட்டியாரிடம் எங்கள் எஜமானர் ஒரு லட்சம் கடன் வாங்க வேண்டிய பிரமேயமே இல்லை.

கோர்ட்டார், இவைகளை ஆலோசித்து, இதில் வாதியின் பக்கம் ஒன்று கூட உண்மை விளங்கவில்லை. மேலும் பிரதிவாதிக்கு எவ்விதத்திலும் பணம் வாங்க வேண்டிய அவசியமுமில்லை. கையெழுத்து சரியாக இல்லை, சாக்ஷியு மில்லை. செட்டியார் சொன்னவைகள் அபவாதமாக அக்கனவான்

பேரில் தொடுத்த கேஸ் என்றெண்ணி, தீர்ப்பு எழுதி, அதில் அச்செட்டியார் இக்கனவான் பேரில் தொடுத்த வியாஜ்ஜியம் இவருக்கு மான நஷ்டத்தை உண்டாக்குவித்த தால், இரண்டு லட்ச ரூபாய் மான நஷ்ட ஈடு செய்ய வேண்டுமென கோர்ட்டார் தீர்மானித்தார்.

செட்டி.—இல்லை இல்லை, இக்கேஸைத் தீர விசாரிக்க வேண்டும். தீர்ப்பை ஒத்தி வைத்தால் நலம்.

கோர்.—ஓய் செட்டியார்! வேறு நாள் ஒத்தி வைக்க சரிப்படாது. இதுவே தீர்மானம். நாளையே இரண்டு லட்ச ரூபாய் அவருக்குக் கட்டி விடும். இல்லாவிடில் நாள் சென் ருல் தொகை அதிகமாகும்.

செட்டியார் வாய் திறவாமல், வீடு வந்து, அட ஆண் டவனே! உனக்கு கண்ணில்லையா! நான் என் வயிற்றுக்கு கூட சரியாக சாப்பிட்டதில்லையே! ஒரு தம்பிடி கூட வட்டியில் தள்ளி வாங்கி இருக்க மாட்டேனே! எத்தனை பேரைக் கதறக் கதற பரதேசி ஆக்கி இருப்பேன்! இப் பணத்தை இப்படுபாவிக்கு கொட்டிக் கொடுப்பதை விட உயிரையே விட்டு விடலாமா? ஐயோ! என் கும்பி குமறு கிறதே! இதைக் கேட்ட ஜனங்களுக்கு எப்படியிருக்கும்? இத்தனை நாள் விடாக் கண்டனென்று பேரெடுத்த எனக்கு இக்கொடாக் கண்டன் எங்கிருந்து வந்து சேர்ந்தான், லட்ச ரூபாய் கொடுத்தது மில்லாமல் அதற்கு வட்டியாக, லட்ச ரூபாய்க்கு மேல் பெறும் நகைகளும், உடைகளும் வாங் கிக் கொடுத்த தில்லாமல் கூட இரண்டு லட்ச ரூபாயும் இப்போது கொடுக்க வேண்டியதாமே! ஐயோ ஒரு தம்பிடி ஒருவருக்குக் கொடுப்ப தென்ருல், அன்றே என்னுவி அானுலகடையுமே! இது ஒன்ரு? இரண்டா? நூரு? ஆயிரமா? லட்சக் கணக்காக வல்லவோ, எனக்கு நஷ்ட முண்டாகிறது, என எண்ணி எண்ணி ஏக்கமுற்று

வேறு வழி இல்லாமல், எங் கெங்கேயோ, கஷ்டப்பட்டு இரண்டு லட்ச ரூபாய், நம் எமகாதகப் பிரபுவிற்கு கோர்ட்டு மூலமாய் கட்டி ஒழித்தார் செட்டியார்.

மறுநாள் செட்டியாருக்கு ஒரு கடிதம் கிடைத்தது. அதில் பெரிய எழுத்தில் உம்மை இப்படிச் செய்தவன் எமகாதகன் என இருந்தது. செட்டியார் பேயலறைந்தவர் போலானார். பேபர்களி லெல்லாம் விடாக்கண்ட செட்டியாரிடம் சுமார் நாலு லட்ச ரூபாய்க்கு மேல் வாங்கி விட்டவர் எமகாதகன் என்பவராம் எனப் பதிப்பித்திருந்தது. நாடெங்கும் எமகாதகன் என்ற பெயர் காட்டுத்தீபோல் பரவி விட்டது.

எமகாதகப் பிரபு நாகப்பட்டணம் வந்து வியாபாரத்தில் லட்ச ரூபாயும், செட்டியார் வசம் மூன்று லட்ச ரூபாயும், நகைகளாய் அடைந்தவற்றையும், கைக் கொண்டு, செல வழிந்தது போக மீதியுடன் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு விட்டார்.

---

## அத்தியாயம்—9

### வியாபாரக் கூத்து

சிலநாள் சென்று நம் எமகாதகப் பிரபு சமரபுரி என்ற ஒரு சிறு ஊரில் ஒரு ஹோட்டலில் தங்கியிருந்தார். அவ்வூரில் ஒரு பட்டிக் காட்டான், அத்யந்த சிநேகிதனானான். அவனே இவருக்கு ஏவலாளி போன்று மிருந்தான்.

ஒரு நாள் காலை, தன் சிநேகிதனான சண்முகம் என்பவனைப் பார்த்து, சண்முகம், இன்று எனக்கு கடிதமாவது, தந்தியாவது, எனது மனைவியிட மிருந்துவரும். தபால்காரன் எத்தனை மணிக்கு வருவான்? என்று கேட்டார் நம் எமகாதகன்.

இவ்வூரில் எமகாதகன் தன் பெயரைக் கணபதி முதலியார் என மாற்றி வைத்துக் கொண்டிருக்கிறார். யாமும் அங்ஙனமே அழைப்போம்.

சண்முகம்.—சுமார் 10 மணிக்கு வருவான். என்ன விசேஷமோ?

கண-மு.—என் மனைவியை இங்கு வரச் சொல்லி கடிதம் போட்டேன். வருவதற்கு முன் தந்தியாவது கடிதமாவது அனுப்பச் சொன்னேன். அது அனேகமாய் இன்று வருமென்று நினைக்கிறேன்.

என்று பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, தந்திக்காரனொருவன் வந்து, தந்தி ஒன்றை கணபதி முதலியாரிடம் கொடுத்து கையெழுத்து வாங்கிச் சென்றான்.

கணபதி முதலியார் தந்தியை வாசித்து விட்டு, சண்முகம், 'இன்று மாலை எக்ஸ்பிரஸில், என் மனைவி வருகின்றாளாம். ரயில்வே ஸ்டேஷனில் வந்திருக்கும்படி எழுதி இருக்கிறாள்' என்றார்.

சண்.—யார் அப்படி வருவதாகவும், உங்களை வந்திருக்க வேண்டுமெனவும் சொல்லுகிறது?

கணபதி—என் மனைவி.

சண்.—எப்படி. தெரிவித்தார்கள்?

கண.—இதோ இத்தந்தி மூலமாய்.

சண்.—அதைப் படித்து விட்டு எனக்கொன்றும் புரியவில்லையே இதில். என்னமோ அச்சடித்த கடிதாசியில், நீலக் கோடுகள் கோணலும் மாணலுமாய் கிறுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன.

கண.—புன்சிரிப்புடன், இது தந்தி பாரம். நாம் இதைப்போல் தபாலாபீஸில் தரும் வேறொரு பாரத்தில், நாம் என்ன விஷயம் எழுத வேண்டுமோ அதை எழுதி, விலாசத்தோடு தந்தி ஆபீஸில் கொடுத்து, அதற்கு அவர்கள்

கேட்கிற பணத்திற்கு தபால்ஸ்டாம்பு வாங்கி ஒட்டி, அவர்களிடம் கொடுத்தால் அதில் நாமெழுதி இருக்கின்றபடி அவ்வூருக்கு மின்சார சக்தி மூலமாய் தெரிவித்து விடுவார்கள்.

சண்.-ஐயா, நானும் முட்டாளல்ல, படித்திருக்கிறேன். தமிழில் எடுத்த புஸ்தகம் படிப்பேன். இருந்தாலும் இந்தக் கோண எழுத்தை எனக்குப் படிக்கத் தெரியவில்லையே.!

கண.--சண்முகம்! இதைத் தெரியாதவர்கள் கோண எழுத் தென்றே கூறுவார்கள். இதுதான் ஆங்கில எழுத்து.

சண்.—ஆங்கில எழுத்தென்றால்?

கண.—இங்கிலீஷ் எழுத்துக்கள். இது இங்கிலீஷில் எழுதப்பட் டிருக்கிறது.

சண்முகம் ஆச்சரியத்துடன், ஆ, இது இங்கிலீஷ் எழுத்துக்களா! எனக்கு இதைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நெடுநாளாக ஆவல் இருக்கிறது. ஏனென்றால், இவ்வூருக்கு நான் நாட்டாண்மை வீட்டுக்காரன் மகன். ஒருநாள் கலெக்டர் இங்கு என் வீட்டிற்கு விஜயம் செய்தார். நான் நாட்டாண்மைக்காரன் புத்திர ஞதலால், துரை அவர்கள் அருகில் நின்றிருந்தேன். துரை என்னென்னமோ என்னிடம் இங்கிலீஷில் பேசினர். நான் பதில் சொல்ல முடியாமலும், அதைத் தெரிந்துக் கொள்ளாமலும் விழித்தேன். உடனே அவர், என் தோளைத் தட்டி, தமிழில், 'வெட்கம், வெட்கம்,' என்று சொல்லி சிரித்தார். அங்கு கூட இருந்த ஜனங்களெல்லாம் கொல்லென்று சிரித்தார்கள். உடனே, எனக்கு அவமானத்தால் ஆத்திரம் வந்து, கலெக்டரிடம், தாங்களிங்கு அடுத்த தடவை வருவதற்குள் இங்கிலீஷைக் கற்றுக் கொண்டு, உங்களுடன் பேசுகின்றேன் பாருங்கள் என்றேன். அவரும் சரி பார்ப்போம், அப்பொழுது தான் நீ நாட்டாண்மைக்காரன் மகனென்று சொன்னர். நான் அவரிடம் சொன்ன வாக்குறுதிபடி,

இங்கிலீஷ் கற்றுக்கொள்ள, சென்ற நான்கு மாதமாய் பாடுபட்டு, எத்தனையோ உபாத்தியாயரிடம் போய் கஷ்டப்பட்டுப் பார்த்தேன். ஒன்றும் பிரயோஜனமில்லை. இன்னும் ஒரு எழுத்துகூட வந்தபாடில்லை. நீங்கள் அதிகம் படித்தவரென எனக்குத் தோன்றுகின்றமையால், கொஞ்சம் எனக்கு தயவுசெய்து இங்கிலீஷ் சொல்லித் தரவேண்டும். ஆயிரம் ரூபாய் வேண்டுமானாலும் தருகிறேன். கொஞ்சம் வரையிலாவது எனக்குச் சொல்லித் தரவேணும்.

கணபதி-மு.—அப்பா! நீ இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தாலும் என்னால் சொல்லித்தர முடியாது. நானும் ஒருவிதமாய் இங்கிலீஷ் தெரிந்துக் கொண்டேன். வேணுமென்றால், நீயும் அதன்படி செய்தால், இரண்டே மாதத்தில், நீ இங்கிலீஷ் பேசவும், எழுதவும், படிக்கவும், பிழையறக் கற்றுக் கொள்வாய்.

சண்மு.—உண்மையாகவா! அது எப்படி? எந்த வழி? தயவுசெய்து சொல்லுங்கள்.

கணபதி-மு.— சண்முகம், சென்னையில், "ஆங்கில ஆசான் அல்லது ஆங்கில போதினி" என்ற ஒரு புத்தகம் நூதனமாக வெளியிடப்பட் டிருக்கிறது. நான் அதைப் படித்தே ஆங்கில பாஷையை அறிந்துக் கொண்டேன். நீயும் அதைத் தருவித்து வாசித்தால் இரண்டு மாதத்தில் என்னைப்போலாவாய்.

சண்.—என்ன! நான் எவ்வளவோ நாளாய் முயன்று வந்தும் ஒரு எழுத்துகூட வந்தபாடில்லை. இரண்டே மாதத்தில், ஒரு புத்தக மூலமாய், இங்கிலீஷ் பாஷையை அறிந்துக் கொள்ள முடியுமா?

கண.—நான் ஒரே மாதத்தில் தெரிந்துக் கொண்டேன். உனக்கு, மேலேயே ஒருமாதம் வைத்தேன்.

சண்.—அப் புத்தகத்தின் பெயரின் விபரமும், அதில்

அடங்கி இருக்கும் விஷயங்களின் விபரத்தையும் சற்றுத் தெளிவாய்க் கூறுங்கள்.

கண-முதலி.—அப் புத்தகத்தின் பெயர், "ஆங்கில ஆசான்" அல்லது "ஆங்கில போதினி," என்ற சுத்தத் தமிழ் இலக்கண இரண்டு பதத்தால், பெயரிடப்பட்டுளது. இங்கிலீஷ் உபாத்தியாயன் என்று சாதாரணப் பொருள் படும். அதில், ஆங்கில எழுத்துக்களும், ஆங்கிலப் பதங்களும், அதை உச்சரிக்கும் விதம் தமிழ் பதத்தாலேயே எழுதப்பட்டும், ஆங்கில சிறிய பதத்திலிருந்து பெரிய பதம் வரைக்கும், உச்சரிக்கும் விதமும், அர்த்தமும், விளக்கி இருப்பதுடன், பழமொழிகள், கடிதம் எழுதும் முறைகள், விண்ணப்ப மெழுதும் முறைகள், பத்திர மெழுதுதல், லீவு எழுதுதல், கோர்ட்டு விவகாரம், மணியார்டர், தந்தி பாரங்கள் எழுதுதல் முதலிய விபரங்கள், வட்டிக் கணக்குகள், மாத சம்பளக் கணக்குகள், எண்ணலளவை, முகத்தலளவை, நில அளவை, கால அளவை முதலிய ஸகல கணக்குகளும் தமிழிலும், இங்கிலீஷிலும் எழுதப்பட்டு, சுத்தமான கடிதத்தில் அச்சிட்டு மிகக் குறைந்த விலையான ரூபா இரண்டிற்கு பொது ஜன உபகாரமாய், விற்று வருகிறார்கள். அதை நீ வரவழைத்துப் படித்தால் அறுபது நாளில், நீ இங்கிலீஷ் பேசுவதில் வல்லவனெனப் பெயரெடுப்பாய்.

சண்.—அப்படியானல் நான் சென்னைக்குப் போக வேண்டுமோ ?

கண-மு.—வேண்டாம். இன்றே ஒரு கடிதம் எழுதிப் போட்டால், நாளை கழித்த மறுநாள் தபாலில் வந்து சேரும்.

சண்.—ஆமாம், அதை எப்படி வரவழைப்பது? விலாசம் சொல்லவில்லையே. சீக்கிரஞ் சொல்லுங்கள். நீங்கள் சொன்ன புஸ்தகம் மஹா அருமையா யிருக்குமென நினைக்கிறேன்.

ஆமாம். அப் புத்தகத்திற்கு இரண்டு ரூபாயல்ல, இரண்டாயிரம் ரூபா கொடுத்தாலும் தகும். புஸ்தகத்தின் பெருமை சொல்லவும் வேண்டுமோ. அப் புஸ்தகம் வெளி வந்த பிறகே, எல்லோரும் படித்து, இங்கிலீஷ் பாஷையைப் பேசுவது அதிகமாயிற்று. புத்தகம், இப்பொழுது தான் அச்சிடப் பட்டாலும், நான்கு பதிப்பிற்கு மேல் செலவாகி விட்டது. நாமும் மதிப்புறுவோம், லாபமடைவோம் எனச் சில புத்தகம் இதை தழுவியே பெயர் வைத்துக் கொண்டு புறப்படுகின்றன. எத்தனை புத்தகம் புறப்பட்டாலும், இதற் கிணையாக, நாம் இங்கிலீஷில் விர்த்தியாகும் வண்ணமிருக் காது. ஆகையால், நீ உடனே "ஆங்கில ஆசான்" அல்லது "ஆங்கில போதினி"யை வரவழைத்துப் படித்தால் விர்த்தி யாகுவாய்.

சண்.—விலாசம் தெரிவிக்க வில்லையே.

கண-மு.—இதோ எழுதி வைத்திருக்கிறேனென்று தன் சட்டைப் பையிலிருந்த டயரியை எடுத்து அதில் குறித்து வைத்திருந்த அட்ரஸை எழுதி, இதோ இந்த விலாசம்

தி. இராஜகோபால் முதலியார்.
259, தங்கசாலை தெரு, மின்ட் போஸ்ட்,
மதராஸ்.

இவ் விலாசத்திற்கு எழுதித் தருவித்துக் கொள்.

உடனே வெகு ஆவலுடன் *ஆங்கில ஆசான் என்னும் புத்தகத்திற்கு தபால் எழுதிப்போட போய் விட்டான் சண் முகம்.

---

* கணபதி முதலியார் கூறினபடி இங்கிலீஷ் தெரிந்துக் கொள்ள விரும்புவோர், மேற்படி, இராஜகோபால் முதலியாருக்கு எழுதி "ஆங்கில ஆசான்" என்ற புத்தகத்தை தருவித்து, படித்து, விர்த்தியாகக் கோருகிறேன்.

மாலை இரயிலில், எமகாதகனென்னும் கணபதி முதலியாரின் அன்புள்ள மனைவி வந்திறங்கினாள். புகை வண்டி நிலையத்தை அடைந்து, மனைவியின் வரவை எதிர்பார்த்திருந்த கணபதி முதலியார் தான் தங்கி இருந்த ஹோட்டலுக் கழைத்துவந்து அன்புற இன்புற்று இருந்தார்கள். ஆசை நாயகனைப் பிரிந்த மரகதவல்லிக்கு, தன் நாயகனைச் சுமார் இரண்டு மாதம் கடந்து ஒன்று சேர்ந்ததால், மனம் கரைகடந்த சந்தோஷ வெள்ளத்தில் மூழ்கியது. எமகாதகன் செய்த சாமர்த்திய சாகஸச் செயல்களை யெல்லாம் மனைவியிடம் சொல்ல, மரகதவல்லியும் தன் புருஷன் செயல்களை எல்லாம் வியந்து, கொண்டாடினாள்.

மறுநாள் தங்கள் குடியிருப்புக்கு தகுந்ததோர் விடுதியைத் தேடிக் குடித்தனம் புகுந்தார் கணபதி முதலியார்.

சுமார் பதினைந்து தினம் சென்று தன் மனைவியிடம், தான் இப்படி சும்மா இருத்தல் கூடாது. ஆகையால் ஏதாவதொரு வியாபாரம் செய்தல் வேண்டும், என்றார்.

மரகத.—என் நாதா! நீர்தான் எவ்வளவு வருஷம் கஷ்டப்பட்டு வியாபாரம் செய்தாலும், சம்பாதிக்க முடியாத அவ்வளவு சொத்து சம்பாதித்துள்ளீர். அதை வைத்துக் கொண்டு, நாம் நமது ஊரிலாவது, இங்காவது சுகமாயிருக்கக் கூடாதா? நம் இருவர் மாதா பிதாக்களும் இதைக் கண்டால் எவ்வளவோ சந்தோஷப்படுவார்கள்.

கணபதி.—பெண்ணே, நீ முற்றும் அறியவில்லை. இப்பொருள் நமக்கேன். ஒரு விதத்தில் இது அனியாயப் பணமே. நானிதை ஏழைகட்கும், நம்தேசத்திற்குமல்லவோ, வைத்திருக்கிறேன். ஏன், நான் சொல்வது, உனக்கு மன வெறுப்பா யிருக்கிறதோ?

மரகத.—இல்லை, இல்லை. நானப்படி கனவிலும் நினைக்கவில்லை. வீட்டிற்குப் போகலாம். இனி உங்கட்கு

வன் கஷ்டம், ஒருவேளை என்னைப் பிரிந்திருக்கவும் நேரிடும், என்று எண்ணியே நானதைச் சொன்னேன்.

கணபதி.—கண்மணி, இனி உன்னைப் பிரிந்து நான் வியாபாரம் செய்யேன். கஷ்டத்தை இவ் வயதில் பார்க்கலாமா? ஏழைகட் குழைக்கவே என் மனநோக்க முற்றிலுமிருப்பதால், அவர்களுக்காகவே இப்பாடு படுகிறேன். நீயும் கலந்து வேலை செய்கிறதற்கு என்ன சொல்லுகிறாய்?

மரகத.—அப்படியே. நெடுநாளாக எனக்கு அந்த எண்ணமுண்டு. தங்களைப் போலவே தைரியமாய் வேலை செய்ய எனக்கு ஆவல் அதிகம், ஸ்திரீகளுக்கு உதவாது என்று அதை வெளியிட வெட்கமுற்றிருந்தேன். தாங்கள் என்ன வியாபாரம் செய்யப் போகிறீர்?

கணபதி.—நாயகி! மெச்சினேன் உன் ஆண்மைத் தனத்தை. (என்று கட்டி ஒரு முத்தமிட்டு) கண்ணே! நான் ரூபாய் பத்து, அதிகமானால் இருபது ரூபாய்க்குள் ஒரு வியாபாரம் செய்யப்போகிறேன்.

மரக.—அது என்ன வியாபாரமோ?

இப்போது ஒன்றும் முடிவிற்கு வரவில்லை. இந்தா இதை வைத்துக்கொள் என்று கொஞ்சம் ரூபாயை மனைவியிடம் கொடுத்து, நான் இரண்டு நாளில் வந்துவிடுகிறேன். சிநேகிதன் சண்முகன் வருவான். உனக்கு வேண்டிய ஏவல் செய்வான். மிக நல்லவன், போய் வருகிறேனென்று கையில் இருபது ரூபாயுடன் கணபதி முதலியார் வெளிச் சென்றார்.

மறுநாள் கணபதி முதலியார், தானிருப்பிடத்திற்கு கொஞ்சம் சமீபத்திலுள்ள, குணமங்கலம் என்னும் கிராமத்தின் சந்தைக்குப் போனார். அங்கு, எல்லாவற்றையும் சுற்றிப் பார்வையிட்டு வரும்போது, அங்கொரு வளையற்காரன், இன்றே என்றே என்று எமனோலையை எதிர்

பார்த்திருந்த ஒரு கிழக் குதிரையை, விற்றுவிடலா மென்று கொண்டுவந்திருந்தான். வளையற்காரர்கள், தங்களிடமிருக்கும் சப்பைக் குதிரைமேல், சுமையை ஏற்றி ஊரூராய் செல்வார்கள். அக் குதிரைகளுக்குச் சரியான உணவு இல்லாததாலும், உழைப்பதிகமாதலாலும், அது மிக இளைத்து கேவல ஸ்திதியிலிருக்கும். சாதாரணமாக, மிக சோம்பலாக ஓடுங் குதிரைகளுக்கு "இது வளையற்காரன் குதிரை" எனக் கேவலமாக, குறிப்பிட்டுச் சொல்வது உலக வழக்கம். அப்பேர்ப்பட்ட குதிரை யொன்றை அங் கொருவன் வைத்துக்கொண்டு, விலை கூறி வந்தான். அக் குதிரையை எவரும், திரும்பிக்கூட பார்க்காதது கண்டு அவன், பகவானே! நாராயணா!! என் குதிரையை எவரும், திரும்பிக்கூடப் பார்க்கவில்லையே! என் வறுமையின் நிமித்தம், இக்குதிரையை விற்று, நமது பெண்டு பிள்ளைகள், இரண்டு நாளாய் சாப்பாட்டிற் கில்லாமலிருப்பதை இன்றுவது ஒழிக்கலா மென்று, நான் ஜீவனாதாரமாக வைத்திருக்கும் இதை விற்றுவிடலாம் என்றுச் சந்தைக்கு வந்தும் இச் சனியன் என்னை விட்டபாடில்லையே! "ஐங்காதம் போனாலும் தன் பாவம் தன்னோடு தான்" என்ற பழமொழி என் விஷயத்தில் உண்மையாக இருப்பதை கண்டுகொண்டேன் என துயருற்று புலம்பினான்.

இதைப். பார்த்த முதலியார், 'அப்பா! இக் குதிரை என்ன விலை?' என்றார்.

அக்குதிரை வியாபாரி, குருடனுக்கு கண்கிடைத்தாற்போல், ஐயா! நீர் என்ன வேண்டுமானாலும் கொடுத்து வாங்கிப்போம், என்றான்.

க-மு.—அப்படியல்ல, நீர் சொன்ன விலை நான் தருகிறேன்.

கு-வி.—ஐயா, பத்து ரூபா கொடுங்கள் போதும்.

கணபதி முதலியார் அக் குதிரையைப் பிடித்துக் கொண்டு 10-ரூபாய் கொடுக்க, வியாபாரி நமஸ்காரம்செய்து எடுத்துப்போனன்.

பின் கணபதி முதலியார், அக்குதிரையைக் கொஞ்ச தூரம் மெதுவாக நடத்திக்கொண்டு போனர். அதற்குமேல் அதற்கு நடக்க முடியவில்லை. கஷ்டப்படுத்தினல் கீழே மண்டி போட்டுவிடும்போ லிருக்கிறது. அங்கேயே உயிரை விட்டாலும் விடுமேயன்றி ஒரு அடியில் அரையடி கூட அப்பால் எடுத்துவைக்காது. பதினயிரங் குடா தவிடு பொடியாலும் பதருதுவைக்கும் ஒரு அடி. அப்பேர்ப்பட்ட குதிரையைப் பார்த்து சிரித்து தாெனாரு பாடல் அதன் மேல் பாடினன்.

வெண்பா

பிட்டத்தைத் தொட்டெட்டுப் பேர்நெட்டித்தள்ள முன்னின்
றெட்டுப்பேர் கூடி இழுத்தேக—கட்டாயம்
காலங் குலமுந்தன் காலெடுக்காது முத்துச்
சீல னுரைக்குங் குதிரை தேர்ந்து.

என்று வர்ணித்து, ஆ, நமக்கு இக் குதிரைதான் சரி, இதை மூலாதாரமாக வைத்தே நாம் பொருள் சம்பாதிக்க வேண்டும். பார்ப்போம், என தனக்குள் சொல்லிக்கொண்டு அக் குதிரைக்குக் கொஞ்சம் பில் பிடுங்கிபோட, அக் குதிரை அதைத் தின்றுகொண்டே இருந்தது.

எமகாதகன், விரைவாகச் சென்று, சமீபத்திலுள்ள தோர்விடத்தில், வாயகன்ற மண்சட்டி ஒன்று பெரிதாக வாங்கிக்கொண்டு, மீதி பணத்திற்கு எல்லாம் இரண்டணு வெள்ளி நாணயங்களாக மாற்றிக்கொண்டு ஓடிவந்து குதிரையைப் பிடித்து, மிகச் சிரமப்பட்டு அக் குதிரையை நாலுகால் பாய்ச்சலில் ஓடுகிறுப்போல் நிற்கவைத்தான். குதிரையைப் பார்த்தவர்கள் வெகு வேகமாக ஓடுகிற பாரா

சாரி குதிரை யென மதித்திடுவார். அவ்வளவு விரைப்பாய் அக் குதிரையின் கால்கள் பூமியில் நாட்டப்பெற்றிருந்தன. தான் கொண்டுவந்த சால்சட்டியைத் தண்ணீருடன் குதிரையின் வாலருகில் வைத்திருந்தான்.

கொஞ்ச நேரம் சென்றதும், குதிரை சாணமிட ஆரம்பித்தது. எமகாதகன், அச் சாணங்களை சிந்திப்போகாமல் ஓர் பாத்திரம் கொண்டு தாங்கி, அக் குதிரை லத்தி ஒவ்வொன்றுக்குள்ளும், ஒவ்வொரு இரண்டணு பணத்தை சொருகி சொருகி, சட்டியிலுள்ள தண்ணீரில் போட்டுவிட்டு, அருகில் உட்கார்ந்துக் கொண்டிருந்தான்.

அரைமணி நேரம் சென்று, அச்சந்தைக்குப் போய் திரும்பிவரும் நான்கு வியாபாரிகள் அவ் வழியாய் வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் ஒரு கூப்பிடு தூரத்தில் வருவதைக் கண்ட நம் எமகாதகன், வெகு அவசரமாய் சட்டியிலுள்ள தண்ணீரைக் கையால் கலக்கிக்கொண்டிருந்தான்.

தூரத்திலிருந்து வந்த வியாபாரிகள், இது வென்ன ஒருவன் குதிரை பிட்டத்தண்டை, ஒரு பெரிய சட்டியை வைத்துக் கொண்டு கலக்கிக்கொண் டிருக்கிறுன்! அவன் என்ன செய்கிறுனென பார்ப்போமென்று நால்வரும் அருகில் சென்ருர்கள்.

எமகாதகன் அவர்கள் நால்வரும் அருகில் வரும் சமயம் கண்டு அதிகமாக சிரமப்பட்டு, தண்ணீரைக் கலக்கி, அச் சாணத்தைக் கரைத்து, ஒவ்வொரு இரண்டணுவாக அலம்பி அலம்பி தன் சட்டைப் பையில் எடுத்துப்போட்டுக் கொண்டே இருந்தான்.

வந்த வியாபாரிகள் இவனென நாகரீக உடுப்பணிந்துக் கொண்டு, குதிரை சாணத்தைக் கரைத்து, அதிலிருந்து

பையில் என்னமோ எடுத்துப்போடுகிருன். அதைக் கவ னிக்க வேண்டுமென, சமீபமாக நெருங்கினர்.

ஐயா! இங்கே ஏனையா வருகிறீர்கள்? நீங்கள் வழி யோடே போங்கள். இங்கே வந்து நான் செய்யும் காரி யத்தை ஏன் பார்க்கவேண்டும்? என்னமோ என் பிழைப் பிற்குச் செய்கிறேன், என்ருன் எமகாதகன்.

வியாபாரிகளுக்கு இதைக் கேட்டதும் இவன் என்னமோ இரகஸ்ய காரியம் செய்கிருனென எண்ணி, அதைக் கட்டாயம் பார்க்கவேண்டு மென்று வெகு ஆவ லுடன் சமீபத்தில் நெருங்கினுர்கள்.

எமகாதகன் வெகு அவசரமாய் பணம் பணமாய் எடுத்துப் பையில் போட்டான்.

இதைக்கண்டு வியாபாரிகள், தங்களுக்குள் ஏதோ பேசிக்கொண்டு, எமகாதகனிடம், 'அப்பா, நீ என்ன செய் கிருய்? இது ஏது பணமெடுத் தெடுத்துப் போடுகிருய்? என்ன செய்தி? விபரமாய்ச் சொல்' என்ருர்கள்.

எமகாதகனென்னும் கணபதி முதலியார்.—ஐயா நீங்கள் ஏனய்யா வீண் தொந்திரவு செய்கிறீர்கள். நான் என் இரகஸ்யத்தை உங்களுக்குச் சொல்லமுடியாது.

வியா.—கோபிக்கப்படாது. நீ இவ்வளவு செல்வாக்காய் இருக்கிருய். கையில் மோதிரம் கடுக்கனோடு இருக்கிருய். குதிரை லத்தியைக் கிளறிக் கொண்டிருக்கிருய். இதை மாத்திரம் தயவுசெய்து விபரமாகச் சொல். நாங்கள் போய் விடுகிறோம்.

எம.—நான் இவ்வளவு செல்வாக்கிற்கு வந்தது இக் குதிரையாலே தான். பாருங்கள் எனச் சொல்லிக்கொண்டே, தண்ணீரிலிருந்த குதிரை சாணங்களிலிருந்து ஒவ்வொரு பணமாய் எடுத்து எல்லாப் பணத்தையும், கழுவிக் கையி

லெடுத்து எண்ணினுன். சுமார், பத்து ரூபாய்க்கு கிட்டத் தட்ட இருந்தது.

ஐயா வியாபாரிகளே! நான் இக்குதிரையை வைத்துக் கொண்டு ஒருநாள் ஒரு காட்டுமார்க்கமாக வரும்போது, ஓர் மஹான் நடை மெலிந்து தள்ளாடுவதைக் கண்டு, இக்குதிரை சப்பைக் குதிரையா யிருந்தாலும் இதன் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல், அவர் கஷ்டத்தையே பெரிதெனக் கருதி, அவரை யான் இக்குதிரை மேல் ஏற்றிக் கொண்டு போய், அவருக் கிஷ்டமான விடத்தில் இறக்கிவிட்டேன். மறுபடி என்னை அவர் இரண்டு இரண்டணு கேட்டார். அப்படியே கொடுத்தேன். அவர் மனம் சந்தோஷப்பட்டு, இக் குதிரையும் நானும் பெருமையடைய ஒரு வரம் கொடுத்தார். அதாவது, இக்குதிரை சாணமிடும்போதெல்லாம், நீ கொடுத்த இவ்விரண்டு அணுப்போல, ஒவ்வொரு தடவையிலும், ஒவ்வொரு லத்தியிலும், கிடைக்கும். அது தான் நீ செய்த உதவிக்குப் பிரதி உதவி, போ என்றுர். நானும் அதை வைத்துக்கொண்டே காலத்தைத் தள்ளுகிறேன். சாமியாரருள் பெற்ற பின் இரண்டு வீடு கட்டினேன், நாலு காணி நிலம் வாங்கினேன். ஏதோ நானும் என் மனைவியும் கொஞ்சம் நகைநட்டோடு இருக்கிறேம், அவ்வளவு தான் விஷயம். தாங்கள் போய் வரலாம், என்றுன்.

இதைக் கேட்ட வியாபாரிகள் நால்வரும், இவன் சொன்னபடியே, சாணத்திற் குள்ளிருந்து சுமார் 10–ரூபாய்க்கு, ஒரே தடவையில் எடுத்தான். இக்குதிரை ஒரு நாளைக்கு, குறைந்தது நாலைந்து தடவையாவது; சாணமிடும். எல்லா தடவையும் சேர்த்தால் எவ்வளவு பணமாகும். மாதம் எவ்வளவு லாபம் அடையலாம். என்ன வியாபாரம் செய்தாலும் கஷ்டப்படாமல் இவ்வளவு செல்வம்

கிடைக்குமா? என்று நினைத்து, இப்பரியை எப்படியும் நாமே வாங்கிக் கொள்ளவேண்டும், எவ்வளவு தொகை போனாலும் பெரிதல்ல என்று தங்களுக்குள் பேசிக்கொண்டு எமகாதகனிடம் வந்து, அப்பா இக்குதிரையை எங்களுக்கு கொடுத்து விடு. அதற்காக எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறோம், என்றார்கள்.

எம.—எனக்குத் தெரியுமே, நீங்கள் இப்படி கேட்பீரென்று. அதற்குத்தான், நான் அப்பொழுதே சொன்னேன், அருகில் வராதேயுங்களென்று. இப்படித் தான் இதைப் பார்த்தவர்களெல்லாம், இதைக் கொடுத்து விடும்படி தொந்திரவு செய்கிறார்கள். இப்படித் தொந்திரவு படுத்துகிறவர்கள் கண்தானோ என்னமோ தெரியவில்லை. முன், ஒரு நாளைக்குப் பத்துதடைவைக்கு மேல் இக்குதிரை சாணமிடும். தற்போது ஒரு நாளைக்கு 5-6-தடவைதான் சாணமிடுகிறது, போங்கள் ஐயா, நான் குதிரை தரமுடியாது.

வியா.—ஐயா! உங்கள் காலில் வேணுமானாலும் விழுகிறோம். நீங்கள் எவ்வளவு ரூபாய் கேட்டாலும் தருகிறோம். உங்கள் புண்ணியமாயிருக்கும். நீங்கள் தான் எவ்வளவோ ரூபாய் சம்பாதித்துவிட்டீர்களே! உங்கள் பேரைச் சொல்லி நாங்களும் பிழைத்துப் போகிறோம். தயவு செய்து குதிரையை எங்களுக்குக் கொடுங்களென நெடுநேரம் மன்றாடினார்கள்.

கடைசியில், எமகாதகன் ஒருவாறு ஒத்துக்கொண்டு, நாலாயிரம் ரூபாய் கிரயம் தருவதாக இருந்தால் தான் கொடுப்பதாகச் சொன்னான்.

வியாபாரிகள் இவ்வளவு தொகை தரல் வேண்டுமே என சற்று பின் தங்கி, வெகுநேரம் யோசனைசெய்து, சரி, இந்த ரூபாயை நாம் கொஞ்ச நாளில் சம்பாதித்துக் கொள்ளலாம் என்று ஆள் ஒன்றுக்கு ஆயிரம்ரூபாய் விகிதம் பங்கு

போட்டு, நாலாயிரம் ரூபாய் கட்டிகுதிரையைக் கைப்பற்றி ஞர்கள்.

ஐயா வியாபாரிகளே! நானிக்குதிரையை வெகு நாள் கஷ்டப்பட்டு வளர்த்தேன். இது வரப்பிரசாதம் பெற்றக் குதிரை. என் உயிரைப் பிரிகிறுப்போல் பிரிகிறேன். ஜாக்கிரதையாகக் காப்பாற்றுங்கள். இதை நான் நடத்தி அழைத்துப் போனது கிடையாது. ஆகையால் இதை நீங்களும் நடத்திக்கொண்டு போகாமல், நாலுபேரும் சேர்ந்து தூக்கிப் போகவேண்டும். வீட்டுக்குக் கொண்டு போய் வெந்நீர் விட்டுக் கழுவி, சரியான தீனி கொடுக்க வேண்டும். கொடுத்து, ஒருவேளை சாணம் போடாவிட்டா லும், சாணத்தில் பணம் காணுவிட்டாலும், பக்கத்திற் கிருவராக உலக்கை கொண்டு வயிற்றில் பலங்கொண்ட மட்டும் இடியுங்கள். பணம் அதிகமாகவரும், அடிக்கடி எனக்குக் குதிரையின் க்ஷேமம் சொல்லுங்கள். இதை இப் போது நால்வரும் தோளில் சுமந்து போங்கள், என்ருன்.

வியாபாரிகள் இவன் விட்டால் போதுமென்று, உடனே அருகிலிருந்த மூங்கில் புதரிலிருந்து, பெரிய மூங்கில் கழிகளை வெட்டி, ஒரு பாடைபோல் கட்டி, குதிரையை அதில் கிடத்தி, நால்வரும் தூக்கிக்கொண்டு, எங்கு ஒருவேளை திரும்பியும் கூப்பிட்டு பணத்தைக் கொடுத்து குதிரையை மீட்டுக்கொள்ளப் போகிருனே வென்று, குதிரையின் பளுவால் தாங்கள் படும் கஷ்டத்தை யும் பொருட்படுத்தாது, வேகமாய் ஓட்டமும் நடையுமாக ஓடி, எமகாதகன் கண்ணுக்கு மறைந்தனர்.

---

## அத்தியாயம்—10

### "தலை தப்பினது தம்பிரான் புண்ணியம்"

எமகாதகனென்னும் கணபதி முதலியார் அளவு கடந்த சந்தோஷத்துடன் இல்லம் வந்து, நடந்த சமாச்சாரத்தை விவரித்துரைக்க, மரகதவல்லி மன மகிழ்ந்து அன்று செய்த அதிசய செயலுக்கு தன்னுசை நாயகனுக்கு ஆசையுடன் முத்தளித்து இருவரும் மனமகிழ்வுடன் இருந்தார்கள்.

பேராசையால் பூரண சந்தோஷங் கொண்ட நான்கு வியாபாரிகளும், அக்குதிரையை வெகு கஷ்டப்பட்டு வீட்டுக்குக் கொண்டுபோய், தங்கள் நால்வருக்கும் பொதுவாக ஒரு விடத்திலமைத்து, அதற்கு கொள்ளும் புல்லும் அமோகமாய் வைத்தனர். என்றுங் காணுத குதிரை, அன்றே அவைகளைக் கண்டதால் ஆனமட்டும் தின்று, வயிறு பெருத்ததைக் கண்ட நால்வரும் சந்தோஷமடைந்து காலை வந்து பார்த்து பணத்தை பொறுக்கிக் கொள்வோமென்று, அதை யாரும் பார்க்காதபடி ஒரு இருட்டறையில் விட்டு, கதவடைத்து தாங்கள் என்றும் படா கஷ்டம் பட்டதை ஆற்றுவிக்க அவரவர் இல்லம் ஏகினர்.

காலை ஐந்து மணிக்கெல்லாம் நால்வரும் ஒன்று கூடி குதிரையினிடம் சென்று, அதன் சாணத்தைக் கிளறிப் பார்த்தார்கள். அதில் ஒன்று மில்லாமல், அவர்கள் கை கால் நாற்றந்தா னெடுத்தது. அவர்களுக்கு இன்னும் சந்தேகமாகவே இருந்தது. விடிந்து காலை மணி ஆறுகியதும், சரிவரப் பார்த்தார்கள். ஒரு இரண்டணுக் கூட காண வில்லை.

ஒரு வேளை நாம் மோசம் போய் விட்டோமோ என்று எண்ணித் திகில் கொண்டார்கள். இருந்தாலும் ஒருவாறு தேறி குதிரை கொடுத்தவன் அப்பொழுதே சொன்னுனே;

ஓர்கால் பணம் வராவிடில், இருபுறமும் உலக்கை கொண்டு இடிக்கச் சொன்னானே என்று, பக்கத்திருவராய் நின்று நான்கு உலக்கையால், தம் முழு பலங் கொண்டு, இடித்தார்கள். இடி தாங்க முடியாமல், குதிரை திடீரென்று சுருண்டு கீழ் விழுந்தது. திடீரென்று விழுந்து விட்டதால் இடிப்பதை நிறுத்தி, பணம் வந்திருக்கிறதா என்று பார்த்தார்கள். காணவில்லை. நெடு நாள் வயிறு காய்ந்த குதிரை, இரவு நல்ல தீனி கிடைத்ததால் அளவு மீறி தீனியைத் தின்று வயிறு வாடாமல் பெரு மூச்சு விட்டுக் கொண்டிருந்தது. அச்சமயம் பலமான அடி விழவே, வலி தாங்க மாட்டாமல் அச்சப்பைக் குதிரை அரை மணி நேரத்தில் அரனுலகை அடைந்தது.

வியாபாரிகள் மனம் எப்படி யிருக்கும்? நண்பர்களே! நால்வரும் ஒன்றாகக் கூடி கட்டி அழுதார்கள். பணம் போனாலும் பரவாயில்லை. மேனி வாடாத நம் தேகம் இக் குதிரையைத் தூக்கும்படி வந்ததே. அக் கஷ்டத்திற்கே, இக்குதிரையால் எவ்வளவு கோடி ரூபாய் அடைந்தாலும் சமமாகாதே என்று அழுது தீர்த்து, வயிறெரிந்து, பின் குதிரையின் வயிற்றுக்குள் பணம் தங்கி இருக்குமோ என்று சந்தேகித்து, அதை அறுக்கச் சக்கிலியைக் கூப்பிடப் போனார்கள். அதற்குள் அந்நால்வரில் கொஞ்சம் புத்திசாலி யான ஒருவன், "அட அவையெல்லாம் வீண் வேலை, எனக் கப்போதே சந்தேகம், அவன் நம்மை ஏமாற்ற வேண்டியே இப்படி நம் எதிரில் தந்திர வேலை செய்தான். அப்படி உண்மையாக இருந்தால், அவன் ஏன் நமக்கு இக் குதிரையை நாலாயிர ரூபாய்க்கு கொடுக்க வேண்டும்? அவன் பெரிய கேப்மாரிப் பயல். குதிரையையும் கொடுத்து, அதிகவிசனப் பட்டவன் போல் நடித்து, குதிரையைச் சாகடிக்க வழியும் சொன்னான். இன்னும் குதிரையை

அறுத்துக் கொண்டிருக்க வேண்டுமோ? இது சுத்தப் பைத்தியக்காரர் செயலென்பதற்குச் சந்தேக மில்லை. இதைப் புதைக்க வழி தேடுங்கள்" என்றான்.

மறுபடி இவர்கள் அக்குதிரையை பணம் கொடுத்து ஒரு பள்ளம் தோண்டி, அதில் புதைத்து விட்டு, இக் குதிரைக்கு நாலாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினது, சாகடித்துப் பார்க்கத் தான் போலும்! "குதிரை செத்தது மல்லாமல் அதற்கு குழி தோண்ட பத்து பணம் ஆனது" என்று வாய் விட்டுச் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டே போனார்கள்.

இதனால் தான் இப்பழ மொழி உலகத்தில் வழங்கி வருகிறது போலும்.

குதிரையால் பணம் பறிகொடுத்த வியாபாரிகள் கோமுட்டி செட்டியார்களாதலால் நடந்ததை வெளிக்கு தெரிவிக்கவே இல்லை.

கணபதி முதலியார் சமாபுரி கடைத் தெருவில் பெரிய வொரு அரிசி மண்டி வைத்துக் கொண்டார். தான் அவ் விடத்தில் கொஞ்ச நாளைக்குச் சௌக்கியமாயிருக்கலா மென்றெண்ணி, மேற் சொன்ன வியாபாரத்தைத் துவக்கி னார்.

ஒரு நாள் குதிரை வாங்கின நால்வரில் ஒருவன், சமாபுரி கடைத் தெருவில் வழியாக வரும்போது, கடை வைத்திருந்த குதிரை வியாபாரியைக் கண்டு, வியப்புற்று, உடனே வெகு அவசரமாய் சென்று, தன் தோழர்களுக் குரைத்தான். உடனே நால்வரும் ஒருங்கு சேர்ந்து, நாம் அவனிடம் போய் விபரத்தைச் சொல்லி நம் பணத்தைக் கேட்போம். கொடுக்கா விட்டால், அவனுயிரை எமனுலகுக் கனுப்பி விடுவோம் என்று ஆத்திரத்துடன் கிளம்பினார்கள்.

சமரபுரி கடைத் தெருவில் கணபதி முதலியாருடைய கடையைத் தேடிக்கொண்டு நால்வரும் வந்தார்கள்.

கொஞ்சம் தூரத்தில் இந்நால்வர் வருவதை எமகாதகன் நற்காலமாய்ப் பார்த்து விட்டான். உடனே ஒரு ஆளிடம் தன் மனைக்குச் சென்று மனைவியிடம், வேறு நாலு பேருக்கு கூட சமையல் செய்து, உருளைக் கிழங்கு பிட்டு வைத்து, பகடாக்கறி, கடலைப் பருப்பு கூட்டு, புதினா துகையல், பருப்பு சாம்பார், ரசம், முதலியவைகள் திவ்வியமாக சமையல் செய்து வைக்கச் சொல். ஒன்றுவது தவறி இருக்கப் போகின்றது. நான் சொன்னபடியே செய்யச் சொல்லு என்று சொல்லி அனுப்பினான்.

ஆளை அனுப்பி ஐந்து நிமிஷத்திற்குள் இவர்கள் நால்வரும் கடைக்கு வந்து சேர்ந்தார்கள்.

எம.—வாருங்கள் செட்டிமார்களே! க்ஷேமந்தானா, உட்காருங்கள். என்ன செய்வது, எனக்கு வியாபாரத் தொந்திரவு அதிகமாயிருக்கிறதால் மறுபடி நான் வெளி வருவது மில்லை, உங்களைப் பார்ப்பது மில்லை என்று சொல்லிக் கொண்டே, அவர்களுக்கு ஆசனம் கொடுத்து உள் சென்று ஒரு அழகிய முயற் குட்டி ஒன்றைக் காதைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு வந்து, மாணிக்கம்! நீ வீட்டிற்குச் சென்று அம்மாவிடம், கூட விருந்தாளி நால்வருக்கு போஜனம் செய்யச் சொல். உருளைக் கிழங்கு பிட்டு வைத்து, பகடாக்கறி, கடலைப் பருப்பு கூட்டு, புதினா துகையல், பருப்பு சாம்பார், ரசம், முதலிய பதார்த்த வகைகள், திவ்வியமாக சமையல் செய்து வைக்கச் சொல். இதோ கால் மணி நேரத்தில் வந்து விடுவோம் போ, கிட்ட இருந்து பார்த்துக் கொண்டிரு, வருகிறோம், என்று சொல்லி, முயலை நடுத்தெருவில் விட்டான். அதுவும் துள்ளிக் குதித்து ஓடிற்று.

வந்த நால்வருக்கும் இது நடுவில் பேசக்கூட சந்தர்ப்ப மில்லை. பின் ஆச்சரியப்பட்டு, என்ன இது, முயலைவிட்டால் அது எப்படிப் போய்ச் சொல்லும். அது மனிதப் பாஷை தெரிந்ததுபோ லிருக்கிறது. பார்ப்போம், இங்கு இவன் சொன்னபடி அது போய் சொல்லி செய்து வைத்திருக்கிறதா என்று கண்டறிவோமெனப் பேசாமல், தாங்கள் வந்த விஷயங்களைப்பற்றி பிரஸ்தாபிக்காமலே வேறு சில விஷயங்களைப் பேசி இருந்து விட்டு, எமகாதகனுடன் அவனுடைய வீட்டிற்குச் சென்றார்கள்.

வீட்டில் நால்வருக்கும் கைகாலலம்ப ஜலம் கொடுத்தார்கள். அவர்களும் வீட்டிற் கதிபதியான கணபதி முதலியாரும் ஒரே வரிசையாக உட்கார, அன்னம், கறி முதலியவை பரிமாறினார்கள். அங்கு சொல்லி அனுப்பினபடியே, சகல பதார்த்தங்களும் சரிவரப் பரிமாறி இருந்ததைக் கண்ட வியாபாரிகள் நால்வரும் செப்பொணு ஆச்சரியப்பட்டு, ஈதென்ன, பூலோகத்திலில்லாத புதுமையா யிருக்கிறதென்றெண்ணி திருப்தியாய் சாப்பிட்டு சந்தோஷங் கொண்டு, கை அலம்பி, சற்றுநேரம் கணபதி முதலியாரை விட்டுத் தனியாக ஒன்று சேர்ந்து, என்ன இது, அதிசய செயலா யிருக்கிறது. நாம் வருவது இவனுக்கு எப்படி தெரியும்? நாம் வந்த பிறகு முயலிடம் சொல்லி அனுப்பினுன். அதுவும் வீட்டிற்கு வந்து சொல்லி கிட்ட இருந்து செய்ததுபோ லிருக்கிறது. நாம் சாப்பிடும்போது, அம்முயல் நம்மைப் பார்த்தபடியே மூலையில் வந்துட்கார்ந்து கொண்டிருந்தது. மெதுவாய் அதை நாம் கைப்பற்றிக் கொள்ள வேண்டும். அச் சங்கதியைப்பற்றி ஒன்றும் இப்போது சொல்லப்படாது. இதை நாம் வாங்கிக் கொண்டு போனுல் நமக்கு எவ்வளவோ பெருமையாக இருக்கும் என்று தீர்மானப்படுத்திக்கொண்டு, எமகாதகனிடம் வந்து, ஐயா தாங்கள் அந்தக் குதிரையைக்

கொடுத்த நன்றியை மறக்கவில்லை. அஃதேபோல் இந்த முயலையும் கொடுத்தால், எங்களுக்கு எவ்வளவோ நன்மையாயிருக்கும். இதைப் பார்த்தது முதல் எங்கள் மனம் அதன் பேரிலேயே இருக்கிறது. தயவு செய்து கொடுக்க வேண்டும், என்றார்கள்.

க-முத.—நண்பர்களே! உங்கள் கருத்துதான் என்ன? நான் எது வைத்திருந்தாலும், அதை வாங்கிப் போக எண்ணுகிறீர்கள். முன்னே குதிரையைக் கொடுத்தேன். இப்போது, இதைக் கேட்கிறீர்கள். நான் கொடுக்க மாட்டேன்.

வியா.—சினேகிதரே! எங்கள் மனம் இதன்பேரிலேயே மிகவும் அவாவுற் றிருக்கின்றமையால் கொஞ்ச நாளைக்காவது, இதை வைத்திருந்து ஆவல் தணித்துக் கொண்டுவந்து கொடுக்கிறோம், தடுக்கப்படாது.

க-மு.—சரி, நீங்கள் அதிக வற்புறுத்திக் கேட்பதால் உங்களிடம் இம்முயலை ஒரு மாதத்திற்குக் கொடுக்கிறேன். முப்பதாம் நாள் மாலை, 6—மணிக்கு, என் கையில் முயல் வந்திருக்கவேண்டும். முயல் வரத் தவறினாலும், அல்லது, உங்களால் முயலை காணும லடிக்கப்பட்டாலும் ரூபாய் ஆயிரம் நீங்கள் கொடுக்கவேண்டும். அதற்காக இப்போதே ஜாமீனாக ரொக்கம் ஆயிரம் ரூபாய் என்னிடம் கட்டவேண்டும். உங்களை நம்பி என்னால் முயல் தர முடியாது. அதன் அருமை எனக்குத் தெரியும்.

கோமுட்டி செட்டிகள், ஜாமீன் தொகை இல்லாமல் பெற்றுப் போக எவ்வளவோ தூரம் முயன்று பார்த்தார்கள்; முடியவில்லை. கடைசியாக அவர்களில் ஒருவர் வியாபாரத்திற்காக வைத்திருந்த ஆயிர ரூபாயையும் டிபாசிட்டாக கட்டி முயலைப் பெற்றுக் கொண்டு வெகு சந்தோஷமாய்ச் சென்றார்கள்.

எமகாதகன் முயலைக் கொடுத் தனுப்பிவிட்டு அந்த ஆயிர ரூபாயையும், தன் வழக்கப்படி, செலவழித்தான். மனைவி மனமுகிழ்ந்திருந்தாள்.

முயலைக் கொண்டு சென்ற வியாபாரிகள் தங்கட்கோர், பெரிய புதையல் கிடைத்து விட்டாற்போல் மன மகிழ்ந்து, இதை ஆளுக்கு ஒவ்வொரு வாரம் வைத்திருப்பது. ஆனால் எவர் அதை முதல் முதல் வைத்துக் கொள்வது என்பது அவர்களுக்குள் வெகு நாழிகை விவாதத்திலிருந்து, பின் நால்வருமே ஒன்று சேர்ந்து முடித்து ஒருவர் கையில் வைத்துக்கொண் டிருப்பதாக ஏற்பாடாகியது.

இரண்டு நாள் வீட்டில் தங்கி இருந்து, மூன்றும் நாள் அம் முயலைப் பார்த்து, நீ என் வீட்டை நன்றாய்த் தெரிந்துக் கொண்டாயா? எனக் கேட்டான் வியாபாரியில் ஒருவன். முயல் தன் இயற்கைப்படி சற்று தலையை அசைத்தது. அம்முயல் கண்டு, தெரிந்துக் கொண்டதாக சைகை காட்டிற் றென்று எண்ணி, அதைக் கையிலெடுத்துக் கொண்டு, மற்ற மூவரும் ஒன்று சேர்ந்து, தங்கள் வீட்டிற்குச் சுமார் பத்து மைல் தூரத்திலுள்ள ஒரு காட்டிற்குச் சென்று, அவ்விடத்தில் கொஞ்சம் சந்தோஷமாயிருந்து விட்டு, முயலைப் பார்த்து, ஓ மாணிக்கம், வீட்டிற்குச் சென்று அம்மாவிடம் நால்வருக்கும் போஜனம் செய்யச் சொல். ஏதாவது வாய்க்கினிய உணவு செய்யச் சொல். நீயும் அருகில் இரு, என்று சொல்லி முயலை விட்டார்கள். முயல் மாயமாய் ஓடி மறைந்தது. வியாபாரிகள், மன நிம்மதியுடன் நடந்து, வந்துகொண் டிருந்தார்கள்.

வாசகர்களே! எமகாதகன், முன்பே ஒரு ஆளிடம் சொல்லி அனுப்பிவிட்டு, பின் தன் கடையில் வைத்திருக்கும் ஒரு முயலிடம் அஃதே போல சொல்லி அனுப்பினான். அம் முயல் விட்டாற் போதுமென் றெண்ணி எங்கோ ஓடி

மறைந்தது. தான் வீட்டில் வளர்த்துவரும் வேறொரு முயலையே வியாபாரிகளுக்குக் கொடுத்தது. முயலால் காரியமொன்றும் நடைபெறவில்லை.

வியாபாரிகள் நால்வரும் தள்ளாடி நடை மெலிந்து ஆவலுடன் போஜனமுண்ண வீடுவந்து சேர்ந்தார்கள். அவ் வீடு மாதவசெட்டி என்பவ னுடையது.

செட்டியார்கள் வீட்டுள் சென்றதும், மாதவ செட்டி மனைவியைக் கூப்பிட்டு, எங்கே நால்வருக்கும் இலை பரிமாறு, என்றான்.

மனைவி.—இப்படித் திடீரென்று சொன்னால், நான் எப்படி பரிமாறுவது? ஒருவரா இருவரா, நான்கு பேருக்கும் எப்படி நான் தயாராய் சமையல்செய்து வைத்திருப்பேன்? என்றாள்.

செட்.—ஏன், மாணிக்கம் வந்து சொல்லவில்லையா?

மனைவி.—எந்த மாணிக்கம், மாணிக்கமாவது, கீணிக்கமாவது? இங்கே யாரும் வந்து சொல்லவில்லை.

செட்.—(பயங்கர மனத்துடையவனாய்,) நாங்கள் வாங்கி வந்த முயல் வந்து சொல்லவில்லையா?

மனைவி.—என்ன? முயலா! முயல் நம்முடன் எங்காவது பேசுமா? அதெல்லாம் ஒன்றும் கிடையாது, யாரும் வரவே இல்லை.

செட்டிமார் நால்வரும் திகில் கொண்டு, நம் அருமை மாணிக்கத்தை இழந்து விட்டோமே, என்ன செய்வது? யூகித்துப் பார்த்தால், இப்போதும் நம்மை ஏமாற்றி விட்டா னவன். என்ன சாமர்த்தியக்காரன்! பெரிய ஆள் விழுங்கியா யிருக்கிறான். அவனிடம் ரூபாய் ஆயிரம் இப்போது வேறு அகப்பட்டுக் கொண்டதே. இரண்டு தடவையும் நம்மை ஏமாற்றினானே. இத்தடவை, எப்படியாவது சென்று அவனுயிருக் குலை வைத்திடவேண்டும். நம்மை

வஞ்சித்தவனை, நாம் வஞ்சனையாலேயே, கொல்லவேண்டும். நம் உயிரை வாங்கினாற்போல கஷ்டப்பட்டு சம்பாதித்த பணத்தை எல்லாம் இப்படி ஆயிரக் கணக்காக கைக்கொண்டானே. அவனை எப்படியாவது ஒழித்திடல்வேணும், என்றெண்ணி முன்போல் ஒருவரிடமும் வெளிப்படுத்தாமல், அன்றிரவே புறப்பட்டு, சமரபுரியில் எமகாதகன் வீட்டருகில் சென்று, எமகாதகன் தனியாக வருவதை எதிர்பார்த்து மறைவாக நின்றுக்கொண்டிருந்தார்கள்.

எமகாதகன், காலை நேரத்தில், காலைக்கடனை முடித்துக் கொள்ள, தனியாக சற்று ஜனங்கள் நடமாட்டமில்லாத விடத்திற்குப் போனான். தனியாகப் போவதைக்கண்டு நால்வரும், திடீரென எமகாதகன் மேல் விழுந்து கட்டிப் பிடித்து, அவனை ஒரு கோணிப்பையில் போட்டு இறுகக் கட்டி, ஒருவன் தலையில் தூக்கிக்கொள்ள, மற்றவர்கள் சூழ்ந்து இவனை ஒழிப்பதற்கு ஆலோசித்துக்கொண்டு சென்றார்கள்.

இவன் பலதடவை நம்மை வஞ்சித்தான். ஆதலால், இவனைக் கட்டவிழ்க்காமலே, இப்படியே எங்காவது கிணற்றில் போட்டுவிட வேண்டுமென்று பேசிக்கொண்டே போனார்கள்.

இதைக் கேட்ட எமகாதகன், பயங்கொண்டு, என்றும் அகப்படாத சிங்கம், இன்று, இம் மனிதப் பதரிடம் கட்டுண்டு கிடக்கின்றதே. நாம் எப்படி தப்புகிறது. இன்றோடே என் வாழ்நாள் முடிந்துவிடுமோ? இருந்தாலும், இருக்கட்டும் கடவுளிருக்கிறார். நம்மாலானவரை முயற்சிப்போம், என்றெண்ணி பேசாமலிருந்தான்.

நால்வரும், அம் மூட்டையை அங்கொரு புளிய மரத்தடியில் வைத்துவிட்டு, தாங்கள் காலைக் கடனை முடித்துக் கொள்ளச் சற்று தொலைவாக சென்றனர்.

அவ்வழியாக சுமார் நூறு ஆடுகளுக்கு மேல் மேய்வதற்கு ஓட்டிவந்த ஓர் இடையன், இம் மூட்டை தானாக அசைவதைக் கண்டவுடன், ஆச்சரியப்பட்டு, இது என்ன மூட்டை, என்று சொல்லிக்கொண்டே, தன் கையில் வைத்திருக்கும் தடிக்கொம்பால், சற்று தட்டினான். உள்ளிருந்தவன் யாரப்பா அது தட்டுகிறது? போகிறவன், சும்மா போகப்படாதா? என்னையேன் தட்டுகிறாய்? என்றான்.

இடையன்.—சந்தேகப்பட்டு, நீ யாரப்பா? ஏன் கட்டுண்டு கிடக்கின்றாய்? என்ன செய்தி, அவிழ்த்துவிடட்டுமா?

உள்ளிருந்தவன்.-அப்பா, நான் தனியாய்வந்துக்கொண்டிருந்தேன். யாரோ நால்வர், என்னிடம் வந்து, தங்களுக்கு ஒரு பெண்ணிருக்கிறதாம். அது வெகு அருமையானதும் அழகுமானதாம். லட்சம் ரூபாய்க்குமேல் ஆஸ்தி யிருக்கிறதாம். அதை யப்பெண்ணுக்குச் சீதனமாக வைத்து, எனக்குப் பெண்ணைக் கலியாணம்செய்து தருவதாகச் சொல்லுகிறார்கள். எனக்குக் கலியாணமே பிடிக்கவில்லை. சந்யாசி ஆக பார்க்கிறேன். எனக்குக் கலியாணம் வேண்டாமென்றேன். பெண் வயதிற்கு வந்துவிட்டால் தங்கள் குலத்திற் காகாதென்று, என்னை இப்படி வலியகட்டித் தூக்கிப் போகிறார்கள். என்னை யவிழ்த்துவிட்டால் ஓடிப்போவேன். என்னை வைத்துவிட்டு காலைக் கடனை முடிக்கப்போயிருக்கிறார்கள். இதை அவிழ்த்துவிடு. உனக்கு மிகப் புண்ணிய மென்றான்.

இடையன் கொல்லென்று சிரித்து, நீ யென்ன பைத்தியக்காரனுயிருக்கிறாய், லட்ச ரூபாய் ஆஸ்திவைத்து, பெண்ணையும் தருகிறே னென்றால் வேண்டாம் என்று சொல்பவனுமுண்டோ?

உள்ளிருந்தவன் எனக்கு மனக்கவலை அதிகமாயிருக்கிறதால் கலியாண இன்பமே இல்லை. கலியாண ஆசையே.

இல்லாவிட்டால், மனைவி எதற்கு? ஆஸ்தி எதற்கு? எனக்கு வேண்டாம் வேண்டாம். நான் ஆண்டிப்பயல். நானெங்காவது பிச்சையெடுத்து பிழைத்திடுவேன். என்னை அவிழ்த்து விடு, போது மென்றான்.

இடையன் அப்பா ஒரு யோசனை எனக்குண்டாகிறது. சரி, உன் முகத்தை அவர்கள் சரிவரப் பார்த்திருக்கிறார்களா?

உள்ளிருந்தவன், இல்லை. காலை இருட்டிலேயே என்னைப் பிடித்துக்கொண்டாராதலால், என் முகத்தைச் சரிவரக்கூடப் பார்க்கவில்லை. என் முகம் எப்படி இருக்கிறதென்று தெரிந்தால் நான் ஆண்டிப்பயலென்று அறிந்துக் கொள்வார்கள்.

இடையன், பேராசையால் தன் ஆடுகளை யெல்லாம் விட்டு விட்டு, அப்பா, நான் வேணுமென்றால் அந்தப் பெண்ணை மணந்துக்கொள்கிறேன். உன்னை அவிழ்த்து விடுகிறேன், உனக்குப் பதில் என்னை இதனுள் போட்டு மூடிவிடுகிறாயா? என்றான்.

உள்ளிருந்தவன். — அப்படியே செய்கிறேனென்று சொல்ல இடையன் கட்டவிழ்த்து விட்டான். எமகாதகன் வெளி வந்து, இடையனைத் தூக்கிக் கோணிப்பைக்குள் போட்டுக் கட்டி உருட்டிவிட்டு, அவனுடைய கம்பளியைப் போர்த்துக் கொண்டு, தடியைப் பிடித்து, ஆடுகளை ஒன்றாகச் சேர்த்து தானோட்டிக் கொண்டு போனான்.

காலைக்கடன் முடிக்கப் போன நால்வரும், தாங்கள் வைத்துப் போன மூட்டையைத் தூக்கிக்கொண்டு போனார்கள். உள்ளிருந்த இடையன், இவர்களது பேச்சுக் குரலால், அவன் சொன்னதுபோல் நால்வாயிருக்கக் கண்டு சந்தோஷமாய் தனக்கு அதிர்ஷ்டம் வந்தால் இப்படியல்லவோ வரவேண்டுமென்று அகமகிழ்ந்திருந்தான்.

தூக்கிப் போனவர்கள், கொஞ்ச தூரம் சென்று, அங்கிருந்த பாழுங்கிணற்றி லொன்றில் மூட்டையைப் போட்டுவிட்டு, ஒழிந்தான் சனியன், சண்டாளன் எனச் சொல்லிக்கொண்டே சென்று, அருகிலிருந்த கிராமத்தில் காலைச் சிற்றுண்டி அருந்தி, சந்தோஷமாய் வந்துக் கொண்டிருந்த சமயம், எதிரில் எமகாதகன் கம்பளி போர்த்தபடி, நூறுக்கதிகமாயுள்ள ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்ததைப் பார்த்த நால்வரும் பிரம்மிப்படைந்து, நாமங்கு இவனைக் கட்டி கிணற்றில் தள்ளினோம். இவனெப்படி இங்கு வந்தான். உயிரோடு திரும்பிவந்ததுடன், ஏராளமான ஆடுகளுடன் வருகிறான். என்ன செய்தி, விசாரிப்போம், என்று அவனிடம் நெருங்கி, ஐயா! என்ன இப்படி இடையன் வேஷம் போட்டு வருகிறீர்? ஆடுகளெல்லாம் ஏது? என்றார்கள்.

எமகாதகன்.—ஐயா புண்ணியவான்களே! உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் என்னை அக்கிணற்றுக்குள் கொண்டு போட்டதும், தண்ணீரிலிருந்து ஒரு புண்ணிய புருடன் தோன்றி, என்னைத் தாங்கி, என் கட்டவிழ்த்து, தண்ணீர்க்குள் அழைத்துப்போக, அதன் கீழ் தண்ணீர் காணவில்லை. சட்டென்ன வெளிச்சமா யிருந்தது. அஃதொரு பெரிய ஊராயிருந்தது. அவ்வூர் அரசனிடம் என்னைக் கொண்டு போய்விட்டார்கள். அரசன் என்னை, 'ஏன், கிணற்றில் விழுந்தாய்' எனக் கேட்டார். நான் 'வறுமைப் பிணிவாய்ப் பட்டு, உலகத்திலிருக்க இஷ்டப்படாமல் விழுந்து விட்டேன்' என்றேன். உடனே, அவர் எனக்கு நூறு ஆடு கொடுத்து, வெளியேற்றி விடும்படி சொன்னார். அப்படியே நானும் பெற்று வருகிறேன். தங்கள் செய்த பேருபகாரத்திற்கு, மிக்க வந்தனம் என்றான்.

வியா.—அது என் ஆடுகள் மாத்திரம் தருகிறார், வேறு பொருள் தருவதில்லையோ?

எம.—இதே கேள்வியை, என்னை வழிவிட்டுப் போனவனிடம் கேட்டேன். அவன், அரசர் இடையராதலால், அவர் தானம் செய்வதெல்லாம் ஆடுகள் தான் என்று சொன்னான்.

இச்சவிஸ்தாரங் கேட்ட நால்வரும், நாமும் அதைப் போல் பெற்றுவரலாமா? ஒரு அரைமணி நேரத்தில் நூறு ஆடுகள், சம்பாதித்தானே. ஒரு ஆடு, ஐந்து ரூபாயானாலும், நூறு ஆடுக்கும் ஐந்நூரு ரூபா யாச்சே, எப்படியாவது நாமும் பெறவேண்டும், என்று ஆவல்கொண்டார்கள்.

இவர்கள், சுத்தமாய் கல்வியில்லாத குக்கிராமத்தார்கள் ஆதலாலும், பேராசைப் பேய் பிடித்தவர்களானதாலும், எமகாதகன் எதைச் சொன்னாலும் நம்பி மோசம் போகிறார்கள்.

நால்வரும் எமகாதகனிடம் சென்று, யாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும். நாங்களும் அதைப் போல் அடையும்படி ஏற்பாடு செயல்வேண்டும், என்றார்கள்.

எம.—அதற்கென்ன. என் கைவிட்டா தரப்போகிறேன்? நீங்களும் பெற்றுக் கொள்ளுங்கள். ஆனால் தனித் தனி போய் கேட்டால், இவர்கள் ஆசைபிடித்தவர்கள். மேலும்மேலும் வருகின்றார்போலுமென் றெண்ணி அரசன் கொடுக்க வெறுப்புறுவான். ஆகையால் நால்வரும் ஒரே நேரத்தில் போவது மேல்.

வியாபாரிகள்.—அப்படியானால் நாங்கள் போய் கிணற்றில் குதிக்கட்டுமா?

எம.—நான் சென்ற விதமே, கால் கைகள் கட்டினபடி விழுந்தால் தான்; அவர்கள் ஏழையென்று நம்பி, உதவி செய்வார்கள்.

அப்படியானால் எங்கள் நால்வரையும் நீயே கட்டிப் போடுகிறாயா? என்றார்கள்.

எம.—முடியாது நான் போகவேண்டும்.

வியாபாரிகள் 'தயவுசெய்து, எங்களையும் கட்டிப்போட வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார்கள். எமகாதகன் ஒருவாறு சம்மதித்து, நான்கு கோணிப்பைகளில் நால்வரை யும் தனித்தனி கட்டித் தூக்கிப் போய், அக்கிணற்றினருகில் வைத்துவிட்டு அவர்கள் போடும் போது தான் கட்டிவிட்டுப்போன இடையன் எப்படி இருக்கிறானோ வென்று, கிணற்றை எட்டிப் பார்த்தான்.

நற்காலமாய், அக்கிணத்திற்குள், சொட்டு கூட தண்ணீர் இல்லாததால், மூட்டை மாத்திரம் கிடந்தது. போட்டவர்கள் இதைக் கவனிக்கவில்லை. எமகாதகன் அதை இறங்கி எடுத்துக்கொண்டு, கொஞ்சதூரம் வந்து அவிழ்த்தெடுத்து, அவன் களையாற்றி, அவனிடம் நடந்த விபரங்களைச் சொல்லி அன்று அவனுக்கு கஷ்டத்தைக் கொடுத்ததற்குப் பரிகாரமாக ஒரு நூறுரூபாய் நோட்டைக்கொடுத்து, அவன் ஆடுகளையும் ஒப்படைத்துப் போகச் சொன்னான். இடையன் ஒரு நாள் உயிர் போகும்படி கஷ்டப்பட்டாலும், நூறு ரூபாய் கிடைத்ததால், மனச் சந்தோஷத்துடன் ஏகினான்.

எமகாதகன், தன் வீடு நாடிச் சென்றான். கிணற்றண்டை கட்டுப்பட்டு நால்வரும், வெகு நாழிகை அப்படியே இருப்பதைக் கண்டு, ஓஹோ இத்தடவையும் நம்மை ஏமாற்றினான். என் செய்வது என வருத்தப்பட்டு, மூச்சு விட முடியாமல் திணறி, திண்டாடி அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கும் சமயம், அவ்வூராரொருவன், இது என்ன மூட்டைகள், ஆதரவில்லாமல் கிடக்கிறதென்று,

தொட்டு அவிழ்த்துப் பார்த்து, குற்றுயிராய் கிடந்த நால் வரையும் அழைத்துப் போய் அவரவர்கள் வீட்டில்விடுத்துச் சென்றான்.

இவர்கள் உடம்பு தேறுவதற்கு இரண்டு நாட்களாய் விட்டன.

மூன்றும் நாள் இந்த வியாபாரிகளுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் உங்களை இப்பாடுபடுத்தினவன், **எமகாதகன்** என்றிருந்தது. அதைக்கண்டநால்வரும், ஏற்கனவே எமகாதகனின் சாமர்த்தியத்தைப் பற்றி கேள்விப்பட்டிருப்பவர்களாதலால், மிகப்பயந்து, இனி அவன் விஷயத்தில் சென்றால், உயிரோடு மீளுவது அரிது, 'தலை தப்பினது தம்பிரான் புண்ணியம்', என்று பேசாமலிருந்து விட்டார்கள்.

---

## அத்தியாயம்—11

### "மாயாசித்தன்"

மணிபுரம் என்ற ஊரில், தங்க முத்துப்பிள்ளை என்பவர், கோடீஸ்வரர். ஏறக்குறைய ஐந்து கிராமங்கள் இவருக்குச் சொந்தமாயிருந்தன. ஆனாலும் கருணை இல்லாதவர். தர்மத்திற்கும் இவர்க்கும் வெகு விரோதம். கர்ம கர்த்தா. இவர் குணமும், கோபமும், கொடுந்தன்மையும் ஒருவருக்கும் பிடிக்கிறதில்லை. ஆனால் பணத்திற்காக சிலர் இவரைச் சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் தங்க முத்துப் பிள்ளைக்கு ஒரு கடிதம் கிடைத்தது. அதில்

தங்க முத்துப்பிள்ளை அவர்கட்கு, எனக்கு லட்ச ரூபாய் தேவையாயிருக்கிறது. இன்றே அத்தொகையுடன் நீர் வரவும். நம்பிக்கையுள்ள ஆளிடமாவது கொடுத்து,

முள்ளோடையின் சமீபம் அனுப்பவும். மாலை நான்கு மணி வரைக்கும் பார்ப்பேன். வராவிடில், இரவு உம்மிடமிருந்து லக்ஷ ரூபாய்க்கு வட்டியுடன் எப்படியும் கொண்டு வந்து விடுவேன். தவறமாட்டேன். யான் சொன்னபடி செய்வேன்.

இப்படிக்கு

புவியெங்கும் புகழப்படும்

எமகாதகன்

இதைப் பார்த்த தங்கமுத்துப் பிள்ளை அங்கம் கலங்கி, ஏற்கனவே இவன் பெயரைக் கேட்டிருப்பதாலும், தற்போது நேராகக் கடிதத்தைக் கண்டதும், அவனைப்பற்றி பயமதிகமாயிற்று. ஆனால் லக்ஷ ரூபாய் மனம் வந்து கொடுப்பதென்றால், முடியாத காரியம். இல்லாவிடில், இரவு கொள்ளை போய் விடும். இதற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று, அக்கடிதத்துடன் தன் வீடு விட்டு வெளிச் சென்றார். எதிரில் ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வர, சித்தம் களித்து, அவரிடம் இந்தலிகிதத்தைக் காட்டி, இதற்குபகாரம் செய்யும் படி இரைஞ்சினார்.

சப் இன்ஸ்பெக்டர்.—பிள்ளை அவர்களே! தாங்கள் ஒரு அணுவளவு கூட இதற்காக அஞ்சவேண்டாம். இத்திருட்டு எமகாதகப் பயலைப் பிடிக்க வேண்டுமென்று நான் வெகு நாள் காத்திருந்தேன்? சமயம் வாய்க்க வில்லை. தற்போது தானே வந்தகப்பட்டுக் கொண்டான். இதில் எங்களுக்கு நல்ல பெயரும் புகழு முண்டாகும். ஆனால் இதை வெளியிடாதீர்கள். நான் இரகஸ்யமாக கான்ஸ்டேபில்களைக் கொண்டுவந்து, மாலை ஆறு மணிக்கு மேல் உம் வீட்டைச் சுற்றி காவல் புரியச் செய்கிறேன். நானும் உங்களருகில் நின்று காவல் புரிகிறேன், அஞ்சாதிருங்கள்.

த-பிள்ளை.—என், அவன் குறிப்பிட்ட முள்ளோடைக்குப் போய் அங்கு தானே அவனைக் கைப்பற்றிக் கொள்ளக் கூடாதா ?

சப்-இர்.—அங்கு போனால், அவன் நம்மைக் கண்டு ஓடிவிடுவான். பிடிப்பது கஷ்டம். இங்கேயே வரட்டும் எனச் சொல்லிச் சென்றார்.

மாலை ஆறுமணிக்கெல்லாம் சப் இன்ஸ்பெக்டர் ஆறு கான்ஸ்டேபில்களுடன் வந்து வீட்டைச் சுற்றிலும் அவர்களைக் காவல் வைத்து, தான் தங்க முத்துப் பிள்ளையின் பண இருப்பு அறையில் காவலிருந்தார். எல்லோரும், துப்பாக்கி சகித மிருந்தார்கள்.

தங்க-பிள்ளை.—நானும் தங்களுடன் இருக்கட்டுமா ?

சப்-இர்.—வேண்டியதில்லை. ஒருவேளை வருகிறவனைச் சுடவேண்டி வந்தால் தங்கள்மீது பட்டாலும் படும். தாங்கள் போய் படுத்துக் கொள்ளுங்கள். நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இரும்புப் பெட்டியைச் சரியாக பூட்டிருக்கிறீர்கள் அல்லவோ ?

தங்க.—ஓ, பூட்டியிருக்கிறது. சாவி பத்திரமான விடத்திலிருக்கிறது என்று சொல்லி, பிள்ளை படுக்கைக்குச் சென்றார்.

பொழுது விடிந்தது. திருடன் வந்ததாக கான்ஸ்டேபில் ஒருவருக்கும் தெரியவில்லை. இரவெல்லாம் தூங்காமலிருந்த தங்கமுத்துப் பிள்ளை, ஆவலுடன் கீழ்வந்து, சப் இன்ஸ்பெக்டரைக் கண்டு, செய்தி ஒன்றுமில்லையே என விசாரித்தார். கான்ஸ்டேபில்களும் ஒன்று சேர்ந்தார்கள். இன்ஸ்பெக்டர் பார்த்துக் கொள்ளுங்கள். ஒரு சம்பவமும் நடைபெறவில்லை என்றார்.

தங்கமுத்துப்பிள்ளை இரும்புப் பெட்டியை நோக்கினார். அதன் அமைப்புகள் சரிவர நேற்று தாம் பூட்டினபடியே

இருக்கக் கண்டு சப் இன்ஸ்பெக்டர் திறமையை வியந்து, தனது மேஜையினுள் வைத்திருந்த இருநூறு ரூபாய், நோட் இரண்டு கொண்டு வந்து கொடுத்து, தாங்கள் செய்த உபகாரத்திற்காக இதை வைத்துக் கொள்ளுங்கள். என்னால் அதிக சிரமம். பின் தனியாக சில விஷயங்கள் முடித்துக் கொள்ளலாம் என்றார்.

அச்சமயம் திடீரென்று, ஒரு கடிதச் சுருள் பிள்ளையவரெதிரில் விழுந்தது. அதைத் தங்கமுத்துப் பிள்ளை படித்துப் பார்க்க, அதில் நான் கஷ்டப்படாமல், வட்டியோடு உங்களிடமிருந்து லக்ஷரூபாய், பெற்றுக்கொண்டேன். நான் சொன்னபடி நீங்களே கொடுத்திருந்தால் வட்டி ரூபாய் மிச்சப்பட் டிருக்கும். வீணே எனக்காக அதிக சிரமம் எடுத்துக் கொண்டீர். உங்களுக்கும் போலீஸாருக்கும் வந்தனம். இப்படிக்கு,

எமகாதகன்.

என்றிருந்ததைப் படித்த பிள்ளை, ஐயோ! மெய்தானா இது! என்று அலறிக் கொண்டு, இரும்பு பெட்டியினிடம் ஓடி சாவி போட்டுத் திறந்தார். உள்ளிருந்த நோட்டுகளை அவசரமாக எண்ணிப் பார்த்தார். சரியாய் இலட்ச ரூபாயில்லை. எத்தனைத் தடவை எண்ணினாலும், லட்ச ரூபாய் நோட்டுகள் காணவில்லை. அப்படியே தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தபடியே அழுது விட்டார் பிள்ளை யவர்கள். பின் எழுந்து, சப் இன்ஸ்பெக்டரிடம், ஐயா! பூட்டு திறக்கப்படாமலிருக்க, எப்படி ஐயா திறந்து எடுப்பான்? என்றார் பிள்ளை.

சப்-இன்ஸ்.—நானும் கையில் துப்பாக்கியுடன் இங்கிருக்க எப்படித் திருடன் வருவான். திருடன் வரவே இல்லை, என்று சொல்லிக் கொண்டே, அப் பெட்டியின்

பல விடத்திலும் சோதித்துக் கொண்டே வந்தார். பெட்டியின்மேலிருந்த, பெரியவொரு புஸ்தகத்தைச் சற்று தள்ளினதும் அப் பெட்டியின்மேல் தகட்டில் 6 அங்குல வட்டத்திற்கு எடுபட்டு, துவாரமாக இருந்தது. உடனே இன்ஸ்பெக்டர், தங்கமுத்துப் பிள்ளைக்கு அதைக் காட்டி இதைப் பாருங்கள். இது ஒருவித திராவகத்தால், இப்படி இரும்பை எடுத்துவிட் டிருக்கிறது. இது புதிதாக கள்ளர்கள் கையாளும் ஓர் வழி. நீங்கள் இங்கேயே இருங்கள். நான் திருடன் வந்த வழியைக் கண்டு பிடிக்கிறேன் என்று சொல்லிவிட்டு, கான்ஸ்டேபில்களை, நாலுபக்கமும் அனுப்பி, திருடன் வந்துபோன குறிகள் ஏதாவது இருக்கிறதா என்று பார்க்கச் சொல்லிவிட்டு, தானும் தேடுவதாக தோட்டத்து வழியே சென்றார்.

நெடுநேரம் சேவகர்கள் தேடி யாதொரு புலனும் தென்படாமல், பிள்ளையிடம் வந்து சேர்ந்து சப் இன்ஸ்பெக்டருடைய வரவிற்கு எதிர் பார்த்திருந்தார்கள். மணி பன்னிரெண்டாகியும் சப் இன்ஸ்பெக்டரவர்கள் வரவே இல்லை.

சேவகரில் ஒருவன்.—இந்த சப் இன்ஸ்பெக்டருக்குத் திறமையில்லை யடா. அவர் இருந்த விடத்தில் நான் இருந்திருந்தால், கட்டாயம் திருடனைப் பிடித்திருப்பேன். உதவி யற்றவர் என்றான்.

மற்றொருவன்.—அவர் எந்த டிவிஷன் (Division) சப் இன்ஸ்பெக்டர்? இப்பேர்ப்பட்ட கெட்டிக்காரர்.

வேறொருவன்.—உனக்குத் தெரியாதோ?

எனக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது, என்று அந்த அறுவரும் பேசிக்கொண்டு, கடைசியில் அந்த சப் இன்ஸ்பெக்டர் எந்த டிவிஷன் என்று கண்டு பிடிக்க முடியாமல், போலீஸ் கமிஷனர் ஆபீஸுக்குப் போய் இன்ஸ்

பெக்டரிடம் விஷயத்தைச் சொல்லி, அங்கு வந்தவர் யார், அவர் இன்னும் வரவே இல்லை, என்று கேட்டார்கள்.

அந்த ஊருக்கு நாலு சப் இன்ஸ்பெக்டர்கள். அவர்கள் நால்வரும், முக்கிய வேலைகளுக்கு நேற்றிரவு போயிருந்தமையால் வந்த சப் இன்ஸ்பெக்டர் யாரென்பதைப்பற்றி சந்தேகம் கொண்டு, ஆலோசனை செய்து கடைசி முடிவாக, வந்தவன் எமகாதகனென்றே யூகித்துத் தீர்மானத்திற்கு வந்தார்கள்.

பத்திரிகைகளி லெல்லாம் இச்செய்தி வெளிப்படுத்தப் பட்டு அவனைப் பிடிப்பவர்களுக்கு 1000 ரூபா இனுமளிப்பதாகப் பிரசுரப்படுத்தி இருந்தார்கள்.

தற்சமயம் எமகாதகனுடைய பெயர், எங்கும் பரவி, பணக்காரர்களுக் கெல்லாம் பயமா யிருந்தது. போலீஸ் காரரெல்லாம் அதிகக் கோபமுற்று இவனைப் பிடித்து தண்டிக்க எதிர்பார்த்திருந்தார்கள்.

தங்கமுத்துப் பிள்ளையின் மனம் துக்கத்தால் நிறம்பியிருந்தது. மாதம் ஒன்ருகியது. மணி புரத்திற்குச் சுமார் நூறு மைல் தூரத்திலுள்ள புத்தூர் என்னும் ஓர் பெரிய பட்டணத்தி லிருக்கும், தணிகாசலப் பிரபு என்பவர், பத்திரிகைகளில், தேவை என்ற பத்தியில் தன் மகனுக்கு, சங்கீதமும், இங்கிலீஷ் தமிழும் படிப்பித்து வைக்க, ஒரு உபாத்தியாயனி தேவை. உபாத்தியாயனி எங்கள் வீட்டிலேயே இருக்கவேண்டும். சாப்பாடு போட்டு ஐந்து ரூபாய் சம்பளம் கொடுப்போம், என்று விளம்பரப்படுத்தி இருந்தது.

அவ்வூரில் ஒரு விடத்தில் வந்திருந்த எமகாதகன், தன் மனைவியிடம், இவ்விளம்பரத்தைக் காண்பித்து, 'காதலி! சங்கீதம், இங்கிலீஷ், தமிழ், மூன்றும் கற்று வைத்தால், சாப்பாடு போட்டு ஐந்து ரூபாய் கொடுப்பார்களாம். மேலு

மிவர் பிரபுவாம். இவன் பெரிய கருமியா யிருக்கிறான். இவனிடம் ஏழைகட்கு கொஞ்சம் பணம் பெறவேண்டும். நீ சென்று அவ்வுபாத்தினி வேலைக்கு அச் சம்பளத்திற்கு ஒத்துக் கொண்டிரு. அங்கிருக்கும் சவுகர்யத்தைச் சற்று உடனே எனக்குத் தெரியப்பபடுத்து' என்றான்.

மனைவி மாரகதவல்லியும், அப்படியே சென்று தணிகாசலப் பிரபு வீட்டில் உபாத்தினி வேலைக்கமர்ந்தாள்.

மனைவி அமர்ந்த ஐந்தாம்நாள், ஒரு ஜமீன்தாருக்கு சம அந்தஸ்துள்ளவரும், லோப குணத்தில் மிகுந்தவருமான அந்த தணிகாசலப் பிரபுவிற்கு ஒரு கடிதம் வந்தது. அதி லிருப்பது :—

நண்பர் தணிகாசலம் பிரபுவிற்கு: தாங்கள் ஏராள பணத்திற்கதிபதி. தாங்கள் எனக்கு லட்சம் ரூபாய் கொடுப் பது தங்களுக்கு கஷ்டமாகத் தோன்றாது. ஆகையால் இன்று மாலைக்குள், எனக்கு லட்ச ரூபாயையும் நோட்டாக மாற்றி, ஒரு பெட்டிக்குள் வைத்து, மேல்பாதி வெள்ளை யன் கால்வாயில் விட்டுவிட வேண்டியது. பணத்தைப் பற்றி பயப்படாமல் எந்த நேரத்திலாவது மாலைக்குள் விட்டு விடவும். ஆனால் தண்ணீர் உள்புக வொட்டாமல் அதிக ஜாக்கிரதையாய் வைத்தனுப்பவும். தவறிடில் நான் எப்படி யும் அதற்கு வட்டியாக கூட லட்சம் ரூபாய் சேர்த்து, இரண்டு லட்ச ரூபாய் உங்களிடம் பெற்றுக் கொள்வேன்.

இப்படிக்கு,

எமகாதகன்.

வாசித்த பிரபு ஏற்கெனவே இவனைப்பற்றி கேள்விப் பட்டிருப்பவராதலால் அவனுக்குக் கொடுப்பதைவிட, அப் பணத்தை அவனைப் பிடிப்பதில் செலவழித்து அவனைப் பிடித்து போலீஸில் ஒப்படைக்கிறேன், என்று சபதம் கூறி, கோபாவேசமாய்க் கிளம்பி, தலைமை போலீஸ் அதிகாரி

இடம் தெரிவித்தார். அவர் எமகாதகனைப் பிடிக்க இருபத்தைந்து கான்ஸ்டேபில்களையும், ஒரு சார்ஜெண்டையும், துப்பாக்கியுடன் பிரபுவின் வீட்டில் ஒருவாரத்திற்கு அதிக ஜாக்கிரதையாக காவல் புரியும்படி அனுப்பினர்.

எமகாதகன் குறிப்பிட்ட தினம் வந்தது. அன்று, இரவெல்லாம் பிரபுவின் நான்கடுக்கு மெத்தை வீட்டில் எந்தவிடத்திலும் போலீஸ்காரர் தலையே தெரிந்தது. வீடு பூராவாய் அடைக்கப்பட்டு உள்ளே மின்சார விளக்கு பட்டப்பகல் போல் எரிந்தன.

எமகாதகனின் குறியொன்றும் இரவு இரண்டு மணிவரைக்கும் தென்படவே இல்லை. மணி இரண்டாயிற்று, தோட்டத்துப்பக்கத்திலுள்ள நெற்களஞ்சியமிருக்கும் அறையில் ஒரு முகமூடி இட்ட உருவம் சந்தடிகாட்டாமல் வருவது கண்டு, ஒரு கான்ஸ்டேபில் பயங்கொண்ட தைரியமாய் அவ்வுருவத்தைப் பிடிக்க குறிபார்த்துப் பாய்ந்தான். அவ்வுருவம் அவசரப்படாமல், மெதுவாக சற்று விலகிக்கொண்டது.

குறிப்பாய் பாய்ந்த கான்ஸ்டேபில், குறிவைத்த ஆள் விலகிவிட்டதால் திடீரென்று சுவற்றில் மோதிக்கொண்டு ஆவென்று அலறினபடி கீழே விழுந்தான். அவ்வறையில் வந்த உருவமான எமகாதகன், அவ்வறையைத் தாண்டி, கூடத்திற்கு வந்தான்.

சப்தம் கேட்டதும், எல்லா கான்ஸ்டேபில்களும் ஒன்று கூடி இங்கு ஓடிவந்து எமகாதகனைப் பிடிக்கத் துரத்தினர்கள். கூடத்தைச் சுற்றி சுற்றியும் அகப்படாமல், அலைய வைத்தான் எமகாதகன். போலீஸ்காரர், இரு பிரிவாகப் பிரிந்து ஒரே சமயத்தில் இரு திரத்தாரும் அவன்மீது பாய்ந்தார்கள். பாய்ந்த வேகத்தால் ஒருவரை ஒருவர் பலமாக இடித்துக்கொண்டார்களே அன்றி, எமகாதகன் அகப்படாமல் தந்திரமாய் தப்பித்துக்கொண்டு அவ்வீட்டு பெரிய

வாசலில்போய் நின்றான். கான்ஸ்டேபில்கள் அதை அறிந்து அங்குபோய் ஒருமிக்க அவன்மீது பாய்ந்து கீழ் அமுக்கிக் கொண்டு, அந்த இருபத்தாறு பேரும், சில ஏவலாட்களும் கூடி, அடி அடி யென்று அடித்தார்கள். ஒருவர் மேல் ஒருவர் விழுந்துக்கொண்டு கீழிருப்பவனை, கண் மண் தெரியாமல் அடித்தார்கள். எமகாதகன், அப்படியே மார் பால் நகர்ந்து, ஒரு கான்ஸ்டேபிலினுடைய இருகால் நடுவில் புகுந்து நழுவி ஓடினான். அது தெரியாமல் செந்தலைப் புலிகள் கை ஓய்கிறமட்டும் அடித்திருந்துவிட்டு, மெதுவாக விலகி, ஆளைப் பார்த்தார்கள். ஆ, என்ன ஆச்சரியம்! காணவில்லை. எல்லோரும் குவிந்துக்கொண்டு அடித்ததால் அவ்வடிக ளெல்லாம், அவர்களுக்குள் ஒருவர் மேல் ஒருவர் அடி விழுந்ததேயன்றி எமகாதகன் பேரில் ஒரு அடிகூட படவில்லை. திரும்பிப் பார்த்தார்கள். வீட்டின் தோட்டத்தில் தாமதமாகவும் அலட்சியமாகவும் போகிறான் எமகாதகன்.

வெகு அவசரமாக ஓடினார்கள். தோட்டம் நீண்டும் நிலா வெளிச்சமுமா யிருந்ததால் ஓடுவதற்குச் சௌகரியமாயிருந்தது. கான்ஸ்டேபில்கள் அதி வேகமாக ஓடினார்கள். எமகாதகன் சுற்றி சுற்றி ஓடினான். கான்ஸ்டேபில்கள் கிட்ட நெருங்குகிற சமயம் எமகாதகன் திடீரென்று கீழ் விழுந்து குப்புறப் படுத்துக்கொண்டான். சேவகர் இவ்விதம் நடக்காது என்றெண்ணி வெகு வேகமாய் ஓடிவந்தவர்களாதலால், திடீரென்று நிற்க முடியாமல், எமகாதகனை மிதித்தவர்களும மிதிக்காதவர்களுமாய் ஓடி அரை பர்லாங்கு தூரத்திற்கு ஒவ்வொருவராய் நின்று திரும்பி ஓடிவந்தார்கள்.

எமகாதகனிப்போது எழுந்து அவ் வீட்டிற்கே திரும்பி ஓடிவந்து, மெத்தையிலிருந்து, மழை நீரை கீழ்க்கொண்டு வரும் குழாவழியாகவே சரசர வென்றேறி மேல் மெத்தை

யான நாலாவதடுக்குக்குச் சென்று, இவர்களைப் பார்த்து பரிகாசம் பண்ணிச் சிரித்தான்.

சார்ஜண்டு கோபங்கொண்டு தன் துப்பாக்கியால் சுட்டான். எமகாதகன் வெகு அலட்சியமாய், பக்கத்தில் தாண்டி வீட்டிற்குள் இறங்கி, சர சரவென கீழ் தளத்திற்கு வந்தான். இரண்டாவது அடுக்கின் முடிவிற்கு வந்ததும், கீழ் தளத்தில் சேவகரும், சார்ஜண்டும், வெகு சமீபத்தில் வருவது கண்டு, அங்கொரு பக்கத்திலிருந்த உருவம்போல் இரண்டாந்தள படிக்கட்டு முடிவின் மற்றொரு பக்கத்தில் சட்டென தானும் மற்றொரு உருவம்போல் அசையாமல், கை தூக்கி, உடல் நெளித்தபடி அசைவற்று நின்றான்.

வேகமாய் மேல் தளத்திற்கு இவனைப் பிடிக்க ஓடின வர்கள், இவன் இருப்பதைக் கவனிக்காமல் எல்லோரும், ஆவலாய் மேல் மெத்தைக்கே ஓடிவிட்டார்கள். எமகாதகன் கொஞ்ச மிறங்கி கீழ் தளத்திற்குச் சுமார் இருபத்தைந்து அடி உயரத்தில் இருக்கும் ஒரு சிறு தாழ்வாரத்திற் போய் அங்கிருந்து கீழேபோகப் பார்த்தான். முடியவில்லை. கீழே சில கான்ஸ்டேபில்கள், இவனைப் பிடிக்கத் தயாராய் இருந்தார்கள். மேலேறினவர்கள், இவனைக் காணுமல் ஆச்சரியப்பட்டு போனவழியே திரும்பி ஓடிவந்து, இவனைக் கண்டு, பிடிக்க நெருங்கினார்கள்.

பாவம், என்ன செய்வான் எமகாதகன். இரண்டு பக்கத்திலும் ஓடமுடியவில்லை. மேலேயும் கான்ஸ்டேபில், கீழேயும் கான்ஸ்டேபில், இடதுகை பக்கத்திலுள்ள படி கட்டிலும் கான்ஸ்டேபில். ஓட வழியில்லை. நெருங்குகிறார்கள்.

எமகாதகன் சட்டென்று வலது பக்கத்தில் நீளமாக விடப்பட்டிருந்த மறைவு திறையைத் தாவிப் பிடித்துக் கொண்டு சருக்கினபடியே, திரைக்குள் ஒரு விணுடியிலிறங்கி

ஓடிவிட்டான். இவன் ஓட வழியில்லை, எப்படியும் அகப் பட்டுக்கொள்வான், என்று அலட்சியமாக இருந்த பிடிக் கும் கூட்டம், இவன் இப்படி தப்பினது கண்டு, ஆச்சரியப் பட்டு மீண்டும் ஒன்று சேர்ந்து ஓடிவந்து, சுருட்டித் தொங்க விடப்பட்டிருந்த அத்திறையை, வெகு ஜாக்கிரதையாக நீக்கி சோதித்துப் பார்த்தார்கள். ஐயோ பாவம், ஏமாந் தார்கள். காணவில்லை. எல்லோரும் கோபங்கொண்டு, ஒரே ஓட்டமாய் இவனைத் தேடிக்கொண்டு ஹாலுக்கு ஓடிவந்தார் கள். அங்கு தொங்கவிடப்பட்டிருந்த ஒரு திறையின் அடி யில் இரண்டு பூட்ஸ்கால்கள் தெரிந்தன. அதை முதலில் கவ னித்த சார்ஜண்ட், எல்லாரையும் நிறுத்தி அதை உற்று கவனித்தார். பூட்ஸ்காலுக்கு மேல், மனிதனைப்போல் முட்டையாய் இருந்தது. எமகாதகன் தான் ஒளிந்திருக்கிறு னென்று, சந்தடி காட்டாமல் ஒருவர் நீட்டு கத்தியை உருவி பலமாகக் குத்தினர். உருவத்தின் மத்தியில் காலில் சார் ஜண்ட் சுட்டார். மெதுவாக திறந்துபார்க்க, வெறும் இரண்டு பூட்சுகளும் ஒரு தலையணியாக நிற்க வைத்திருந்தன.

கான்ஸ்டேபில்கள் சலிப்புகொண்டு, கோபமாய், வீட் டின் பின் கட்டிற்கு வர, அங்கொரு கான்ஸ்டேபிலை கையும் வாயும் கட்டி உருட்டி இருந்தது. வந்தவர்கள் அவனை என்ன வென்று விசாரிக்க, எமகாதகன் இப்படி வந்தான், நானும் பின்னலேயே வந்தேன், என்னைத் தாக்கி, இப் படிக் கட்டிவிட்டு, பூட்ஸைப் பிடுங்கிக்கொண் டோடிவிட் டான் என்றுன். வந்தவர்கள் திரும்பியும், அவனைப் பிடிக் கத் தேடி ஓடினர்கள்.

அவன் அவ்வீட்டின் உத்யானவனத்தைச் சார்ந்த ஸ்னன அறைக்குள் (அவ்வறை சுமார் 50 அடி அகல நீளமுள்ளது. மார்பளவு தண்ணீர்விட்ட ஒரு சிறு குளமும், அவ்வறைக்குள் கட்டப்பட்டிருந்தது) போவதைக்கண்டு

தாங்கள் அவனைப் பிடிக்க, குறுக்கு வழியானதும், ஸ்திரீகள் போகும்படியானதுமான, ஒரு சந்து வழியாக எல்லோரும் அவ்வறைக்கு ஓடி வந்தார்கள். அவ்வழி ஸ்னுன அறையில் முடிவாகிறது. அது, அவ்விடத்தில் ஒருவர்தான் குனிந்து உள் செல்லவும், வெளிவரும்படியுமாக நான்கடி அகல நிகளம்தான் இருந்தது. அந்த வழி முடியுமிடத்திற்கும் தண்ணீர் குளத்திற்கும் இடையில் மூன்றடிதான் இருந்தது. சாதாரணமாக அவ்வழி வந்து, அங்கு உட்கார்ந்தபடி குளத்தில் குதிக்கலாம்.

குளத்தின் புறமாய், வழிமுடிவின் வாயிற்படிக்கு பக்கத்தில், எமகாதகன் ஒரு தடியொன்று வைத்துக்கொண்டு தயாராயிருந்தான்.

கான்ஸ்டேபில்கள் ஒருவர் ஒருவராய், குனிந்தபடி அவ்வழியைத் தாண்ட ஆரம்பித்தார்கள். எமகாதகன், அவ்வாசற்படி பக்கத்திலிருந்து வருகிற ஒவ்வொருவரையும், கைத்தடியால் காலை இடறிவிட்டுக்கொண் டிருந்தான். பின் வருகிறவர்களுக்கு முன் நடப்பது தெரியாமல் குனிந்து குனிந்துபோய் இடறி தண்ணீரில் விழுந்து நனைந்தார்கள். மனிதனுக்கு கழுத்தளவு தண்ணீரே அக்குளத்திலிருந்தது.

தண்ணீரில் விழுந்தவர்கள், எமகாதகன் செய்வதைப் பார்த்து, அவனைப் பிடிக்க, மேலேறப் போனார்கள். அச்சமயம், மேல் ஏறினால், உங்களைச் சுட்டுத்தள்ளுவேன்; உயிர் பிழைக்கவேண்டுமானால் அப்படியே இருங்கள். என்று ஒரு சப்தம் பின்புறம் கேட்டது.

திரும்பிப் பார்த்தார்கள். அங்கொரு பெண்பால், இரண்டு கையிலும் கைத்துப்பாக்கியை நீட்டினபடி, வெகு தைரியத்துடன் நின்றுக்கொண் டிருந்தாள். கான்ஸ்டேபில்கள், ஏற முயற்சிப்பதை விட்டு விட்டு, தண்ணீரில் நின்று

தவம் செய்பவர்களைப்போல் கைகால் அசையாமல் அவதிப்பட்டுக்கொண்டிருந்தார்கள். சேவகனில் ஒருவன், ஆஹா! இவள் இவ்வீட்டு உபாத்தியாயனி, இவளும் இத்திருடனுக்கு உதவி செய்கிறாள். இதோ இவளைப் பிடித்துக் கொள்கிறேன் என இறைந்துக் கொண்டே மேலேற முயன்றான்.

உடனே அவன் பக்கத்தில் ஒரு குண்டு ரிவ்வென்று பாய்ந்தோடிற்று. ஏறினவன் தண்ணீர்க்குள் முழுகி எழுந்தான். உம் ஜாக்கிரதை, என கனைத்துக்கொண்டே மரகதவல்லி சொன்னாள். தண்ணீரில் விழுந்தவர்களை மரகதவல்லி மேலேற வொட்டாமல் துப்பாக்கியால் பயமுறுத்திக் கொண்டிருந்தாள். எமகாதகன் வருகிறவர்களையெல்லாம் தட்டிவிட்டு, தண்ணீரில் தள்ளிக்கொண்டிருந்தான். கடைசியாக வந்த சார்ஜண்டை, ஒரு அறை கொடுத்துத் தண்ணீரில் தள்ளினான்.

எல்லோரும் வந்துவிட்டதும், குளத்தைத் திரும்பிப் பார்த்தான். வேலைக்காரரும், கான்ஸ்டேபில்களுமாகச் சேர்ந்து ஏறக்குறைய ஐம்பது பேருக்குமேல், தண்ணீரில், தவளைபோல் தவித்துக்கொண்டிருந்தார்கள்.

அவர்களைப் பார்த்து எமகாதகன், என்னைப், பிடிக்க இவ்வளவு நபர் வந்தீர்கள், முடிந்ததா ? உங்களெல்லோரையும் நான் பிடித்துவிட்டேன். இது முதல் தடவையாத லால், உங்களைத் தப்பவிட்டேன். இன்னொருதரம் என்னைப் பிடிக்க வந்தால், உங்கள் உயிரை வாட்டிவிடுவேன், என்று சொல்லிவிட்டு, தன் மனைவியை அருகில் அழைத்து, துப்பாக்கியை தான் வாங்கி, அவர்கள் பக்கம் நீட்டினபடியே, அங்கிருந்த கம்பியில்லா ஜன்னலை மனைவியைத் திறக்கச்சொல்லி, அதன் வழியாக வீட்டிற்கு வெளியில் மனைவியை இறங்க வைத்து, தானும் இறங்கினான். துப்பாக்கி,

தங்களை நோக்கியே, பிடித்துக் கொண்டு இறங்குகிறதால், குளத்திலிருப்பவர்கள் யாரும் முன்னேறத் துணியவில்லை. அவசரமாக ஒருவன் ஏறி ஜன்னலண்டை ஓடிவந்தான். ஜன்னல் திறையால் தன் தலையை மூடியிருந்த எமகாதகன், சட்டென தலையை நீட்டி, துப்பாக்கியால், ஓடிவந்தவனை நோக்கிக் காட்டி, உம், ஜாக்கிரதை, என்றான். வந்தவன், ஓ, இல்லை. இல்லை. நான் வரவில்லை, சுடவேண்டாம், சுடவேண்டாம், என்று அலறிக்கொண்டே பின்னாலேயே நடந்து போய் குளத்தில் விழுந்தான். எமகாதகன் புன் சிரிப்புடன் பின்னும் திறையால் தன் தலையை மறைத்துக் கொண்டு துப்பாக்கியை மாத்திரம் அவர்கள் பக்கம் நீட்டி வைத்தான்.

சுமார் அரைமணி நேரமாயிற்று. துப்பாக்கி முனை தங்களை நோக்கி இருப்பதால் ஒருவரும் மேலேறவில்லை. அரைமணி நேரமாக துப்பாக்கி நீட்டப்பட்டும் இப்போது அது அசையாமலு மிருப்பதால், அதிலொருவன் சற்றுத் தைரியம் கொண்டு சந்தடி காட்டாமல் ஏறி, மெதுவாக கிட்ட வந்து, துணிந்து வெடுக்கென்று அத் துப்பாக்கியைப் பிடுங்கினான். அத்துப்பாக்கி - குதிரை அத்திறைநாடாவில் சொருகப்பட் டிருந்ததால் அத்திறையோடு அறுந்துக் கொண்டு வந்தது. அதைக் கண்ட யெல்லோரும் அருகில் வந்து, கோபமும் வெட்கமுமடைந்து, சலிப்புடன் திரும்பி, போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று, தலைமை போலீஸ் அதிகாரியிடம் நடந்ததைச் சொல்லி, இனிமேல் தங்களால் அவனைப் பிடிக்கமுடியாது என சலிப்புடனுரைத்தனர்.

மறுநாள் தணிகாசலம் பிரபு, தான் எவ்வளவோ ஜாக்கிரதையாக தன் பணத்தை இரும்புப் பெட்டியில் வைக்காமல், எமகாதகனை ஏமாற்றிவிட, தன் கையிருப்பு நோட்டுகளை, யாருக்குந் தெரியாமல், நெல் களஞ்சி

யத்தினுள், புகுத்திவைத்திருந்தார். அது பத்திரமாயிருக்கு மென்று திடமுடன் மறுநாள் எடுத்துப் பார்க்கும்பொழுது, இரண்டுலட்சம் ரூபாய் காணவில்லை. உடனே போலீசுக்குத் தெரிவித்தார்.

போலீசார், எமகாதகனுடைய சாமர்த்தியத்திற்கு மெச்சி சந்தோஷம் கொண்டாலும், அவனைப் பிடிக்க முடியவில்லையே என்ற வருத்தம் கோபமாக மாறி இருந்தது.

எமகாதகனைப் பற்றி ஜனங்கள் கேள்விப்பட்டு மாதம் ஆறாகியது. பணக்காரர்கள் ஒருவாறு நிம்மதியடைந்திருந்தார்கள்.

ஒரு நாள் எல்லாப் பத்திரிகைகளிலும் அடியில் கண்டபடி இருந்தது.

சென்ற வருஷத்திலிருந்து, ஏழைகளுக்கு அன்னதான வஸ்திர தானம் செய்தவரும், காங்கிரஸ் ஸபைக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் தர்மஞ் செய்தவரும், தென்னாட்டு வெள்ளச் சேதத்திற் குதவிபுரிய லட்சம் ரூபாய் இனாமளித்தவரும், கோஹட் ஹிந்து முஸ்லீம், கலக நிவாரணத்திற்காக பதினாயிரம் ரூபாய் உதவி புரிந்தவரும், கவர்ன்மெண்டு கல்வி அபிவிருத்திக்காக இரண்டு லட்சம் ரூபாய் தானம் செய்தவரும், அன்னதான சமாஜம் கட்ட சுமார் ஐம்பதினாயிர ரூபாய் நன்கொடை அளித்தவரும், ஆதித்திராவிடர்களுக்கோர் வைத்யசாலை ஸ்தாபிக்க, சுமார் லட்ச ரூபாய், மூலதனமாக நன்கொடையளித்த புண்ணியவானுமான தர்மகர்த்தா யாரெனத் தெரியவில்லை. இவ்வளவு தர்மஞ் செய்தும், அவர் பெயர் வெளியில் தெரியவில்லை. தயவுசெய்து அவர் பெயரை இப்பத்திரிகை வாயிலாக விலாசத்துடன் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது. அவருக்கு கவர்னர், பட்டப்

பெயர் கொடுத்து பெருமைப்படுத்த எண்ணங்கொண்டுள்ளார். இரண்டு தினத்தில் கொண்டாடப்போகும், அரசர் பிறந்ததினக் கொண்டாட்ட விழாவுக்கு கவர்னர் மாளிகைக்கு அவரையும் வரும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது என்று பிரசுரிக்கப்பட்டது.

இதைக் கண்ட எமகாதகன், பெயரை பேபர் வாயிலாகப் பிரசுரிக்காமல், இரண்டாம் நாள், அரசன் பிறந்த தினகொண்டாட்ட வைபவத்தின் போது, தான் அதிக மரியாதையாய் உடுத்திக்கொண்டு, கவர்னர் மாளிகைக்குச் சென்று, கவர்னரைக் கண்டு, தான் தான் அத்தர்மகர்த்தாவென்று, வெளிப்படுத்தினன். கவர்னர், மஹா சந்தோஷப்பட்டு, அப்பெரிய சபையில் நீண்டதொரு பிரசங்கம் இவரைப்பற்றி செய்து 'ராவ்பஹதூர்' என்று தவமணி முதலியாருக்கு டைடில் கொடுத்தார். சபையோர் கரகோஷம் செய்தார்கள்.

அச்சமயம், போலீஸ் தலைவர் இவரை எப்படியோ தெரிந்துக்கொண்டு, கவர்னரிடம், இவர்தான் எமகாதகனெனப் பட்டவர். இவருக்கு அரஸ்ட்டுவாரண்டு இருக்கிறதென்றும், சொன்னர். கவர்னர், அவரை அமர்த்தி, ராவ் பஹதூர் தவமணி முதலியாரைக் கூப்பிட்டு இதைப்பற்றி ரகஸ்யமாகச் சொன்னர்.

முதலியார், உடனே சகலரும் அறிய, நீண்டதொரு பிரசங்கம் செய்தார். என்னுடைய பதினெட்டாவது வயது வந்ததும் எனக்குத் தேசபக்தியும், ஏழை ஜனங்களிடம் பிரியமும் ஏற்பட்டு, தேசத்திற்குதவி செய்யவும், ஏழை மக்கட்குதவி செய்யவும் எண்ணங் கொண்டேன். கையில் பணம் வைத்துக்கொண்டு தர்மஞ் செய்யாதவர்பால் எனக்கு வெறுப்பு தோன்றியது. அவர்களை நேரில் கேட்டால் கொடுக்கமாட்டார்களென்றும் தர்மஞ்செய்யாதிருப்ப

தின் பலன், என்னவென்று அவர்கள் தெரிந்துக்கொள்ளும் பொருட்டு, நான் இவ்விதம் செய்து பணத்தைச் சேர்த்து தானம் செய்து வைத்தேன். என் பொருட்டு, யான் ஒன்றும் வைத்துக்கொள்ளவில்லை. என் தந்தையின் கைக் குட்பட்டிருக்கும் என் சொத்தையும் நான் கூடிய சீக்கிரம் தானஞ் செய்யப்போகிறேன். ஆகையால் என்மீது குற்ற மில்லை என்பது எனது அபிப்பிராயம். அப்படி குற்ற மென்று என்னைத் தண்டித்தாலும், தேசத்திற்காகவும் ஏழை ஜனங்கட்காகவும், அத்தண்டனையை ஏற்றுக்கொள்ள நான் தயாராயிருக்கிறேன்.

இதைக் கேட்ட சபையோரும், கவர்னரும், உம்மீது குற்றமில்லை. நீர் தர்ம குணமே உடையவர். உம் சாமர்த்தியத்திற்காக நான் அதிகம் மெச்சுகிறேன். உமக்கு இந்நகரின் ஷெரீப் உத்தியோகம் கொடுக்க தீர்மானித் திருக்கிறேன். நீர் அடுத்த மாதத்திலிருந்து அவ் வுத்தியோ கத்தை ஏற்றுக்கொண்டு, சரிவரக் காப்பாற்றி பேரும் புகழும் பெறுவீரென்று நினைக்கிறேன், என்று கூறி முடித்தார்.

சபையோர் பலத்த கரகோஷம் செய்து ஆரவாரித்தார் கள்.

மறு மாதம், ஷெரீப் உத்யோகத்தை ஏற்றுக்கொண்டு, புத்தூரிலேயே தங்கிவிட்டார் நம் எமகாதக னென்னும் ராவ்பகதூர் தவமணி முதலியார். இதைப் பெண்ணின் பெற்றோர்களும், தவமணியின் பெற்றோரும் கேள்விப்பட்டு, தவமணியை வந்து கண்டு, மகிழ்வெய்தி "ஈன்றபொழு திற் பெரிதுவக்கும், தன் மகனைச் சான்றோனெனக் கேட்ட தாய்," என்றபடி, அளவிலா ஆனந்தத்துடன், தங்கள் சொத்துக்களை, புதுவையிலேயே தர்மத்திற்கெழுதி வைத்து விட்டு, எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து அகமகிழ்ந்திருந்தார் கள்.

சுமார் ஒரு மாதம் சென்று, சமரபுரி சண்முகம், இவரிடம் வந்து ஆங்கிலத்தில் பிழையில்லாது பேசி, தான் அந்த 'ஆங்கிலபோதினி' என்ற புத்தகத்தைப் படித்தே, இவ்வளவு முன்னுக்கு வந்ததாகவும், தனது ஊர் பள்ளிக் கூடத்து பிள்ளைகட்கும், அப்புத்தகத்தையே படிக்க ஏற்பாடு செய்திருக்கிறதாகவும் சொல்லிச் சென்றான்.

வாசக நண்பர்களே! கதாநாயகனின் அம்சங்கள் சிலதை முடிவுரையாகக் கவனிக்க வேண்டும். தவமணிக்கு ஈகைக் குணமாதலால், அவன் பணக்காரரிடம் பணம் பெறுதல்பொருட்டு அவர்களைக் கஷ்டப்படுத்தி வாங்கினனே அன்றி ஏழைகளை யாதொரு கஷ்டமும் படுத்தியதில்லை. எவ்வளவு ஆபத்து சாமர்த்திய செயல்களிலும், ஒரு பிராணியையாவது, உயிரிழக்கும்படி செய்யவில்லை. முக்கியமாக நம் பாரத ஸ்திரீகளுக்கு, மாகதவல்லிபோல் கற்பின் உறுதியும், ஆண்பிள்ளைகளைப்போல் தைரியமும், வீரத்தன்மையும் உண்டு என்பதையும், தர்மஞ் செய்தலே நம்கடமை என்று அறியாத தனிகர் படும் பாடு இன்னவிதமென்றும், தேசத்திற்கும் தேச ஜனங்களுக்கும் நன்மை செய்தலே நலமென்பதையும், எவ்வளவு ஆபத்துக்களையும் சாமர்த்தியத்தால் வெல்லலாமென்பதையும், தர்ம குணமிருந்தால் அவர்க்கு ஆபத்து ஒன்றும் செய்யாதென்பதையும், இக் கதை வாயிலாக நன்றாகத் தெரிந்து கொள்வோமாக.

இந்நாவலை மனமுவந்து, வெகு சீக்கிரம் அச்சிட்டு, என் மன விருப்பத்தையும் சிரம பரிகாரத்தையும் நிறைவேற்றி வைத்ததற்காக, எனது நண்பர் தி. இராஜகோபால் முதலியாருக்கு, என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

எமகாதகன் முற்றும்.

---

P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS

புதியதாக வெளிவந்த நாவல்

# மாணிக்கவல்லி

அல்லது

## ஒரு மாதின் மர்மம்

இது நவரசங்கள் பொருந்திய ஒரு செந்தமிழ் நாவல். இது வாசிப்பவர்களுக்கு அருவருப்பையே உண்டாக்காத ஒரு நவீன நாவல். இது எத்தனை தடவை படித்தாலும் திகட்டவே திகட்டாது. இது சிங்கார ரசமாயும், படிப்பவர் மனதிற்கு மிக்க உற்சாகத்தைக் கொடுக்கும் தன்மையதாயு முள்ளது. இந்த நாவலில் கதாநாயகியாக வரும் மாணிக்கவல்லி என்னும் ஓர் அழகிய பெண்ணானவள், ஓர் நாடக சாலையில் சேர்ந்து பல நாடக விஷயங்களில் பிரக்யாதி பெற்றவளாயும், ஆடல் பாடல் முதலிய விஷயத்தில் நற்கியாதி பெற்றவளாயும், இம்மாதின் ஆடல் பாடல் கேட்க வரும் பிரபுக்களுக்கு மிக்க ஆநந்தத்தைத் தருவதும், அவளுடைய சௌந்தரியத்துக்கும் நடை நொடி பாவனைக்கும் மெச்சி நாடகம் பார்க்கவரும் பிரபுக்கள், ஒருவருக்கொருவர் தெரியாமல் இம் மாணிக்கவல்லியின் மீது காதல் கொள்வதும், அவளால் வெறுத்துத் தள்ளப்பட்ட ஒருவன் செய்யும் சூதும், கதாநாயகி மாணிக்கவல்லியின் விசனமும், அவளைக் காதலிக்கும் புருஷர்களின் தந்திரமும் படிக்கப் படிக்க இனிமையாக இருக்கும். இக்கதையை வாசிக்கும் சகோதர சகோதரிகளுக்கும், ஓர் நாடகத்தையே நேரில் பார்த்ததைப்போலத் தெரியவரும். இப்புத்தகத்தின் விலை ரூபாய் 1—0—0. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.

தி. இராஜகோபால் முதலியார்,

நெ. 259, தங்கசாலை வீதி,

சென்னை.

எங்களிடத்தில் ருசிகரமான தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும், வேதாந்த புஸ்தகங்களும், சைவ புராணங்களும் கிடைக்கும். தேவையுள்ளவர்கள் எழுதினால் நாங்கள் புஸ்தகங்களைப் பார்வையிட்டு நல்லதாக அனுப்புகிறோம்.

# எமது சொந்தப் பிரசுரங்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஆங்கில ஆசான் அல்லது ஆங்கில போதினி ... | 2 | 0 |
| அங்கயற்கண்ணி அல்லது அன்புள்ள மங்கை ... | 1 | 12 |
| திருக்கழுக் குன்றத்துக் கொலை ... | 1 | 8 |
| அமிர்தகுமாரி அல்லது செஞ்சிப் புதையல் ... | 1 | 4 |
| அம்பலவாணன் அல்லது கற்பகவனத்தில் நடந்த கடுங்கொலை ... | 1 | 0 |
| 1000 தலைவாங்கிய அதிசய சிந்தாமணி ... | 1 | 0 |
| மாணிக்கவல்லி அல்லது ஓர் மாதின் மர்மம் ... | 1 | 0 |
| இரத்தினங்கி அல்லது இரதிவிலாச மர்மம் ... | 1 | 0 |
| எமகாதகன் அல்லது மாயாஜித்தன் ... | 0 | 8 |
| நவீன நவரத்ன ஒப்பாரி ... | 0 | 5 |
| கண்ணைக் கட்டிக் காலங் கழிக்கும் மிஸ்டர் திண்ணைத் தூங்கி த்டிராமன் ... | 0 | 5 |
| மாமிகளின் துயரம் அல்லது மருமக்களின் கொண்டாட்டம் ... | 0 | 2 |
| காதலற்ற கல்யாணம் அல்லது பெண்வீட்டாரைக் கொள்ளையடித்தல் ... | 0 | 1 |

குறிப்பு:—இவை அனைத்தும் எமது சொந்த பிரசுரமானபடியினால் புஸ்தக வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்படும். இன்னும் பலவிதமான சாமான்களும் ஏனைய புஸ்தகங்களும் எமது கம்பெனியில் கிடைக்கும். தேவையுள்ளவர்கள் எமது கம்பெனிக்கு எழுதினால் அனுப்பப்படும்.

T. இராஜகோபால் முதலியார்,

259, தங்கசாலை வீதி, மின்ட் பில்டிங் போஸ்ட், மதராஸ்.

எமது லேடி டிரேட் மார்க் போட்டிருக்கும்
புஸ்தகம் பார்த்து வாங்குங்கள்!!

# ஆங்கில ஆசான்

அல்லது

# ஆங்கில போதினி

(4-ம் பதிப்பு)

கொஞ்சம் பிரதிகளே
இருக்கின்றன.
ஆர்டருக்கு முந்துங்கள்
60 நாளையில் இங்கிலீஷ்
கற்றுக் கொள்ளலாம்
குறைந்த விலை!
அபரிமிதமான விஷயங்கள்!!
தமிழ் எழுத்துக்களை வாசித்தால் இங்கிலீஷ் பதங்களை உபாத்தியாயரில்லாமல் தெரிந்து கொண்டு இங்கிலீஷ் பேசவும், படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்ளலாம்.

விலை ரூபா 2

தபால் சார்ஜ் அணா 8 பிரத்யேகம்

பினங்கு சிங்கப்பூர் தேசங்களிலிருந்து முன் பணம் அனுப்பினால் தான் புஸ்தகம் அனுப்பப்படும். கவனிக்கவும்.

கேட்லாக் இனாம்.

ஸ்ரீ இராஜகோபால் முதலியார்,
259, தங்கசாலை தெரு,
மிண்ட் பில்டிங் போஸ்டு, மதராஸ்




P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS.